

tamilnesan1981.blogspot.com

# பூவில் செய்த ஆயுதம்

ராஜேஷ்குமார்





# பூவில் செய்த ஆயுதம்!

**ராஜேஷ்குமார்**



யாழினி, தன் அழகான இரண்டு புருவங்களையும் சில மில்லிமீட்டர் அளவுக்கு உயர்த்தி, டாக்டர் உமையாளை ஏறிட்டாள். குரலில் டன் டன்னாய் வியப்பு.

டாக்டர்! நீங்க சொல்றது சாத்தியம்தானா?"

சாத்தியம்தான்!"

நம்பமுடியலையே!"

அந்த ஐம்பது வயதான டாக்டர் உமையாள், ஒரு புன்முறுவலைத் தன் உதட்டில் தவழ விட்டபடி நிதானமான குரலில் பேச ஆரம்பித்தாள்.

மருத்துவமும் விஞ்ஞானமும் போட்டி போட்டுகிட்டு வளர்ந்துட்டு இருக்கிற இந்த 2014-ல எல்லாமே சாத்தியம்தான். ஒவ்வொரு நாளும் ஏதாவது ஒரு சின்ன சாதனையோடு பிறந்துட்டுதான் இருக்கு. இதுல ஒரு சாதனையை இன்னொரு சாதனை முறியடிக்கிற அதிசயங்களும் நடக்கிறதுண்டு."

இருந்தாலும் ஒரு பெண்ணுக்கு இனிமேல் பிரசவ வலி என்பதே இருக்காது என்பதும், பிரசவ வலி கொஞ்சமும் இல்லாமல் ஒரு குழந்தையைப் பெற்றுக் கொள்ளலாம் என்கிற விஷயமும் ஜீரணிக்க கஷ்டமாய் இருக்கே டாக்டர்."

உமையாள் சிரித்தாள். இந்த அஜீர்ணம் எனக்கும் இருந்தது. சாத்தியமே இல்லைன்னு என்னோட சீனியர் டாக்டர்கள்கிட்டே சண்டையே போட்டேன். அது எப்படி சாத்தியம்னு அவங்க விளக்கி சொன்ன பிறகு ஒருநாள் பூராவும் ஆச்சர்யப்பட்டு ஆச்சர்யப் பட்டு அலுத்துப் போயிட்டேன்!"

இப்ப நீங்க சொல்லுங்க டாக்டர்... அது எப்படி சாத்தியம்?"

இந்த வலியில்லாத பிரசவத்துக்குப் பெயர் எபிடியூரல் டெலிவரி. அமெரிக்கா, ஜெர்மனி போன்ற நாடுகளில் ரொம்பவும் பிரசித்தம். ஒரு பெண்ணுக்கு பேறுகாலம் நெருங்கி பிரசவ அறிகுறிகள் தென்பட்டவுடனேயே அவளுடைய முதுகுத் தண்டுவடத்தின் மேற்பகுதியில் நடுவில் ‘எபிடியூரல்’ என்கிற ஒரு சிறிய மெடிக்கல் டிவைஸை ஃபிக்ஸ் பண்ணிடறாங்க. அதுக்குப் பிறகு அந்த டிவைஸைச் சுற்றிலும் ‘ஆன்ட்டி செப்டிக்’ ப்ளுயிட்டை ஸ்ப்ரே செய்து ஒருக்களித்து படுக்க வெச்சுடறாங்க.



எபிடியூரல் டிவைஸ் பொருத்தப்பட்ட பிறகு எழுந்து நடமாட முடியாது. கனம் தெரியாத அளவுக்கு கால்கள் மரத்துப் போகும். பிரசவ நேரம் நெருங்கியதும் எபிடியூரல் வேலை செய்ய ஆரம்பிக்கும். ஒவ்வொரு தடவையும் கருப்பை சுருங்கி விரிந்து, குழந்தை நெகிழ்ந்து இறங்கி வெளியே வரும்போது வலி என்பது ஒருதுளிகூட தெரியாது. அடுத்த சில நிமிடங்களுக்குள் எபிடியூரல் டிவைஸ் தன் செயல்பாட்டை நிறுத்திவிட பிரசவித்தப் பெண்ணின் உடல்நிலை சகஜமான நிலைமைக்குத் திரும்பும். தாயும் சேயும் நலம்."

ஃபெண்டாஸ்டிக் டாக்டர்! இந்த எபிடியூரல் டெலிவரி ட்ரீட்மெண்ட் நம்ம இந்தியாவுக்கு எப்போ வரும்?"

வந்துகிட்டேயிருக்கு...!" உமையாள் சொல்லி சிரித்துக் கொண்டிருக்கும்போதே யாழினியின் கைப்பையில் இருந்த செல்ஃபோன் ரிங்டோனை மெலிதான டெஸிபிலில் வெளியிட்டது. எடுத்து அழைப்பது யார் என்று பார்த்தாள்.

எடிட்டர் பர்வதவர்த்தினி.

உமையாளை ஏறிட்டாள் யாழினி.

எக்ஸ்க்யூஸ்மி டாக்டர். லைன்ல நான் வேலை செய்யற பத்திரிகையோட எடிட்டர்!"

என்ன யாழினி! டாக்டர் உமையாள்கிட்டே பேட்டி முடிஞ்சுதா...?"

கிட்டத்தட்ட முடிச்சாச்சு டேம். இன்னும் இரண்டொரு கேள்விதான்..."

மேட்டர் சாயந்திரம் அஞ்சு மணிக்குள்ளே வேணும்."

குடுத்துடறேன் மேடம்."

போன தடவை மாதிரி லேட் பண்ணிடாதே."

இந்தத் தடவை லேட்டாகாவது மேடம்..."

யாழினி...!"

மேடம்...!"

நானும் கவனிச்சுட்டுதான் வர்றேன். நீ ஒரு மாசமாவே சரியில்லை. உனக்கு என்ன பிரச்னை?"

ஒரு பிரச்னையும் இல்லை மேடம்."

நம்ம 'பூச்சரம்' பத்திரிகை பெண்களுக்கானது. மற்ற பத்திரிகைகளைக் காட்டிலும் தரத்திலேயும் விற்பனையிலேயும் முதல் இடத்துல இருக்கு. இந்த முதல் இடத்தை தக்க வெச்சுக்கணும்னா எல்லாமே சரியான நேரத்துக்கு நடக்கணும்."

புரியுது மேடம் ...!"

அஞ்சு மணிக்கு மேட்டரோடு வந்து என்னைப் பாரு...." மறுமுனையில் பர்வதவர்த்தினி செல்ஃபோனை அணைத்துவிட, யாழினியும் போனை ஆஃப் செய்து கைப்பைக்குள் போட்டுக்கொண்டாள்.

நீயும் அழகாய் இருக்கே. உன்னோட பேரும் அழகாயிருக்கு. உனக்கு சொந்த ஊர் எதுன்னு நான் தெரிஞ்சுக்கலாமா?"

ஸ்ரீரங்கம்."

ஊரும் அழகான ஊர்தான்...! அந்த ஊரை விட்டுட்டு இந்த சென்னைக்கு ஏம்மா வந்தே?"

பத்திரிகைத் துறையில் வேலை பார்க்கணும்ன்னு காலேஜ் டேஸ்லயிருந்தே எனக்கு ஆசை. அதுதான் ஜர்னலிஸம் படிச்சு முடிச்ச உடனேயே 'பூச்சரம்' பத்திரிகையில் ரிப்போர்ட்ரா ஜாய்ன் பண்ணிட்டேன்!"

உன்னோட ஃபேமிலியில் மொத்தம் எத்தனை பேர்?"

அப்பா உயிரோ இல்ல... நான், என்னோட அம்மா, எனக்கு கீழே ரெண்டு சிஸ்டர்ஸ். இரண்டு பேருமே காலேஜுல படிக்கிறாங்க. ஒருத்தி பி.ஈ. இன்னொருத்தி பி.காம்."

நீ ஏன் வேற வேலைக்கு முயற்சி செய்யக்கூடாது? உன்னை மாதிரியான அழகான படிச்ச பெண்களுக்கு நல்ல சாலரியில் வேலை கிடைக்குமே?"

நல்ல சாலரி கிடைக்கும் டாக்டர். ஆனா இந்த பத்திரிகைத் துறையில் கிடைக்கிற மனநிறைவும் சந்தோஷமும் கிடைக்காதே?" என்று சொல்லிச் சிரித்த யாழினி குரலைத் தாழ்த்தினாள். டாக்டர்! நான் உங்களை பேட்டி எடுக்கத்தான் வந்தேன். ஆனா இப்போ நிலைமை தலைகீழ். நீங்க என்னைப் பேட்டி எடுத்துட்டு இருக்கீங்க."

இது பேட்டியில்லை. ஓர் ஆர்வம்தான். சில பேரைப் பார்த்ததுமே மனசுக்குப் பிடிச்சுடும். அவங்ககிட்டே ஏதாவது பேசிகிட்டே இருக்கணும் போல் தோணும்."

அப்படின்னா... உங்களுக்கு பிடிச்சவங்க லிஸ்ட்ல நானும் இருக்கேன் எடுத்துக்கலாமா டாக்டர்?"

தாராளமாய்...! எனக்கும் உன்னோட வயசுல ஒரு பொண்ணு இருக்கா. பேரு ஸ்ருதிலயா. ரெண்டு வருஷத்துக்கு முன்னாடிதான் கல்யாணமாச்சு. மாப்பிள்ளை அமெரிக்காவின் மின்னிசோட்டா கார்டியாக் சென்டரில் டாக்டர். க்ரீன் கார்டு ஹோல்டர். பொண்ணும் அங்கேயே செட்டிலாயிட்டா. என்னோட நண்பர் நியூயார்க்கில் இருக்கிற பயோ ரிசர்ச் இன்ஸ்ட்யூட்டில் ஹெச்.ஓ.டி.யா இருக்கார். ரெண்டு நாளைக்கு ஒருதடவை 'ஸ்கைப்'ல பார்த்துக்குவோம். பேசிக்குவோம்.

வெளியில் இருந்து பார்க்கிறவங்களுக்கு என்னுடைய வாழ்க்கை ஒரு நிறைவான வாழ்க்கை மாதிரி தோணும். ஆனா எனக்குள்ளே இருக்கிறது பாலைவன வெறுமையும், ஆழ்கடல் நிசப்தம்தான். உன்னை மாதிரியான சமூக அக்கறையுள்ள பெண்களைப் பார்க்கும்போது மட்டும்தான் என்னோட மனக் கூண்டுல அடைபட்டு இருக்கிற சந்தோஷப் புறாக்கள் வெளியே வந்து பறக்கும்" பேசி முடிந்த டாக்டரை சில விநாடிகள் வரைக்கும் இமைக்காமல் பார்த்தாள் யாழினி.

என்ன அப்படிப் பார்க்கிறே?"

என்னோட சோகத்தைக் காட்டிலும் உங்க சோகம் ரொம்பவும் காஸ்ட்லி டாக்டர்!"

இட்ஸ் ஓ.கே. யாழினி! இனி உன்னோட பேட்டியைக் கண்டினியூ பண்ணு."

யாழினி அடுத்த கேள்வியைக் கேட்பதற்காக வாயைத் திறந்த விநாடி வேலைக்காரப் பெண்ணின் தலை கதவருகே தெரிய, உமையாளின் பார்வை அவள் பக்கமாய் திரும்பியது.

அந்த அட்சய் தம்பி உங்களைப் பார்க்க வந்திருக்கம்மா."

சரி, மேலே வரச்சொல்லு."

ஸாரி... யாழினி! ஒரு அஞ்சு நிமிஷம் பிரேக் எடுத்துக்கறேன். வர்ற பையன்... எனக்கு ரொம்பவும் வேண்டியவன். என்னோட ஹஸ்பெண்ட்டும் அட்சய்யோட அப்பாவும் பால்ய சிநேகிதர்கள். அட்சய் காரணம் இல்லாமே வரமாட்டான். இன்னிக்கு என்னைப் பார்க்க வந்திருக்கான். பேசி அனுப்பிடறேன்!"

நோ ப்ராப்ளம் டாக்டர்... நான் வேணும்ன்னா வெளியே போய் சிட் அவுட்ல வெயிட் பண்றேன்..." யாழினி எழ முயல உமையாள் கையமர்த்தினாள்.

நோ... நோ... நீ வெளியே போக வேண்டியதில்லை. இங்கேயே இருக்கலாம். அட்சய்யோட அம்மாவுக்கு கொஞ்சம் உடம்பு சரியில்லை. அது சம்பந்தமாய் ஏதாவது பேச வந்து இருப்பான். நீ உட்கார் யாழினி."

யாழினி மறுபடியும் நாற்காலிக்கு முதுகைக் கொடுத்த விநாடி அந்த அழகான இளைஞன் அறைக்குள் நுழைந்தான். சந்தன நிற ஸ்லாக் சர்ட்டும், கறுப்பு நிற பேண்ட்டும் அவனுடைய சிவப்பு நிறத்தைத் தூக்கலாய் எடுத்துக்காட்டியது. தலை கொள்ளாத முடியை சீப்பு அலட்சியப்படுத்தியிருந்தாலும் அந்த கலைந்த தலையும் அழகாகவே இருந்தது.

ஹாய் ஆன்ட்டி!"

வா... அட்சய்... உட்கார்!"

அட்சய் உட்கார்ந்தான். யாழினியை அவனுக்கு அறிமுகப்படுத்தியபின் உமையாள் கேட்டாள். நல்ல வெய்யில் நேரத்துல வந்திருக்கே... என்ன விஷயம்?"

அம்மா மாத்திரைகளை ஒழுங்காய் சாப்பிடறாங்களா?"

சாப்பிடறாங்க ஆன்ட்டி."

அது எப்படி உனக்குத் தெரியும்...? நீயும் சரி, உன்னோட அப்பாவும் சரி, காலையில எட்டு மணிக்கே கம்பெனிக்குப் போயிடுவீங்க. கோடிக்கணக்கான பணம் புரள்கிற பிசினஸில் இன்னிக்கு லாபம் எவ்வளவுன்னு பிசினஸ் க்ரா்ஃப்பை கோட்டை பார்த்துட்டு ராத்திரி பத்து மணிக்கு மேல் வீடு திரும்புவீங்க. நீ ஒரு அஞ்சு நிமிஷம் உன்னோட அப்பா ஒரு அஞ்சு நிமிஷம் எப்படியிருக்கேன்னு அந்த நோயாளி ஜீவனை விசாரிச்சுட்டு தூங்கப் போயிடுவீங்க.

உன்னோட அம்மா மாத்திரை சாப்பிடறதை என்னிக்காவது ஒரு நாளாவது ஒரு வேளையாவது நீ பார்த்து இருக்கியா?"

அது... வந்து... ஆன்ட்டி...."

நீ எதையும் சொல்லி பூசி மெழுகாதே! உனக்கும் சரி உன்னோட அப்பாவுக்கும் சரி பிசினஸ் டார்கெட்தான் முக்கியமே தவிர உன் அம்மாவோட ஆரோக்கியம் ஒரு பொருட்டே கிடையாது."

அப்படி சொல்லாதீங்க ஆன்ட்டி! நானும் அப்பாவும் அம்மாவை நல்லவிதமாய்த்தான் பார்த்துக்கிறோம். இருப தாயிரம் ரூபாய் சம்பளத்துல ஒரு ஹோம் நர்ஸைப் போட்டு..."

ஹோம் நர்ஸைப் போட்டுட்டா உங்க கடமை முடிஞ்சுதா?"

வேற என்ன பண்ணச் சொல்றீங்க ஆன்ட்டி?"

ஒரு கல்யாணத்தைப் பண்ணிக்க வேண்டியதுதானே? உனக்கு பெண்டாட்டியாய் வர்றவளாவது உங்கம்மாவைப் பார்த்துக்குவாளே?"

அந்த நல்ல காரியமும் நடக்கப் போகுது ஆன்ட்டி."

என்னடா... சொல்றே?"

எனக்கு வீட்ல பெண் பார்த்துட்டாங்க ஆன்ட்டி..." உமையாள் விழிகளை விரித்தாள். ரியலி... பொண்ணு யார்ரா?"

ஜெய்ப்பூர்ல அவங்க பெரிய ஃபேமிலி.. பொண்ணோட போட்டோவை உங்களுக்குக் காட்டிட்டு போகலாம்னுதான் இந்த மத்தியான வெயிலையும் பொருட்படுத்தாமே வந்தேன்."

மொதல்ல போட்டோவை எடு!"

அட்சய் தன் சட்டைப் பாக்கெட்டில் பத்திரப்படுத்தி வைத்திருந்த அந்த போஸ்ட் கார்ட் சைஸ் போட்டோவை எடுத்து உமையாளின் கையில் திணித்தான். அவள் வாங்கிப் பார்த்துவிட்டு அட்சய்யைப் பார்த்து கேலியாய்க் கண் சிமிட்டினாள்.

என்ன அட்சய்...! பொண்ணு உன்னைக் காட்டிலும் ரொம்பவும் அழகாய் இருப்பா போலிருக்கே?"

ஆன்ட்டி! இந்த நக்கல் வேண்டாம்ங்கிறது?"

இது நக்கல் இல்லை. உண்மையைத் தான் சொல்லிட்டிருக்கேன். உன்னைவிட பொண்ணு ஒரு படி தூக்கல்தான்!"

சரி! நீங்க சொல்றது சரியா தப்பான்னு தெரிஞ்சுக்க தேர்ட் அம்பயர்கிட்டே அப்பீல் பண்ணலாமா?"

தேர்ட் அம்பயரா... யாரது...?"

இதோ! கொஞ்ச நேரத்துக்கு முந்தி நீங்க எனக்கு அறிமுகப்படுத்தி வெச்ச மிஸ் யாழினிதான் அந்த தேர்ட் அம்பயர்."

இட்ஸ் ஓ.கே.! போட்டோவை யாழினிகிட்டே குடு! நான் சொன்னது சரியா இல்லையான்னு பார்த்துச் சொல்லட்டும்!"

'மிஸ் யாழினி! இந்தாங்க போட்டோ..." அட்சய் நீட்டிய போட்டோவைத் தயக்கத்தோடு வாங்கிப் பார்த்தாள்.

போட்டோவில் - யாழினியின் புன்னகை முகம்!



யாழினியின் விழிகளில் ஸ்லோமோஷனில் கலவரம் பரவியது. 'ஃபோட்டோவில் இருப்பது நான் தானா... இல்லை... என்னைப் போலவே இருக்கிற வேறு ஒரு பெண்ணின் ஃபோட்டோவா?'

இ...இ.. இந்த ஃபோட்டோவில் இருக்கிறது...?"

நீதான்..."

நானா...? நான் எப்படி...! ஏதோ ஜெய்ப்பூர்ல இருக்கிற ஒரு பெண்ணோட ஃபோட்டோன்னு சொன்னீங்க...?"

அட்சய் புன்னகையோடு குறுக்கிட்டான். என்னோட மனசுக்குப் பிடிச்ச பெண், எந்த ஊரில் இருக்கிறாளோ அதுதான் எனக்கு ஜெய்ப்பூர்."

ஸாரி...! நீங்க பேசறது எனக்குப் புரியலை..."

புரியும்படியாவே சொல்லிடறேன்... நான் கல்யாணம் பண்ணிக்க விரும்பற பெண் நீங்கதான்...! போன வாரம் டாக்டர் ஆன்டியைப் பார்த்து பேட்டிக்கான அப்பாய்ன்மென்ட் டேட்டை வாங்கிட்டுப் போக இந்த வீட்டுக்கு நீங்க வந்திருந்த போதுதான் நான் முதல் தடவையாய் உங்களைப் பார்த்தேன். பார்த்ததுமே மனசுக்குள்ள ஒரு ரசாயன மாற்றம். மறுபடியும் மறுபடியும் உங்களையே பார்த்துக்கிட்டு இருக்கணும் போல் ஓர் ஈர்ப்பு.

உங்களுக்குத் தெரியாமே உங்களை என்னோட செல்போனில் ஃபோட்டோ எடுத்துக்கிட்டேன்.

நீங்க போனதும் நான் டாக்டர் ஆன்ட்டிகிட்டே உங்களைப் பத்தின விவரங்களைக் கேட்டுத் தெரிஞ்சுக்கிட்டேன். என்னோட கல்யாண விருப்பத்தையும் சொன்னேன். ஆன்ட்டிக்கும் உங்களை மாதிரியே மொதல்ல அதிர்ச்சிதான். அப்புறம் அவங்க கன்வின்ஸாகி எனக்கு உதவி பண்றதாய் சொன்னாங்க. இன்னிக்கு நீங்க ஆன்ட்டியைப் பேட்டி எடுக்க வருவீங்கன்னு எனக்குத் தெரியும். அதுதான் நேரிலேயே பேசி உங்க விருப்பத்தைத் தெரிஞ்சுக்கலாம்னு வந்தேன்..."

யாழினி மெள்ள எழுந்து நின்று உமையாளை ஒரு சலனமில்லாதப் பார்வை பார்த்தாள்.

டாக்டர்! அடுத்த இஷ்யூவில் உங்க பேட்டி பப்ளிஷ் ஆகும். காம்ப்ளிமென்ட்ரி காப்பி அனுப்பி வைக்கிறேன். படிச்சுப் பார்த்துட்டு உங்க கருத்தை எனக்கு எஸ்.எம்.எஸ். பண்ணினா நான் ரொம்பவும் சந்தோஷப்படுவேன். வரட்டுமா?" பேசிக் கொண்டே நகர முயன்றாள்.

இதோ பார் யாழினி! அட்சய் வலிய வந்து தன்னோட விருப்பத்தைச் சொன்னதால அவனை நீ இளப்பமாய் நினைச்சுட்டே. அவன் ஒண்ணும் ப்ளேபாய் கிடையாது. மரியாதைப்பட்ட குடும்பத்தைச் சேர்ந்த பையன். அட்சய்யோட அப்பா இந்தியாவில் இருக்கிற சிறந்த தொழில் அதிபர்களில் ஒருத்தர். பிரஸிடெண்ட் கையால மூணு தடவை விருதுகளை வாங்கினவர்..."

ஓ!"

யாழினி! இந்த விஷயத்தை நீ சீரியஸாவே எடுத்துக்கலைன்னு நினைக்கிறேன்."

யூ ஆர் கரெக்ட் டாக்டர். நான் பேட்டி எடுக்க வந்த இடத்துல என்னோட கல்யாணப் பேச்சை எடுத்தா அதை எப்படி நான் சீரியஸாய் எடுத்துக்க முடியும்?"

அட்சய்யோட அந்தஸ்துக்கும் கௌரவத்திற்கும் ஏற்ற மாதிரியான ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுக்கிறது ரொம்பவும் சுலபம். ஆனா அவனோட மனசுக்குப் பிடித்த மாதிரியான ஒரு பெண் கிடைக்கிறதுதான் கஷ்டம். இப்போ அந்தக் கஷ்டமும் இல்லை. உன்னை அட்சய் எந்த நிமிஷம் பார்த்தானோ அந்த நிமிஷத்தில் இருந்தே தன்னோட..."

இதயச் சிம்மாசனத்துல என்னை உட்கார வெச்சுட்டாராக்கும்?"

அப்படித்தான் வெச்சுக்கோயேன்!"

அந்த சிம்மாசனத்திலிருந்து என்னை இறக்கி விட்டுடச் சொல்லுங்க டாக்டர்...!"

ஏன்?"

அது என்னுடைய பர்சனல் மேட்டர். அதை போன வாரம் எனக்கு அறிமுகமான உங்ககிட்டயோ கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி எனக்கு நீங்க அறிமுகப்படுத்தி வெச்ச அட்சய்கிட்டேயோ சொல்லவேண்டிய அவசியம் இல்லை டாக்டர்..."

யாழினி! நீ பேசற முறை சரியில்லை!"

அட்சய் மாதிரியான பணக்கார வர்க்கத்துக்கு இப்படி பேசினாத்தான் புரியும் டாக்டர்... அட்சய், ஒரு கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்தவர்ன்னு சொன்னீங்க. கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்த யாரும் ஒரு பெண்ணை அவளோட அனுமதியில்லாமே செல்போன்ல போட்டோ எடுக்க மாட்டாங்க...!"

அட்சய் பதற்றமாய் இடைமறித்தான்.

ஸாரி...! ஒரு ஆர்வத்துல..."

அதுக்குப் பேரு ஆர்வம் இல்லை. ஆணவம். யார் என்னை என்ன செய்ய முடியும்ங்கிற..."

உமையாள் கோபமாய் எழுந்து கண்களில் கோபம் மின்ன யாழினியைக் கையமர்த்தினாள். வேண்டாம்! அவசரப்பட்டு எதையும் பேசிடாதே... பின்னால் என்னிக்காவது ஒருநாள் ஏன் அப்படிப் பேசினோம்ன்னு கண்ணீர் விட்டு அழ வேண்டிய நிலைமை ஏற்படலாம்..."

ஸாரி டாக்டர்... எனக்கு அப்படிப்பட்ட நிலைமை வராது. காரணம் நான் எது எதுக்கு அழணுமோ அதுக்கெல்லாம் அழுது முடிச்சுட்டேன். கண்ணீர் என்கிட்டே மிச்சமில்லை... நோ ஸ்டாக்... நான் வர்றேன்...!"

யாழினி தன் கைப்பையை எடுத்துத் தோளில் மாட்டிக் கொண்டு விடுவிடுவென்று நடந்து போய்விட, டாக்டர் உமையாளும் அட்சய்யும் ஒருத்தரையொருத்தர் சலனமில்லாத முகங்களோடு பார்த்துக் கொண்டார்கள்.

அட்சய்...!"

ஆன்ட்டி...!"

இவ உனக்கு வேண்டாம். தான் அழகாய் இருக்கோம் என்கிற திமிர்ல என்னமாய் பேசிட்டுப் போறா பார்த்தியா?"

எனக்கு யாழினியோட அந்த திமிர் பிடிச்சிருக்கு ஆன்ட்டி! என்னைப் பொறுத்தவரைக்கும் அது திமிர் இல்லை. அதுவும் ஓர் அழகுதான். ‘கண்ணீர் என்கிட்டே மிச்சம் இல்லை’ன்னு எவ்வளவு தைரியமாய் சொல்லிட்டுப் போறா. எத்தனை பெண்களுக்கு இது மாதிரியான ஒரு தைரியம் வரும்...?"

அட்சய்! உன்னுடைய தகுதிக்கும் தராதரத்துக்கும் இவசரிப்பட்டு வரமாட்டா. நீ வேற ஒரு பெண்ணைப் பாரு..."

இல்ல ஆன்ட்டி! யாழினி என்னோட மைண்ட்ல ஃபிக்ஸ் ஆயிட்டா."

அவதான் கல்யாணமே வேண்டாம்ன்னு சொல்றாளே?"

அப்படிச் சொல்ற ஒரு பெண்ணை கல்யாண மணவறை வரைக்கும் கொண்டு போறதுலதான் த்ரில்லே இருக்கு...!"

இவ உனக்குக் கழுத்தை நீட்டுவாங்கிற நம்பிக்கை எனக்கு ஒரு பர்ஸன்ட் கூட இல்லை..."

எனக்கு நூறு பர்ஸன்ட் நம்பிக்கை இருக்கு ஆன்ட்டி. எனக்கு மூணு மாசம் டயம் குடுங்க அதுக்குள்ள அவளை மிஸஸ் யாழினி அட்சய்யாய் மாத்தி காட்டறேன்..."

சந்திரமண்டலத்துக்குப் போக சைக்கிள் பயணமா? உன்னோட முயற்சிக்கு என்னோட வாழ்த்துக்கள்!" சொன்ன உமையாளின் உதட்டில் விரக்தியை கூட்டு சேர்த்துக் கொண்ட புன்னகையொன்று உதித்து ஒரு விநாடி உயிர் வாழ்ந்து விட்டு மறைந்தது.

சென்னையின் மத்தியான ஒரு மணி வெய்யில் நடுமண்டையில் நைட்ரிக் அமிலம் கொட்டிய தினுசில் தகிக்க, நகுல் தலையில் கர்ச்சீப் போட்டுக் கொண்டு மயிலாப்பூர் கச்சேரி ரோட்டில் ஒரு ஓரமாய் நடந்து கொண்டிருந்தான். நடைபாதைக் கடைகளில் டூரிஸ்ட் பஸ்களில் வந்த கூட்டம் ஒன்று கும்பல் கும்பலாய்ப் பிரிந்து பேரம் பேசி பொருள்களை வாங்கிக் கொண்டிருக்க ஒட்டுமொத்த சாலையும் போக்குவரத்து நெரிசலில் இருந்தது.

முப்பது வயதை நெருங்கிக் கொண்டிருந்த அந்த நகுல் கையில் வைத்திருந்த ப்ரவுன் நிற பெரிய கவரோடு யார் மீதும் இடித்துக் கொள்ளாமல் மூளை நிறைய கவலைகளோடு நடந்தான். லோன் சம்பந்தப்பட்ட பெரிய கவலையொன்று மற்ற கவலைகளுக்குத் தலைமைதாங்கியது.

'இன்றைக்கு எப்படியும் பேங்க் லோன் சாங்க்ஷன் ஆகிவிடும். இரண்டு வாரங்களுக்கு முன்பு பேங்க் மானேஜர் கிருபாகரனை சந்தித்துப் பேசிய பொழுது ரொம்பவும் என்க்ரேஜிங்காகவே பேசினார். தோளில் தட்டிக் கொடுத்து, 'ரெண்டு வாரம் கழிச்சு வா. வரும் போது நான் கேட்டிருந்த டீடெய்ல்ஸ் சம்பந்தப்பட்ட பேப்பர்களையும் கொண்டு வா. ஏதாவது பண்ணித் தர்றேன். உன்னை மாதிரியான இளைஞர்களுக்கு உதவத்தானே பேங்க் இருக்கு!" என்றார். மனிதர் கண்டிப்பாய்ச் செய்வார்.

ஒரு ஐந்து நிமிஷ வேகமான, வியர்வையான நடையில் அந்தத் தேசீய வங்கியின் கிளையை நெருங்கினான்.

சென்ட்ரலைஸ்ட் ஏ.சி. செய்யப்பட்ட ஒட்டு மொத்த பேங்க்கும் ஒரு மினி ஊட்டியாய் மாறியிருந்தது. எல்லா கௌண்டர்களிலும் சின்னச் சின்ன க்யூ உற்பத்தியாகியிருந்தது.

நகுலுக்கு அந்த பேங்கின் சூழ்நிலை கடந்த ஒரு வருடக் காலத்தில் வெகுவாய்ப் பழகிப் போயிருந்தது. அதனால் தயக்கமில்லாமல் நடந்து ஹாலின் வலது பக்க மூலையில் இருந்த மானேஜரின் அறைக் கதவைத் தட்டினான். உடனே உள்ளேயிருந்து குரல் வந்தது. பெண் குரல்.

ப்ளீஸ் கம் இன்" நகுல் ஆச்சர்யப்பட்டுக் கொண்டே உள்ளே போனான். இருக்கையில் வழக்கமான வழுக்கைத் தலை மானேஜர் கிருபாகரன் இல்லை. அதற்குப் பதிலாக நீட்டாய் அயர்ன் செய்த காட்டன் சேலை உடுத்திய அந்த நடுத்தர வயது பெண் பார்வைக்குக் கிடைத்தாள். கம்ப்யூட்டரில் கவனமாய் இருந்தாள்.

குட்மார்னிங் மேடம்!"

எஸ்! என்ன வேணும்?"

மேடம்! மானேஜர் கிருபாகரன் இன்னிக்கு என்னை வரச் சொல்லியிருந்தார்."

அப்படியா... அவர் போன வாரமே ட்ரான்ஸ்பர்ல அலகாபாத் போயிட்டாரே?"

ட்ரான்ஸ்பரா?" நகுலின் அதிர்ச்சியை ஒரு பொருட்டாய் எடுத்துக் கொள்ளாமல் இருந்தாள்.

மேடம்! நான் ஒரு பி.ஈ. மெக்கானிக் க்ராஜ்வேட். படிப்பை முடிச்சு அஞ்சு வருஷமாச்சு! சின்னதாய் ஒரு இன்டஸ்ட்ரி தொடங்கறதுக்காக லோன் கேட்டு பேப்பர்ஸ் சப்மிட் பண்ணியிருந்தேன்... இன்னும் சில டீடெய்ல்ஸ்களோடு இன்னிக்கு வந்து பார்க்கச் சொல்லியிருந்தார்."

லோன் அமௌண்ட் எவ்வளவு?"

டென் லேக்ஸ் மேடம்."

என்ன மாதிரியான இன்டஸ்ட்ரி? நேச்சர் ஆ∴ப் ப்ராடக்ட் என்ன...?"

அயோனைஸ்ட் வீல்ஸ்"

இந்த ப்ராடக்ட்டுக்கு மார்க்கெட்டிங் இருக்கா?"

சாம்பிள்ஸ் குடுத்து இனிமேல்தான் மார்க்கெட்டிங் பண்ணணும்."

புதுசா தயார் பண்ற ப்ராடக்ட்ஸுக்கெல்லாம் லோன் தரக்கூடாதுன்னு ஒன் ஆ∴ப் த பேங்க் ரூல்ஸ் சொல்லுதே?"

நகுல் நொறுங்கினான். மேடம்! இப்படியொரு ரூல் இருக்கிறதைப் பத்தி பழைய மானேஜர் சொல்லலையே?"

அதுக்கு நான் என்ன பண்ணட்டும்?"

மேடம்! அவர் எனக்குக் கண்டிப்பாய் லோன் தர்றதாய் சொன்னாரே?"

அவர் எதுக்காக அப்படிச் சொன்னார்ன்னு எனக்குத் தெரியலை. ஒருவேளை அப்படியொரு ரூல் இருக்கிறது அவருக்குத் தெரியாமல் இருந்திருக்கலாம்."

நகுலின் குரல் உடைந்தது. மேடம்! அப்படீன்னா என்னோட லோன்...?"

ஸாரி...! அ'யாம் ஹெல்ப்லெஸ்"

எப்படியும் லோன் கிடைச்சுடும்ன்னு பெரிசா நம்பிட்டிருந்தேன் மேடம்."

உங்க பேர் என்ன?"

நகுல்"

இதோ பாருங்க நகுல்! நான் உங்களை டிஸ்கரேஜ் பண்றதாகவோ அண்டர் எஸ்டிமேட் பண்றதாகவோ நினைக்க வேண்டாம். இந்த அன் எம்ப்ளாய்ட் யூத்துக்கு லோன் தர்றது, லோன் மேளா இதெல்லாம் கண்துடைப்புச் சமாசாரங்கள்.

இன்னிக்கு இருக்கிற நிலவரப்படி பேங்க் ரூல்ஸ் எல்லாம் ரொம்பவும் ஸ்ட்ரிக்ட். உங்க கேட்டகிரி பீப்பிள்க்கெல்லாம் இந்த பேங்க்ல லோன் கிடைக்காது. இந்த பேங்க்ல மட்டும் இல்லை. வேற எந்த பேங்கிலும் கிடைக்க வாய்ப்பில்லை. நீங்க இந்த லோன் முயற்சிக்கெல்லாம் ஒரு குட்பை சொல்லிட்டு வேற ஏதாவது வேலையில் முயற்சி எடுங்க!"

மேடம்!"

ஸாரி... கிளம்புங்க...! அறைக்கு வெளியே ஒரு ப்ரஸ்டீஜியஸ் கஸ்டமர் எனக்காக வெயிட் பண்ணிட்டிருக்கார்."

நொறுங்கிப் போன இதயத்தோடு அறையிலிருந்து வெளிப்பட்டான் நகுல். உடம்பில் ஓடும் ரத்தநாளங்கள் எல்லாம் நெருப்பு ஆறுகளாய் மாறி விட்டிருந்தன.

'என்ன தேசம் இது?'

'நாளைய இந்தியா இன்றைய இளைஞர்களின் கையில் என்று பாராளுமன்றத்தில் பேசி விட்டு வீட்டுக்கு வந்ததும் அந்த வாசகத்தை மறந்துவிடும் தலைவர்கள் இருக்கும் வரை என்னைப் போன்ற இளைஞர்கள் நடுத்தெருவில் நிற்க வேண்டியதுதான்!'

நகுல் தன் கையில் வைத்திருந்த பிரவுன் கவரை இரண்டாய், நான்காய், எட்டாய்க் கிழித்து 'வேஸ்ட் பின்'னில் போட்டுவிட்டு பேங்க்கை விட்டுவெளியே வந்தான். மனசு மரத்துப் போயிருந்தால் அடித்த வெய்யில் உறைக்கவில்லை. ஜனங்களோடு கலந்து நடந்தான்.

சட்டையின் மேல் பாக்கெட்டில் வைத்திருந்த செல்போன் மெலிதாய் சிணுங்கியது.

சொல்லு யாழினி!"

என்ன நகுல்! காலையிலிருந்து போனையே காணோம். அய்யா ரொம்ப பிஸியோ?"

போன் பண்ணலாம்ன்னு இருந்தேன். எப்படியோ மறந்துட்டேன். ஸாரி."

உன்னோட ஸாரியைத் தூக்கி கூவத்துல போடு!"

ரொம்பவும் கோபமாய் இருக்கே போலிருக்கு."

பின்னே? இன்னிக்கு என்ன தேதின்னு ஞாபகம் இருக்கா?"

இருக்கு! இருபத்தி மூணு."

இது என்ன மாசம்?"

மே."

ஏதாவது ஞாபகத்துக்கு வருதா?"

வருது."

என்ன?"

நீயும் நானும் போன வருஷம் இதே மே மாசம் இருபத்தி மூணாம் தேதிதான் பரஸ்பரம் 'ஐ லவ் யூ' சொல்லிக்கிட்டோம். இன்னிக்குத்தான் நம்ம காதல் செடியில் பூ பூத்த நாள்."

கொண்டாட வேண்டாமா?"



தன் காதில் தொற்றிக்கொண்ட செல்போனோடு நகுல் யோசிப்பில் இருக்க, யாழினி மறுமுனையிலிருந்து கேலியான குரலில் கேட்டாள்.

என்ன நகுல்... நிஷ்டையில் ஆழ்ந்துட்டியா...? நான் கேட்ட கேள்விக்கு பதிலையே காணோம்?"

வாய்ஸ் ப்ரேக் ஆனதால நீ சொன்னது என்னோட காதுல சரியா விழலை... நீ என்ன கேட்டே?"

போன வருஷம் இதே தேதியில்தான் நாம ஒருத்தரையொருத்தர் முதன் முதலா பார்த்துக்கிட்டோம். அதாவது நம்ம காதல் பிறந்தநாள். அதைக் கொண்டாட வேண்டாமன்னு கேட்டேன்...?"

ம்...ம்... கொண்டாடிடலாம்."

உனக்கு என்னாச்சு நகுல்...? நீ எப்ப என் கூட பேசினாலும் அந்த வார்த்தைகளில் சந்தோஷம் ஒட்டியிருக்கும். இன்னிக்கு அது மிஸ்ஸிங். இப்ப நீ சொன்ன 'ம்... ம்... கொண்டாடிடலாம்' என்கிற வார்த்தையை எடைபோட்டுப் பார்த்தா ஒரு பத்து கிலோ விரக்தி இருக்கும் போலிருக்கே? ஏதாவது பிரச்னையா?"

பிரச்னைகளுக்கு என்னைப் பிடிக்காது. எனக்கு பிரச்னைகைளைப் பிடிக்காது. அப்புறம் எப்படி பிரச்னை வரும்?"

ஸோ... நீ இப்போ சந்தோஷமா இருக்கே?"

சர்வ நிச்சயமா."

சரி! இன்னிக்கு நம்ம காதல் அவதரித்த நாள். அதை எப்படி செலிபரேட் பண்ணலாம்?"

ஒரு நல்ல ஹோட்டலுக்குப் போய் ஸ்பெஷல் லஞ்ச் சாப்பிடலாம்."

லஞ்ச் சாப்பிடறோம். ஆனா ஹோட்டலில் இல்லை."

பின்னே...?"

அடையாரில் இருக்கிற 'பி.எஸ்.எம்.'க்கு வந்துடு! இன்னிக்கு ஒரு நாள் உன்னோட கஞ்சத் தனத்தை தியாகம் பண்ணிட்டு ஆட்டோவுல வந்துடு!"

சரி...!"

அப்புறம் கேட்க மறந்துட்டேன்... இன்னிக்கு பேங்க் லோன் விஷயமா மானேஜரைப் பார்க்கணும்னு சொன்னியே... போய்ப் பார்த்தியா?"

ம்... பார்த்துட்டேன்!"

என்ன சொன்னார்?"

என்னோட ப்ராஜெக்டைப் படிச்சுப் பார்த்துட்டு என்னைக் கட்டிப் பிடிக்காத குறைதான்."

அப்படின்னா லோன் கண்டிப்பாக் கிடைக்கும்ன்னு சொல்லு."

கிடைக்கும்ன்னா... கிடைச்சாச்சு...!"

கேட்ட அமௌன்டை சாங்க்ஷன் பண்ணுவாரா?"

இன்னும் ஒரு அஞ்சு லட்சம் சேர்த்துத் தர்றேன்னு சொன்னார். நான்தான் இப்ப வேண்டாம் ஸார்... பின்னாடி தேவைப்பட்டா வாங்கிக்கறேன்னு சொன்னேன்."

நகுல்! இனி உன் காட்டுல மழைதான். இந்த ஏழை யாழினியை கைவிட்டுடாதே...!

ஏ... வெறுப்பேத்தாதே...!"

சும்மா... ஒரு உதார்தான்...! தமிழ்பட வசனம் பேசி ரொம்ப நாளாச்சு. அதான் பேசிப் பார்த்தேன்... டென்ஷன் ஆகாதே! நீ ஒரு ஆட்டோவைப் பிடிச்சு உடனே பி.எஸ்.எம்.வா. பசி இப்பவே ஸ்லோமோஷன்ல ஸ்ப்ரெட் ஆயிட்டிருக்கு..."

இதோ புறப்பட்டேன்...!" நகுல் செல்போனை அணைத்து கனக்கிற இதயத்தோடு சட்டைப்பையில் போட்டுக் கொண்டு தன்னைக் கடந்து போன காலியான ஒரு ஆட்டோவை கைத்தட்டி கூப்பிட்டான். அது அரைவட்டம் அடித்துக்கொண்டு திரும்பிவந்து அவனுக்குப் பக்கத்தில் நின்றது.

அடையார் போகணும்."

அடையார்ல எங்க ஸார்."

இந்திரா நகர்ல பி.எஸ்.எம். ட்ரஸ்ட்"

பரஸ்பரம் ட்ரஸ்ட்டா ஸார்?"

ஆமா."

அப்படிச் சொல்லுங்க ஸார்... முழுப் பேரைச் சொன்னாத்தானே எங்க மாதிரியான ஆட்டோ டிரைவர்களுக்குத் தெரியும். உட்கார் ஸார்."

எவ்வளவு...?"

மீட்டரைப் பார்த்துட்டு துட்டு குடு... ஸார்! பேரம் பேசினா பேஜாரு. பாசஞ்சர்ஸ் போலீஸுக்குப் போயிடறாங்க."

இந்த பயம் எல்லா ஆட்டோ டிரைவர்களுக்கும் இருந்தா பரவாயில்லை" என்று வாய்விட்டு முனகிக் கொண்டே ஆட்டோவுக்குள் ஏறி உட்கார்ந்தான் நகுல்.

அடையார் இந்திரா நகரின் ஏழாவது குறுக்குத் தெருவின் ஆரம்பத்திலேயே ஒரு பெரிய வேப்ப மரத்தின் நிழலில் இரண்டு மாடிகளோடு உட்கார்ந்திருந்தது பரஸ்பரம் ட்ரஸ்ட் கட்டிடம்.

நகுல் அதற்கு முன்பா ஆட்டோவை நிறுத்தி இறங்கிக் கொண்டான். மீட்டரைப் பார்த்துப் பணத்தைக் கொடுத்துவிட்டு பாதி திறந்திருந்த விக்கெட் டோர் வழியாக உள்ளே போனான். மாதத்தில் இரண்டு தடவையாவது வந்து போகிற இடமாக இருந்தாலும் காம்பௌண்ட் உட்சுவர்களில் எழுப்பப்பட்டிருந்த வாசகங்களைப் புதிதாய் பார்ப்பவனைப் போல் படித்துக் கொண்டே நடந்தான்.

'வாழும் போது ரத்த தானம் செய்வீர்; வாழ்ந்து முடிந்ததும் உடல்தானம் செய்வீர்.'

'நடந்ததை அதிகமுறை யோசிப்பதை விட நடப்பதை ஒரு முறை யோசி!'

'உன்னிடம் அதிகம் இருப்பதை இல்லாதவர்களுக்குக் கொடு. கடவுளுக்கே சந்தேகம் வரும்யார் கடவுள் என்று!'- வாசலிலேயே யாழினி காத்திருந்தாள். கூடவே பரஸ்பரம் ட்ரஸ்டின் நிர்வாகப் பொறுப்பைக் கவனித்துக் கொள்ளும் ஐம்பது வயது மங்கையர்க்கரசி ஒரு புன்னகையோடு தெரிந்தாள்.

வா... நகுல்! எல்லாரும் உனக்காகத்தான் வெயிட் பண்ணிட்டிருக்கோம்."

ஸாரி மேடம்...! வழியில் கொஞ்சம் ட்ரா ஃபிக்" என்று சொன்ன நகுல் யாழினியிடம் திரும்பினான். இன்னிக்கு லஞ்ச் இங்கேதான் சாப்பிடப் போறோம்ன்னு நீ முதலிலேயே சொல்லியிருக்கலாமே?"

நான் அப்படி சொல்லாததற்கு ரெண்டு காரணம் நகுல்."

என்ன?"

முதல் காரணம் நான் இன்னிக்குக் காலையில் இருந்தே கொஞ்சம் மூட்அவுட். பேட்டி எடுக்கப் போன இடத்துல ஒரு விரும்பத்தகாத சம்பவம்."

யாரை பேட்டி எடுக்கப் போனே?"

உமையாள்ன்னு ஒரு டாக்டர். இன்னிக்கு சிட்டியில அவங்கதான் நெம்பர் ஒன் கைன காலஜிஸ்ட். அந்த அம்மாவோட சமீபத்திய மிராக்கிள் ட்ரீட்மென்ட் வலியில்லாத பிரசவம். இந்த கான்செப்ட் கொஞ்சம் புதுமையா இருக்கவே எடிட்டர்கிட்டே பர்மிஷன் வாங்கிட்டு அந்த அம்மாவைப் பேட்டி எடுக்கப்போனேன். பேட்டியை நல்லபடியா எடுத்துக்கிட்டுப் புறப்படற நேரத்துல ஒரு பிரச்னை" என்று பேச ஆரம்பித்தவள், அட்சயைப் பற்றிச் சொல்லிவிடலாமா என்று ஒரு விநாடி நினைத்து நகுலின் முகம் மாறுவதைப் பார்த்து எண்ணத்தை மாற்றிக் கொண்டாள்.

என்ன பிரச்னை...?" நகுல் பதற்றத்தோடு கேட்டான்.

அதைச் சாப்பிட்ட பிறகு நிதானமாய்ச் சொல்றேன். இப்ப சொன்னா உனக்குச் சாப்பிடற மூடே போயிடும். ரெண்டாவது காரணம் வேணும்ன்னா சொல்றேன்!"

இதையாவது சஸ்பென்ஸ் வைக்காம சொல்லு."

இதுல ஒரு சஸ்பென்ஸும் இல்லை... என் ஃப்ரெண்ட் ஒருத்தி ஒரு மணி நேரத்துக்கு முன்னாடி எனக்கு போன் பண்ணி ஒரு நபர் இறந்த பிறகு அவரோட உடலை ஜி.ஹெச்.க்கு டொனேட் பண்ணனும்ன்னா அதுக்கான வழிமுறைகள் என்னன்னு கேட்டா. உடனே எனக்கு நாம ரெண்டு பேரும் முதன் முதல்ல இந்த உடல் தானம் பண்ற விஷயத்துலதான் இங்கே மீட் பண்ணி ஒருத்தரையொருத்தர் அறிமுகப்படுத்திக்கிட்டோம் என்கிற விஷயம் ஞாபகத்துக்கு வந்தது. தேதியைப் பார்த்தேன். அதே தேதி. மனசுக்குள்ளே சந்தோஷம் கரை புரண்டது. மேடம் மங்கையர்க்கரசிக்குப் போன் பண்ணி விஷயத்தைச் சொன்னேன். அவங்களும் சந்தோஷப்பட்டு இந்த வருஷம் ரெண்டு பேரும் இங்கே வந்து ஆதரவற்றக் குழந்தைகளோடும், பெரியவங்களோடும் உட்கார்ந்து லஞ்ச் சாப்பிடுங்க. அடுத்த வருஷம் எங்க எல்லார்க்கும் கல்யாண சாப்பாடு போடுங்கன்னு சொன்னார். நான் உடனே உனக்கு போன் பண்ணிட்டேன்."

மங்கையர்க்கரசி சிரித்தாள்.

என்ன நகுல்! அடுத்த வருஷம் கல்யாணச் சாப்பாடு கிடைக்குமா?"

போட்டுடலாம் மேடம்!"

யாழினி ரெடியா இருக்கா... நீதான் லேட் பண்றியாமே?"

பேங்கிலிருந்து ஒரு லோனை எதிர்பார்த்துட்டிருந்தேன்."

அதுவும் சாங்ஷன் ஆகப்போகுதாமே... யாழினி சொன்னா..."

அதுக்குள்ளே எல்லாத்தையும் சொல்லிட்டியா?"

அது என்ன ராணுவ ரகசியமா?"

சாப்ட்டுட்டு வந்து ரெண்டு பேரும் சாவகாசமாய்ச் சண்டை போடலாம். மொதல்ல உள்ளே வாங்க...!"

மூன்று பேரும் அந்த நீள் சதுரமான டைனிங்ஹாலுக்குள் நுழைந்தார்கள்.

சற்றே பெரிய ஹால். பல்வேறு வயதுகளில் ஆணும் பெண்ணுமாய் சுமார் ஐம்பது பேர் சாப்பாட்டுத் தட்டுகள் முன், வரிசையாய் உட்கார்ந்து இருந்தார்கள். மங்கையர்க்கரசி கைகாட்டினாள்.

அதோ...! உங்களுக்கான இடம்... போய் உட்காருங்க."

மேடம்... நீங்க...?"

நான் அப்புறமாய்ச் சாப்பிட்டுக்கிறேன். புதுசா ஒரு அட்மிஷன் வந்திருக்கு. நான் போய்ப் பேசிட்டிருக்கேன். நீங்க சாப்ட்டுட்டு வாங்க...!"

மங்கையர்க்கரசி அங்கிருந்து நகர்ந்ததும், நகுலும் யாழினியும் காலியா இருந்த தட்டுகளுக்கு முன்பாய் போய் உட்கார்ந்தார்கள். பரிமாறப்பட்ட உணவை மெதுவாய்ச் சாப்பிட ஆரம்பித்தார்கள். யாழினி கேசரியில் கைவைத்து அதிலிருந்து கொஞ்சம் எடுத்து வாயில் போட்டுக் கொண்டே மெதுவாய் நகுல்!" என்றாள்.

ம்..."

நீயும் நானும் கடந்த 365 நாட்களில் குறைந்தது 200 தடவையாவது நேர்ல சந்திச்சுப் பேசியிருப்போம் இல்லையா?"

ஆமா..."

அந்த ‘200’ தடவையில் என்னிக்காவது ஒரு நாளாவது நீ பொய்ப் பேசியிருக்கியா?"

இல்ல."

இன்னிக்கு மட்டும் ஏன் பொய் சொன்னே?"

பொய்யா?"

பின்னே உனக்கு பேங்க் லோன் கிடைச்சுது உண்மைன்னு சொல்ல வர்றியா...?"

யா... யா.. .யாழினி!"

இதோ பார் நகுல்...! நீ சந்தோஷமா இருக்கியா... இல்ல மனக்கஷ்டத்தில் இருக்கியான்னு உன்னோட கண்களே எனக்குக் காட்டிக் கொடுத்துடும். மனசைப் பாரமா வெச்சுக்கிட்டா ஒரு வாய் சோறு கூட சுலபமா உள்ளே போகாது."

ஸாரி யாழினி! லோன் கிடைக்கலைன்னா உன்னோட மனசு கஷ்டப்படும். அதனால்தான் அப்படி ஒரு பொய்யைச் சொன்னேன்."

அந்தப் பொய்யை எத்தனை நாளைக்கு உன்னால காப்பாத்த முடியும்..."

எப்படியும் லோன் கிடைச்சுடும்னு நினைச்சேன். அந்த மானேஜர் எனக்கு ஃபால்ஸ் ஹோப் கொடுத்து ஏமாத்திட்டார்... இனி வேற பேங்க்லதான் ட்ரை பண்ணணும்...!"

வேண்டாம்."

என்ன வேண்டாம்...?"

பேங்க் லோனுக்கு அப்ளை பண்ற முயற்சியே வேண்டாம்."

அப்புறம்?"

மொதல்ல நீ படிச்ச படிப்புக்கு ஏற்ற மாதிரி வேலைக்கு முயற்சி பண்ணு. பிறகு பிசினஸ் தொடங்கறது பத்தி யோசனை செய்யலாம்."

நான் என்ன வேலைக்கு முயற்சி பண்ணாமலா இருக்கேன்?" எத்தனையோ கம்பெனிகளுக்கு அப்ளை பண்ணியும் எல்லாம் கிணத்துல போட்ட கல் மாதிரி இருக்கே... ஏதோ ஒரு பார்ட்டைம் 'ஜாப்'புக்கு போறதால மெஸ்ல மூணு வேளையும் சாப்பிட்டு, நீட்டா ட்ரஸ் பண்ணிக்கிட்டு வெளியே வர முடியுது. என்னோட ஃப்ரன்ட் குரு அவன் தங்கற ரூம்ல இடம்கொடுத்ததால ரூம் வாடகை மிச்சம்.

யாழினி சாம்பார் சாத வாயுடன் சிரித்தாள்.

அந்த குருவுக்கு வீட்ல கல்யாண ஏற்பாடுகள் நடக்கிறதாய்ச் சொன்னேயே! அவர் கல்யாணம் பண்ணிக்கிட்டு போயிட்டா நீ எங்கே தங்கறதா உத்தேசம்?"

திருவல்லிக்கேணியில் பேச்சிலர் மேன்ஷன் ஒண்ணு இருக்கு. அங்கே போய் ஒண்டிக்க வேண்டியதுதான்... அது சரி... இன்னிக்குக் காலையில் பேட்டி எடுக்கப் போன இடத்தில் ஏதோ பிரச்னைன்னு சொன்னியே... அது என்ன...?"

சொன்னா டென்ஷன் ஆயிடுவே...! நீ சாப்பிட்டு கை கழுவு. வெளியே போய் மர நிழல்ல உட்கார்ந்து பேசுவோம்!"

பிரச்னை பெரிசா இருக்கும் போலிருக்கு!"

பெரிசுதான்!"

டாக்டர் பேர் என்னன்னு சொன்னே?"

யாழினி பேச வாயெடுப்பதற்குள் நகுலின் சட்டைப் பையிலிருந்த செல்ஃபோன் சிணுங்கியது.



எடுத்து யார் என்று பார்த்தான். அவனுடைய நண்பன் குரு.

நகுல்! நீ இப்போ எங்கே இருக்கே?"

என்ன விஷயம்?"

உனக்கொரு வேலைக்கு ஏற்பாடு பண்ணிட்டேன். நாளைக்கே ஜாய்ன் பண்ணனும். இப்ப மணி ரெண்டு.

சாயந்தரம் நாலு மணிக்கு இன்டர்வியூ...இன்டர்வியூ முடிஞ்ச கையோடு அப்பாண்ட்மென்ட் ஆர்டர்."

டேய்... விளையாடாதே...!"

உன்கூட நான் என்னிக்குடா விளையாடியிருக்கேன்...? லூசுத்தனமா உளறிட்டு இருக்காமே உடனே என்னோட ஆபீஸுக்குப் புறப்பட்டு வா..."

இதோ புறப்பட்டேன்" நகுல் செல்போனை அணைத்துவிட்டு தன்னையே பார்த்துக் கொண்டிருந்த யாழினியிடம் விஷயத்தைச் சொல்ல அவள் கிரேட்!" என்றாள்.

இது எப்படி சாத்தியம் யாழினி? ஒரே நாள்ல இன்டர்வ்யூ, உடனே அப்பாயிண்மென்ட் ஆர்டர். நாளைக்குக் காலையில் ட்யூட்டி ஜாய்னிங்..."

இதோ பார் நகுல்...! இது அவசர உலகம். குருகிட்டே உன்னோட ரெஸ் யூம் இருக்கப் போ அவர் வேலைக்காக ட்ரை பண்ணியிருக்கார். அது க்ளிக் ஆயிடுச்சு. தயிர் சாதத்தை தியாகம் பண்ணிட்டு நீ மொதல்ல கிளம்பு!"

நகுல் எழுந்து கொண்டான்.

விஷ்... யூ... ஆல்... த... பெஸ்ட்."

தேங்க்யூ...! மங்கையர்க்கரசி மேடத்துகிட்டே சொல்லிடு... நான் அப்புறமாய் அவங்களுக்கு போன் பண்ணிப் பேசிக்கறேன்!"

மதுரவாயல் போக வேண்டுமென்றால் டாக்ஸி தான் உத்தமம். நடந்து கொண்டே தேடினான்.

இந்திரா நகரைத் தாண்டி பிரதான சாலைக்கு வந்தபோது அந்த க்ரே வண்ண ஆடி கார் அவனுடைய தோளை உரசியபடி வந்து நின்றது. திடுக்கிட்டுப் போய் திரும்பினான் நகுல்.

காரின் முன்பக்கக் கதவு கண்ணாடி மெதுவாய் இறங்க டிரைவர் சீட்டில் உட்கார்ந்திருந்த இளைஞனைப் பார்த்து நகுலின் விழிகள் வியப்பில் விரிந்தன.

'அட்சய்! நீயா...?"

நகுலின் விழிகள் இன்னமும் வியப்பில் இருக்க, காருக்குள் ஸ்டியரிங்கைப் பிடித்தபடி உட்கார்ந்திருந்த அட்சய் தலையைச் சாய்த்துச் சிரித்தான்.

என்ன நகுல்! கொளுத்தற வெயிலில் பாத யாத்திரை போயிட்டிருக்கே... எந்தக் கோயிலுக்கு வேண்டுதல்?"

அட்சயின் கேலியைப் பொருட்படுத்தாமல் நகுல் கேட்டான். அட்சய்! நீ எப்போ ஃபாரீன்லயிருந்து வந்தே?"

நான் வந்து மூணுமாசமாச்சு..."

கண்ணுல படவேயில்லை..."

என்னோட அப்பா விட்டா தானே...? புதுசா ஒரு பிசினஸ் ஸ்டார்ட் பண்ணப் போறாராம். அது சரி, எங்கே இந்தப் பக்கம்...?"

பக்கத்து ரோட்ல இருக்கிற 'பரஸ்பரம்' அமைப்புக்கு வந்தேன். அங்கே ஒருத்தரைப் பார்த்துட்டு இப்போ மதுரவாயல் கிளம்பிட்டிருக்கேன். ஒரு ஆட்டோவோ டாக்ஸியோ கண்ணுல தட்டுப் படாதான்னு பார்த்து பார்த்து நடந்துட்டிருந்தேன். மெர்ஸிடஸ் காரே பக்கத்துல வந்து நிக்குது..."

சரி... கார்ல ஏறு... உன்னை 'ட்ராப்' பண்ணிட்டு போறேன்...!"

பரவாயில்லை அட்சய்..." அட்சயின் கண்களில் இலேசாய் கோபச் சிவப்பு பரவியது. நகுல்! நீ இன்னமும் மாறவேயில்லை. காலேஜ் டேஸ்ல எப்படி இருந்தியோ அதே மாதிரிதான் இன்னமும் இருக்கே! இந்த சுய

கௌரவும், சுயமரியாதை இதெல்லாம் ஒவ்வொரு மனுஷனுக்கும் ஓரளவு வேண்டியது தான். ஆனா உன்னோட ரத்தத்துல அது ரொம்பவும் ஓவர். ம்.. ஏறுடா பெரிய மனுஷா!

உனக்கு தொந்தரவு கொடுக்க வேண்டாம்ன்னு பார்த்தேன்" நகுல் முனகிக் கொண்டே காரில் ஏற, காத்திருந்த ஏசிக் காற்று அவனுடைய உடம்பை உடனடியாத்தழுவி ஐஸ் ஒத்தடம் கொடுத்தது.

எனக்கு ஒரு தொந்தரவும் கிடையாது. இன்னிக்கு காலையிலிருந்து மனசு சரியில்லை. கம்பெனியில் இருக்கவும் பிடிக்கலை. அதான் காரை எடுத்துட்டு வந்துட்டேன்" சொல்லிக் கொண்டே காரை நகர்த்தினான் அட்சய்.

என்னது! உனக்கு மனசு சரியில்லையா?"

நீ நம்பினா என்ன... நம்பாட்டி என்ன... போடா!"

ஸாரிடா! இந்த உலகத்திலேயே சந்தோஷமா இருக்கிற 100 நபர்கள் யார் யார்ன்னு ஒரு பட்டியல் தயாரிக்கப்பட்டா அந்தப் பட்டியலில் உன்னோட பேரும் இருக்கும்'ன்னு நம்பறவன் நான். அதுதான் நீ மனசு சரியில்லைன்னு சொன்னதும் நம்பறதுக்கு கஷ்டமா இருந்தது. சரி! உனக்கு என்ன பிரச்னை சொல்லு...!"

கார் இப்போது வேகம் எடுத்து ஒரு மேம்பாலத்தைக் கடந்து கொண்டிருந்தது. அட்சய் ட்ரைவிங்கில் கவனமாய் நேர்ப்பார்வை பார்த்தபடி கேட்டான்.

நகுல்...! நான் அழகா இருக்கேனா இல்லையா?"

உனக்கென்னடா! பத்து வருஷத்துக்கு முந்தின அஜீத் மாதிரி இருக்கே?"

பண வசதி?"

கோடி கோடி...!

அந்தஸ்து?"

எல்.ஐ.சி. கட்டட உயரம்"

என்கிட்ட இருக்கிற ஒரே கெட்டப் பழக்கம் எப்பவாவது பீர் அடிப்பேன். மத்தபடி ஹாட்ட்ரிங்க்ஸ் கிடையாது."

அதுதான் தெரியுமே?"

காலேஜ் டேஸ்ல ஃபிகர்களைப் பார்த்தா கலாய்க்கறது உண்டு. இப்ப அதுக்கெல்லாம் குட்பை சொல்லிட்டேன். இத்தனை ஃப்ளஸ் பாயிண்ட்கள் இருக்கிற என்னைப் பற்றிய உன்னோட அபிப்பிராயம் என்னான்னு சொல்லு பார்க்கலாம்."

நீ 99.9 சதவீத ஹால்மார்க் தங்கம்டா!"

இந்தத் தங்கத்தை ஒருத்தி வேண்டாம்ன்னு சொல்லிட்டாடா நகுல்."

என்னது! உன்னை வேண்டாம்னு சொல்லிட்டாளா?"

ஆமா...! உனக்குத்தான் தெரியுமே நான் கல்யாணம் பண்ணிக்கற விஷயத்துல என்னோட அம்மாவும் சரி, அப்பாவும் சரி, எனக்கு முழு சுதந்திரம் கொடுத்திருக்காங்க. நான் விரும்பற பெண் யாராக இருந்தாலும் சரி, எந்த ஜாதியைச் சேர்ந்தவளாய் இருந்தாலும் சரி, எனக்கு அவளைக் கல்யாணம் பண்ணி வைக்க அவங்க தயாரா இருக்காங்க... எனக்கு இப்படிப்பட்ட பேரண்ட்ஸ் கிடைச்சதால நானும் என்னோட மனசுக்குப் பிடிச்ச பொண்ணைத் தேட ஆரம்பிச்சேன்.

போன வாரம் என்னோட ஃபேமிலி டாக்டர் உமையாள் வீட்டுக்குப் போயிருந்தபோது அங்க வெச்சு ஒரு பொண்ணைப் பார்த்தேன். பார்த்த முதல் விநாடியே என் மனசுக்குள்ளே ஒரு கலர்ஃபுல்லான ஹோலி பண்டிகை. என் செல்போன்ல அவளை ஃபோட்டோ எடுத்து வீட்ல காட்டினேன். அம்மாவும் அப்பாவும் ஓ.கே. சொல்லிட்டாங்க. டாக்டர் கிட்டேயும் விஷயத்தைச் சொன்னேன். டாக்டரும் எனக்கு சப்போர்ட் பண்ணினாங்க. இன்னிக்குக் காலையில சுமாரா பத்து மணிக்கு டாக்டர் வீட்ல அவளைப் பார்த்தேன். அவ போட்டோவையே அவளோட கையில் குடுத்து இந்தப் பெண்ணைத்தான் கல்யாணம் பண்ணிக்கப் போறேன்னு சொல்லிட்டு அவளோட முகத்தைப் பார்த்தேன். அது அவளுக்கு ஒரு ப்ளஸண்ட் சர்ப்பரைஸா

இருக்கும்ன்னு நினைச்சேன். ஆனா அவ எனக்கு ஷாக் ட்ரீட்மெண்ட் குடுத்துட்டா. ‘சரிதான் போடா... நீயும் உன்னோட பணமும்’ன்னு சொல்லி என்னையும் டாக்டரையும் ஒரு பிடிபிடிச்சுட்டு போயிட்டா..."

யார்ரா... அப்பேர்ப்பட்ட ராங்கிக்காரி?" நகுல் கோபமா குரலை உயர்த்தி கேட்ட விநாடி அட்சயின் செல்போன் ரிங்டோனை வெளியிட்டது. காதில் ஹெட்போனை மாட்டிக்கொண்டு ஸ்பீக்கரை ‘ஆன்’ செய்தான். மறுமுனையில் டாக்டர் உமையாள் பேசினாள்.

அட்சய்! நீ இப்போ எங்கேயிருக்கே...?" குரலில் லேசா பதற்றம்.

எனிதிங்க் இம்பார்ட்டண்ட் ஆன்ட்டி?

எஸ்... உன்னோட அம்மாவுக்கு பி.பி. ரெஸாகி இப்போ ஐ.ஸி.யூ.ல இருக்காங்க!"

ஓ... மைகாட்!" செல்போனை அணைத்து காரின் வேகத்தைக் குறைத்து ரோட்டோரமாய் நிறுத்தினான் அட்சய். நகுல் குழப்பமாய் அவனைப் பார்த்தான்.

என்னடா... பிரச்சனை...?"

அம்மாவுக்கு உடம்பு சரியில்லைன்னு போன். ஸாரிடா நகுல்...!

நோ... ப்ராப்ளம் அட்சய்...! நீ போய் மொதல்ல அம்மாவைக் கவனி. நான் சாயந்தரத்துக்கு மேல உனக்கு போன் பண்றேன். இன்னிக்குக் காலையில் உன்னை டார்ச்சர் பண்ண பொண்ணு யார்ன்னு சொல்லு. நான் அவளை மீட் பண்ணி..."

வேண்டாம் நகுல்...! இது என்னோட பிரச்னை. நான் அவளை ஹேண்டில் பண்ணிக்கிறேன்."

அட்சய்! நான் ஒண்ணு சொல்லட்டுமா?"

என்ன...?"

அழகும் பணமும் இரண்டும் சேர்த்து இருக்கிற உன்னைத் தூக்கி எறிஞ்சு பேசிட்டுப் போன ஒருத்தியை உன் மனசுக்குள்ளே வெச்சு ஏன் ஏமாந்துட்டு இருக்கணும்? அவளை விட அழகான ஒரு பொண்ணு கிடைக்காமலா போயிடுவா?"

கிடைப்பா... ஆனா அவ மாதிரி இருக்கமாட்டா! அதோ... காலியா ஒரு ஆட்டோ வருது. நீ புறப்படு நகுல்..."

நகுல் காரிலிருந்து இறங்கிக் கொண்டு ஆட்டோவை மறித்தான்.

***

மேடம்... அப்ப நான் கிளம்பட்டுமா...?"

குரல் கேட்டு ‘பரஸ்பரம்’ அமைப்பு நிர்வாகி மங்கையர்க்கரசி பார்த்துக்கொண்டிருந்த ஃபைலிலிருந்து தலையை உயர்த்தினாள். தோளில் தொங்கப் போட்ட கைப்பையோடு யாழினி உதட்டில் ஒரு பெரிய புன்னகையோடு நின்றிருந்தாள்.

என்ன யாழினி! அதுக்குள்ளே கிளம்பிட்டே?"

நான் ஆல் ரெடி லேட் மேடம்... பத்திரிகை ஆபீஸ்ல கொஞ்சம் வேலையிருக்கு. இன்னிக்கு காலையில் பேட்டி எடுத்த மேட்டரை கம்போஸிங் செக்ஷனுக்கு குடுத்து லே-அவுட் பண்ணணும். இப்பவே புறப்பட்டாத்தான் சரியா இருக்கும். நானும் நகுலும் இன்னிக்கு இங்கே ஒண்ணா உட்கார்ந்து எல்லார்கூடவும் சேர்ந்து லஞ்ச் சாப்பிடணும்னு நினைச்சோம். அதே மாதிரி சாப்பிட்டோம். நானும் அவரும் இங்கே வந்த நேரம் அவருக்கு வேலை கிடைக்கும் போலிருக்கு."

ரொம்ப சந்தோஷம் யாழினி. உன்னோட நல்ல மனசுக்கு ஏற்ற மாதிரி எல்லாமே நல்லவிதமாத்தான் நடக்கும்." என்றவள் குரலைத் தாழ்த்தி, ஒரு நிமிஷம் உள்ள வாம்மா. உன் கூட கொஞ்சம் பேச வேண்டியிருக்கு...!"

யாழினி குழப்ப முகத்தோடு உள்ளே வந்தாள். என்ன மேடம்?"

உட்கார்ம்மா"

நம்ம ‘பரஸ்பரம்’ அமைப்புக்கு சென்னையில் இருக்கிற பத்துக்கும் மேற்பட்ட ட்ரஸ்ட்கள் மாதா மாதம் நிதி உதவிகளைக் கொடுத்துட்டு இருக்கிற விஷயம் உனக்குத் தெரியும். அதில் ஒரு ட்ரஸ்ட்டான கிண்டியில் இருக்கிற ‘இதம் சேரிடபிள் ட்ரஸ்ட்’ மாதா மாதம் இருபதாயிரம் ரூபாய் கொடுத்துட்டு இருந்தாங்க. உன் மூலமாய் அறிமுகமான அந்த ‘இதம் சேரிடபிள் ட்ரஸ்ட்’ நம்ம அமைப்புக்கு பக்க பலமாய் இருந்தாங்க. ஆனா, கடந்த மூணு மாசமா அவங்க நமக்கு பணம் அனுப்பறதில்லை."

யாழினி திகைத்து,என்னது! பணம் அனுப் பலையா?"

ஆமா..."

ஒருவேளை மறந்து போயிருக்கலாம். நீங்க அவங்களுக்கு போன் பண்ணி கேட்டு இருக்கலாமே?" அவங்க ஒரு செல்ஃபோன் நெம்பரை கொடுத்திருந்தாங்க. அதுக்கு ஃபோன் பண்ணினா ‘ஃபோன் நாட் இன் யூஸ்’னு வருது எப்படியும் பணம் அனுப்புவாங்கன்னு மூணுமாசக் காலம் பொறுமையா இருந்து பார்த்தேன். பணம் வராததால உன்கிட்ட சொல்ல வேண்டியதாயிடுச்சு."

என்ன மேடம் நீங்க...? முதல் மாசம் பணம் வராதபோதே எனக்கு ஃபோன் பண்ணி சொல்லியிருக்க வேண்டியதுதானே?"

அவங்களா பிரியப்பட்டு தர்ற பணம். நாம ஃபோர்ஸ் பண்ண முடியாதே?"

மேடம்! ‘இதம் சேரிடபிள் ட்ரஸ்ட்’ ஒரு மிகப்பெரிய நிறுவனம். அதனோட சேர்மன் பரசுராம் நல்ல மனிதர். கோயில் கட்டுவதற்கும், கோயில் கும்பாபிஷேகத்துக்கும் பணம் வேணும்ன்னு கேட்டா... ஒரு ரூபாய்க்கூட தரமாட்டார். ஆனா... நம்மள போல சமூக சேவை அமைப்புகளுக்குத் தேடிப் போய் பண உதவி செய்வார். அவரை ஒரு தடவை ‘பூச்சரம்’ பத்திரிகைக்காக பேட்டி எடுத்தப்ப, பேச்சோடு பேச்சா நம்ம ‘பரஸ்பரம்’ அமைப்பைப் பற்றிச் சொன்னேன். உடனே அவர் தன் உதவியாளரைக் கூப்பிட்டு ‘இனி ஒவ்வொரு மாசமும் பரஸ்பரம் அமைப்புக்கு இருபதாயிரம் ரூபாய் அனுப்பச் சொன்னார். அப்படி வலிய வந்து உதவி செய்தவர் இப்போ பணம் அனுப்பாமே இருப்பாரா?"

அது ஆச்சர்யம்தான் எனக்கும்...!" நான் இப்போ கிண்டி வழியாத்தான் போறேன். போற வழியில் அப்படியே ட்ரஸ்ட் சேர்மன் பரசுராம் ஸாரைப் பார்த்துட்டுப் போறேன்!"

உடனடியா அவரைப் போய் பார்க்கணும்ங்கிற அவசியம் இல்லை. பத்துநாள் கழிச்சுகூட போய்ப் பார்க்கலாம்."

இல்ல மேடம்...! மூணுமாசமா அவங்க பணம் அனுப்பலை. இதை நாம அலட்சியம் பண்ணக்கூடாது. நான் போய் காரணம் கேட்டுட்டு உங்களுக்கு ஃபோன் பண்றேன்..."

யாழினி எழுந்து கொண்டாள்.

கிண்டியின் பிரதான சாலையிலிருந்து விலகி, உள்ளே ஒரு கிலோமீட்டர் தூரம் தள்ளி அடர்த்தியான மே ஃப்ளவர் மரங்களுக்கு நடுவில் ‘இதம் சேரிடபிள் ட்ரஸ்ட்’ ஒரு பழமையான கட்டடத்தோடு தெரிந்தது.

‘ஒரு வருடத்துக்கு முன்பு ட்ரஸ்ட்டின் சேர்மன் பரசுராமை பேட்டி எடுக்க வந்தபோது இந்த மொத்த இடமும் மக்களாலும் வாகனங்களாலும் நிரம்பி ஒரு விதமான உயிர்ப்போடு இருந்தது. ஆனால், இப்போது அதே இடம் ஆள் நடமாட்டம் இல்லாமல் ஒரு வாகனத்தின் அசைவுகூட இல்லாமல் வெறுமையோடு இருப்பதைப் பார்த்ததும் யாழினியின் மனதுக்குள் சின்னதா ஒரு பயம் மூண்டது.

என்னாயிற்று இந்த நிறுவனத்திற்கு...?"

கவலையா யோசித்துக் கொண்டே உள்ளே போனாள்.

சீசா பச்சைநிற யூனிஃபார்மில் அந்த உயரமான செக்யூரிட்டி பார்வைக்குக் கிடைத்தான். சதைப் பிடிப்பான வியர்த்த முகம். பெரிய மீசை. வேகமாய் ஓடி வந்து இருக்க வேண்டும். மூச்சு வாங்கியது.

யாரம்மா... நீ...?"

என் பேரு யாழினி... பரசுராம் ஸாரைப் பார்க்க வந்தேன்."

அவர் இங்கே இல்லேம்மா... வெளி நாட்டுக்குப் போயிருக்கார். அவர் திரும்பி வர ஆறு மாசமாகும்...!"

சரி, உள்ளே வேற யார் இருக்காங்க?"

யாரும் இல்லேம்மா..." செக்யூரிட்டி சொல்லிக் கொண்டிருக்கும் போதே கட்டடத்தின் உள்ளேயிருந்து அந்த சத்தம் கேட்டது.

யாரோ பெரிதாய்த் தும்மல் போட்ட சத்தம்.

யாழினியின் கோபப் பார்வை செக்யூரிட்டி நபரின் மேல் ஆணியடித்த மாதிரி நிலைத்தது. உள்ளே யாரும் இல்லேன்னு சொன்னீங்க...?"

இப்பவும் சொல்றேன்... உள்ளே யாரும் இல்லை. நீ மொதல்ல இடத்தைக் காலி பண்ணும்மா..."

நீங்க ரொம்பவும் பயப்படறீங்கன்னு நினைக்கிறேன். உங்க முதலாளி பரசுராம் ஸார்க்கு என்னை நல்லாவே தெரியும். என்னைப் பார்த்தா ரொம்பவும் சந்தோஷப்படுவார்... நான் அவர்கிட்டே ஒரு முக்கியமான விஷயத்தைப் பத்திப் பேசணும்."

செக்யூரிட்டியின் குரல் உயர்ந்தது.

என்னம்மா! பிரச்னை பண்றதுக்குன்னே வந்திருக்கியா?"

பிரச்னை பண்றது நானில்லை... நீங்க தான்..." யாழினி சொல்லிக் கொண்டிருக்கும் போதே செக்யூரிட்டியின் இடுப்பில் இடம் பிடித்திருந்த வாக்கி டாக்கி சிவப்புப் புள்ளி வெளிச்சத்தோடு ரிங்டோனை வெளியிட்டது. அதை பவ்யமாய் எடுத்து காதுக்கு ஒற்றியவன் சற்றுத் தள்ளிப் போய்ப் பேசினான்.

அய்யா...!"

நரசிம்மன்! அங்கே என்ன பிரச்னை...-"

எனக்குத் தெரியாமே ஒரு பொண்ணு உள்ளே வந்துடுச்சியா... உங்களைப் பார்த்துப் பேசணுமாம்."

யார் அந்தப் பொண்ணு?"

பேரு யாழினின்னு சொல்லுது"

முட்டாள்! அவ உள்ளே வர்ற வரைக்கும் நீ என்ன பண்ணிட்டிருந்தே...?"

அய்யா! எப்படியோ ஒரு நிமிஷம் ஏமாந்துட்டேன்."

சரி! அந்தப் பெண்ணை கீழே இருக்குற என்னோட ரூம்ல உட்காரவை. விஷயம் என்னான்னு கேட்டு அவளை உடனே வெளியே அனுப்பிடுவேன். இனிமேலாவது ஜாக்கிரதையா இரு!"

சரிங்கயா...!" தலையை அசைத்த செக்யூரிட்டி வாக்கி டாக்கியை இடுப்பில் செருகிக் கொண்டு யாழினியிடம் வந்தான்.

என் பின்னாடி வா..." என்ற செக்யூரிட்டி பக்கவாட்டில் இருந்த ஒரு அறைக்கதவைத் திறந்து கொண்டு உள்ளே போக யாழினி அவனைத் தொடர்ந்தாள்.

சற்றே பெரிதான அறை. நடுவே 'ப'வடிவ சோபாக்கள் போடப்பட்டு, கறுப்பு நிற க்ரானைட்டால் உருவான டீபா ஒன்று பளபளப்பான உடம் போடு பார்வைக்குக் கிடைத்தது.

உட்காரும்மா...! அய்யா... இப்ப வந்துடுவார்" சொல்லிவிட்டு செக்யூரிட்டி நபர் வெளியேறிப் போக, யாழினி சுற்றும் முற்றும் பார்த்தபடி சோபாவுக்கு சாய அது அவளை மெல்ல உள்வாங்கிக் கொண்டது.

ஒரு நிமிஷ நிசப்பத்துக்குப் பிறகு மிதியடி சத்தம் கேட்க யாழினி தலையை உயர்த்தினாள். பரசுராம் வந்து கொண்டிருந் தார். ஜிப்பாவும் பைஜாமாவும் அணிந்து தோளில் உல்லன் சால்வையொன்று போட்டிருந்தார். சென்றதடவை பார்த்ததை விட தலையின் கேச அடர்த்தி நிறைந்திருந்தது. கண்களில் ரிம்லெஸ் ஸ்பெக்ஸ். நெற்றிக்கு காலையில் இட்டிருந்த ஸ்ரீசூர்ணம் இலேசான கலங்கலுக்கு உட்பட்டிருந்தது.

யாழினி எழுந்து நின்று கைகளைக் குவித்தாள்.

வணக்கம் ஸார்"

பரசுராம் பெரிதாய் மலர்ந்தார். அட! நீயாம்மா...? ஏதோ ஒரு பத்திரிகையில் வேலை பார்க்கிறே... இல்லையா...?"

ஆமா... ஸார்..."

என்ன பத்திரிகை அது?"

பூச்சரம்"

சொல்லும்மா... என்ன விஷயம்?" கேட்டுக் கொண்டு எதிரில் இருந்த சோபாவுக்குச் சாய்ந்தார்.

யாழினி தயக்கமாய் பேச்சை ஆரம்பித்தாள். ஒண்ணுமில்ல ஸார்...! போன வருஷம் நான் உங்களை ஒரு பேட்டிக்காக பார்க்க வந்த போது 'பரஸ்பரம்' என்கிற ஒரு தொண்டு நிறுவனத்தைப் பத்தியும் அதுக்கு மாதா மாதம் கொஞ்சம் நிதி தேவைப்படற விஷயத்தையும் உங்ககிட்டே சொன்னேன். நீங்களும் எந்தவிதமான தயக்கத்தையும் காட்டாமே மாதா மாதம் இருபதாயிரம் ரூபாயை அனுப்பிடறதாய் சொன்னீங்க. அதே மாதிரி அனுப்பிட்டும் இருந்தீங்க. ஆனா கடந்த மூணு மாச காலமா பணம் அனுப்பலைன்னு கேள்விப் பட்டேன். அது உண்மையா ஸார்...?"

பரசுராம் ஒரு பெருமூச்சோடு நிமிர்ந்தார்.

உண்மைதாம்மா...! இந்த இடம் ட்ரஸ்ட் நிர்வாகத்துல ஒரு பிரச்னை. அது சம்பந்தமாய் ட்ரஸ்ட்டோட மூணு டைரக்டர்களில் இரண்டு பேர் ரிசைன் பண்ணிட்டுப் போயிட்டாங்க. அதுல ஒருத்தர் கோர்ட்ல கேஸும் போட்டுட்டார். அதனால் பேங்க் ட்ரான்ஸாக்ஷன் மொத்தமும் கோர்ட்டால முடக்கி வைக்கப்பட்டிருக்கு... ஒரே வார்த்தையில் சொல்லணும்ன்னா ட்ரஸ்ட் இப்போ செயல்பாட்டில் இல்லை."

பார்த்தாலே தெரியுது ஸார்... நான் போன தடவை உங்களைப் பார்க்க வரும் போது இந்த இடம் ரொம்பவும் லைவ்வா ‘ஜே ஜே’ன்னு இருந்தது. இப்போ மனசுக்குக் கஷ்டமாயிருக்கு."

கோர்ட்டோட இடைக்கால உத்தரவு அடுத்த மாசம் பத்தாம் தேதி ரத்தாயிடும். அதுக்கப்புறம் இந்த ட்ரஸ்ட் பழைய நிலைமைக்குத் திரும்பிடும். கோர்ட்ல கேஸ் இருந்தாலும் பணப்பட்டுவாடாவுக்கு எந்தப் பிரச்னையும் இருக்காது.

ஸாரி... ஸார்... நிலைமை தெரியாமே நான் வந்துட்டேன்" சொல்லிக் கொண்டிருக்கும் போதே யாழினியின் கைப்பையில் இருந்து அவளுடைய செல்ஃபோன் ரிங்டோனை வெளியிட்டது. எடுத்து அழைப்பது யார் என்று பார்த்தாள்.

நகுல்.

யாழினி தயக்கத்தோடு பரசுராமை ஏறிட்டாள். எக்ஸ்க்யூஸ்மீ... ஸார்"

பரவாயில்லை... பேசும்மா..."

யாழினி தயக்கமா செல்போனை தன் இடது காதுக்குக் கொடுத்தாள்.

சொல்லு... நகுல்..நீ பேசறது சரியாவே கேட்கலை... ஏதோ டவர் ப்ராப்ளம் போலிருக்கு... நான் இப்ப ஒரு மீட்டிங்கில் இருக்கேன். ஒரு பத்து நிமிஷம் கழிச்சுப் பேசட்டுமா?" யாழினி சொல்லிக் கொண்டிருக்கும் போதே பரசுராம் குறுக்கிட்டார்.

இங்கே உட்கார்ந்து பேசினா சரியா டவர் எடுக்காதும்மா. கொஞ்சம் எந்திரிச்சுப் போ அப்படி ஜன்னலுக்குப் பக்கத்துல நின்னு பேசும்மா. வாய்ஸ் க்ளியரா இருக்கும்."

யாழினி தலையாட்டிவிட்டு சோபாவினின்றும் எழுந்து ஜன்னல் பக்கம் போய் நின்று முகத்தில் காற்று வீசும்படியா நின்று கொண்டு பேசினாள்.

என்ன நகுல்! மதுரவாயல் போய்ச் சேர்ந்துட்டியா?"

ம்... போய் சேர்ந்துட்டேன். என்னோட ஃப்ரண்ட் குருவையும் பார்த்துட்டேன். இங்கே வந்த பின்னாடிதான் அவன் ஒரு குண்டைத் தூக்கிப் போட்டான்."

குண்டா... என்ன குண்டு?"

வேலை சென்னையில் கிடையாதாம்... நார்த் இண்டியாவில்தான் போஸ்டிங்காம். மும்பை, பூனே, கோலாப்பூர்ன்னு ஏதாவது ஒரு ஊர்ல இருக்குமாம்."

ம்... அதுக்கென்ன?"

அதுக்கென்னவா...? உன்னை ஒரு நாள் பார்க்காம இருக்க முடியுமா என்ன? என்னால முடியாதப்பா... இப்பவே ஹார்ட்ல ஒரு விரிசல்"

நகுல்!" யாழினி குரலைத் தாழ்த்தினாள். உன்னோட புலம்பலைக் கொஞ்சம் நிறுத்தறியா?"

என்னது! நான் புலம்பறேனா?"

பின்னே என்ன... நீயும் நானும் இதே சென்னையில் தினசரி மூணு வேளையும் ஒருத்தரையொருத்தர் பார்த்துட்டிருந்தா உனக்கு யாராவது வேலை தர்றதாய்ச் சொல்லியிருக்காங்களா?"

இ... இல்லை..."

பின்னே என்ன கிளம்பு...! உனக்கு உத்தரப்பிரதேசத்துல வேலை கிடைச்சாலும் சரி, உகாண்டாவில் வேலை கிடைச்சாலும் சரி, எனக்கு சந்தோஷம்தான்."

என்ன இப்படி சொல்றே?"

நம்ம காதல் கல்யாணத்துல போய் முடியணுமா வேண்டாமா?"

முடியணும்."

அப்படின்னா... எங்கே வேலை கிடைச்சாலும் போ! காதல்ன்னா ஒரு பிரிவும் இருக்கணும். அப்பத் தான் அதுக்கு ஆயுள் அதிகம். உனக்கொரு காதல் தத்துவம் சொல்லட்டுமா?"

என்ன?"

காதல்ங்கிறது பட்டாம்பூச்சி மாதிரி. அதை இலேசாய்ப் பிடிச்சிட்டிருந்தா பறந்து போயிடும். அது பறந்து போயிடுமேன்னு இறுக்கிப் பிடிச்சா செத்துப் போயிடும். அதனால..."

போதும் யாழினி...! எனக்கு சஹாரா பாலைவனத்துல ஒட்டகம் மேய்க்கிற வேலை கிடைச்சா கூட போயிடறேன். போதுமா? என் ஃப்ரண்ட் குரு எதுக்கோ கூப்பிடறான். நான் அப்புறமா பேசறேன்."

யாழினி செல்போனை அனைத்து கைப்பைக்குள் போட்டுக் கொண்டு திரும்பினாள் பார்வை ஏதேச்சையா ஜன்னலுக்கு வெளியே பாய, கட்டட வளாகத்துக்குள் இருந்த அந்த மரத்துக்குக் கீழே பெரிய வேன் ஒன்று நின்றிருப்பது தெரிந்தது. வேனிலிருந்து இறங்கிய ஒருவன் தன்னுடைய பரட்டைத் தலையை இடது கையால் கோதிக் கொண்டு யாரையோ பார்த்தபடி வலது கையை உயர்த்தி ஏதோ ஜாடை காட்டுவதும் தெரிந்தது. யாழினி எச்சரிக்கையானாள்.

யாழினி ஜன்னலுக்கு வெகு அருகாகப் போய் அவன் ஜாடை காட்டிய பக்கம் பார்த்தாள்.

அவளுடைய தண்டுவடத்துக்குள் பனிக்கட்டி ஒன்று ஸ்லோமோஷனில் ஊர்ந்தது போன்ற உணர்ச்சி.

ரத்தக்கறை திட்டுத்திட்டாய்ப் பரவியிருந்த போர்வைக்குள் ஒரு மனித உடல் சுற்றப்பட்டு தெரிய, இரண்டு பேர் அதைத் தூக்கிக் கொண்டு வேக நடையோடு வேனை நெருங்கிக் கொண்டிருந்தார்கள்.

ஒரு வியர்வைக் குளியலுக்கு உட்பட்ட யாழினி, சுவாசிக்கத் திணறினாள். ரத்த ஓட்டம் அவளுடைய உடம்பு முழுக்க தறிகெட்டுப் பாய்ந்தது. 'கடவுளே! என்ன நடக்கிறது இங்கே?' பார்த்துக் கொண்டிருக்கும் போதே அந்த ரத்தக்கறை போர்வை அடித்த காற்றில் சற்றே விலக, ஒரு பெண்ணின் கொலுசு அணிந்த கால்கள் சில விநாடிகள் தெரிந்து மறைந்தது. கால்களிலும் ரத்தக் கோடுகள். மறுபடியும் குபீரென்று வியர்த்து உச்சபட்ச பயத்தில் உறைந்தன போன யாழினி சோபாவில் உட்கார்ந்திருந்த பரசுராமை மெள்ள நோட்டமிட்டாள்.

அவர் தன்னுடைய செல்போனின் பட்டன்களைத் தட்டி எதையோ உன்னிப்பாய் பார்த்துக் கொண்டிருந்தார். சலனம் இல்லாத முகம்.

'தான் பார்த்ததை இவரிடம் சொல்லலாமா வேண்டாமா?'

'வேண்டாம்!' என்று உடனடியா எச்சரித்து அவளுடைய உள்ளுணர்வு. 'பரசுராம் சரியில்லை. இவரிடம் ஏதோ தப்பு இருக்கிறது. இந்தக் கட்டடத்தில் இவருக்குத் தெரியாமல் எதுவும் நடக்க வாய்ப்பில்லை!'

'எதையும் பார்க்காதது போல் இயல்பாய் இருந்து விடலாம். வெளியே போனதும் மேற்கொண்டு என்ன செய்யலாம் என்பதைப் பற்றி யோசிக்கலாம்'

என்னம்மா...! டவர் கிடைச்சுதா...

பேசிட்டியா?" பரசுராமின் குரல் கேட்டு முகத்தில் தண்ணீர் தெளிக்கப்பட்ட தினுசில் சுய உணர்வுக்கு மீண்டாள் யாழினி.

பே... பே... பேசிட்டேன் ஸார்... என்னோட ஃப்ரண்ட் ஒருத்திக்கு திடீர்னு உடல் நலக் குறைவு ஏற்பட்டு ஹாஸ்பிடல்ல அட்மிட் ஆயிருக்காளாம். நான் உடனே கிளம்பணும் ஸார்...!"

நீ கிளம்பும்மா! அடுத்த மாசத்திலிருந்து அந்த 'பரஸ்பரம்' அமைப்புக்கு இந்த ட்ரஸ்ட்டிலிருந்து பணம் ஒழுங்காய்ப் போயிடும்."

தேங்க்யூ ஸார்!"

ஏம்மா இப்படி வேர்த்து வழியறே?"

இ... இ... இந்த சம்மர்ல... எப்பவும் இப்படித் தான் எனக்கு வியர்க்கும் ஸார்" யாழினி சொல்லிக் கொண்டே அறையினின்றும் வெளிப்பட்டாள். இப்போது ஒட்டு மொத்த கட்டட வளாகமும் பார்வைக்குக் கிடைத்தது. இருதயம் ரேஸ் குதிரையா மாறியிருக்க படிகளில் வேகமாய் இறங்கினாள். அந்த வேன் எங்கேயாவது தட்டுப்படுகிறதாவென்று பார்வையைத் துரத்திப் பார்த்தாள்.

தட்டுப்படவில்லை.

தன்னுடைய ஸ்கூட்டி நிறுத்தப்பட்டு இருந்த இடத்தை நெருங்கிய யாழினிக்கு திக்கென்று இருந்தது.

அவளுடைய ஸ்கூட்டியைக் காணோம்!

'எங்கே?'

'இந்த இடத்தில்தானே நிறுத்தியிருந்தேன்?'

பின்பக்கம் குரல் கேட்டது.

என்னம்மா தேடறே?"

யாழினி திடுக்கிட்டுப் போய் திரும்பினாள். பரசுராம் தன் மார்புக்கு குறுக்காகக் கைகளைக் கட்டியபடி நின்றிருந்தார்.

யாழினி உலர்ந்து போன வாயோடு சொன்னாள். என்னோட ஸ்கூட்டியை இங்கதான் நிறுத்தியிருந்தேன் ஸார். காணோம்...!"

அந்த ஸ்கூட்டியான்னு பாரம்மா!" பரசுராம் கைகாட்டிய திசையைத் திரும்பிப் பார்த்தாள்.

அவளுடைய இளம்பச்சை நிற ஸ்கூட்டி பார்ட் பார்ட்டாக் கழற்றப்பட்டு சுவரோர மூலையில் ஒரு குவியலாய்ப் போடப்பட்டு இருந்தது.

யாழினியின் இருதயத் துடிப்பு ஒரு சில விநாடிகளுக்கு ஸ்தம்பித்து பிறகு இயல்பு நிலைக்குத் திரும்பியது. மூளையின் முக்கிய பாகத்தில் சின்னதா ஓர் அலாரம் அடித்தது.

'இந்த இடம் சரியில்லை; பரசுராமிடம் ஏதோ தப்பு இருக்கிறது!'யாழினி வியர்த்து வழிந்து யோசித்துக் கொண்டிருக்கும்போதே பரசுராம் அப்பாவித்தனமாய் முகத்தை வைத்துக் கொண்டு பக்கத்தில் வந்து நின்றார்.

என்னம்மா! அந்த ஸ்கூட்டி வண்டி உன்னோடதுதானே?

ஆ... ஆ... ஆமா...!"

பின்னே என்னம்மா தயக்கம்...? வண்டியை எடுத்துட்டு போம்மா. நீ ஒரு ப்ரஸ் ரிப்போர்ட்டர். உனக்கு எவ்வளவோ வேலைகள் இருக்கும்."

யாழினியின் தொண்டையில் எச்சில் அவஸ்தையா இறங்கியது.

ஸ்... ஸ... ஸார்! நீங்க சரியில்லை... உ...உங்க பேச்சு சரியில்லை, என்னோட ஸ்கூட்டியைப் பார்ட் பார்ட்டா பிரிச்சுப் போட்டுட்டு, 'வண்டியை எடுத்துட்டு போ'ன்னு சொன்னா என்ன அர்த்தம்?"

நீ இந்த இடத்தைவிட்டு போகக் கூடாதுன்னு அர்த்தம்" யாழினியின் முகத்தில் கலவரம் பரவியது. இருதயம் ஒரு போர்க்கால முரசா மாறியிருக்க சுற்றும் முற்றும் பார்த்தாள். பரசுராம் உதட்டோரம் ஒரு கபடப் புன்னகையை நெளியவிட்டார்.

என்ன அப்படி பார்க்கிறே...? இன்னிக்கு உனக்கும் நாள் சரியில்லை. எனக்கும் நாள் சரியில்லை. இந்த இடத்துக்கு நீ வந்திருக்கக் கூடாது. செக்யூரிட்டி ஏமாந்த நேரம் பார்த்து உள்ளே வந்துட்டே. வந்தவ இங்கே

யாரும் இல்லைன்னு செக்யூரிட்டி சொன்னதை நம்பி வெளியே போயிருக்கணும். போகலை. அந்த நேரம் பார்த்து உள்ளேயிருந்த நான் இருமிட்டேன். அப்படி நான் இருமியதை நீ கேட்டிருக்கக்கூடாது கேட்டுட்டே. அதனால நான் வெளியே வந்து உன் கூட பேச வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. சரி, ஏதோ பேசி அனுப்பிடலாமேன்னு பார்த்தேன். பேசினேன். அப்படி நாம பேசிட்டிருக்கும்போது உனக்கு வெளியேயிருந்து செல்ஃபோன் அழைப்பு வந்திருக்கக் கூடாது. வந்தது. செல்ஃபோனை எடுத்துப் பேசிட்டிருக்கும் போது சிக்னல் சரியா கிடைக்கலைன்னு சொல்லி எழுந்து ஜன்னல் பக்கம் நீ போயிருக்கக்கூடாது. போனே! செல்ஃபோன்ல பேசி முடிச்சுட்டு திரும்பும் போது ஜன்னலுக்கு வெளியே நடந்ததை நீ பார்த்து இருக்கக்கூடாது. பார்த்துக்கிட்டே. யாராவது ஒரு தப்பு பண்ணினாலே எனக்குப் பிடிக்காது. நீ இன்னிக்கு வந்த கொஞ்ச நேரத்திலேயே இத்தனைத் தப்பு பண்ணியிருக்கே! எனக்குப் பிடிக்குமா என்ன நீயே சொல்லு...!"

பரசுராம் ஏற்ற இறக்கத்தோடு மெதுவான குரலில் பேசப் பேச, யாழினியின் இருதயம் உச்சபட்ச பயத்தில் ஓர் இரும்புக் குண்டாய் மாறி கனத்தது. அடி வயிற்றில் அவஸ்தையான அமிலச்சுரப்பு.

இக்கட்டான நேரங்களில் பயப்படக்கூடாது, துணிச்சலா இருப்பது போல் காட்டிக் கொள்ள வேண்டும் என்று நகுல் எப்போதோ சொன்னது இப்போது யாழினியின் மூளையில் ஒரு தீப்பொறி போல் மின்ன, அவள் இரண்டடி பின் வாங்கினாள். சற்றுமுன் வரை பரசுராமுக்குக் கொடுத்து வந்த மரியாதையைக் கால்களுக்குக் கீழே போட்டு மிதித்து விட்டு குரலை உயர்த்தினாள்.

இதோ பார்! நான் இங்கேயிருந்து வெளியே போகலைன்னா உனக்குத்தான் ஆபத்து. ஏன்னா... நான் இங்கே வந்து உன்னைப் பார்த்துப் பேசற விஷயம் ‘பரஸ்பரம்’ நிர்வாகி மங்கையர்க்கரசிக்குத் தெரியும்."

பரசுராமின் முகம் இலேசா வெளிறிய விநாடி - அவருடைய இடது உள்ளங்கையில் அடைக்கலமாகியிருந்த செல்ஃபோன் மெலிதாய் ரிங்டோனை வெளியிட்டது. எடுத்துப் பார்த்தார்.

மறுமுனையில் செக்யூரிட்டி நரசிம்மன். குரலில் பதற்றம்.

அய்யா!"

என்ன?"



போலீஸ் கமிஷனர் உள்ளே வந்துட்டிருக்கார்...!" சட்டென்று செல்ஃபோனை அனைத்து பரசுராம் பக்கத்து அறையைப் பார்த்து குரல் கொடுத்தார்.

மனோஜ்"

அடுத்த விநாடியே பனியனும் லுங்கியும் அணிந்த அந்த உயரமான திடகாத்திர இளைஞன் வெளிப்பட்டான். மார்பின் விஸ்தீரணம் பிரமிக்க வைத்தது. தோள் பட்டைகளில் உருக்கிய எஃகா சதை திரட்சி எண்ணெய்ப் பூசிய தினுசில் மினுமினுத்தது.

அய்யா!"

இவளை பேக் பண்ணு. சத்தம் கேட்கக்கூடாது. கமிஷனர் உள்ளே வர்றதா தகவல்.

பரசுராம் சொல்லிக் கொண்டிருக்கும் போதே ஓடயத்தனித்த யாழினியின் மேல் ஒரு புலியாய்ப் பாய்ந்தான் மனோஜ். தொண்ணூறு கிலோ எடையுடன் கூடிய அவனுடைய உடம்பு தன் மீது மோதியதில் நிலை குலைந்து போனாள் யாழினி. கத்த முயன்றவளின் வாய் அவனுடைய அகலமான வலது கை விரல்களால் சாத்தப்பட்டது. இடது கையால் யாழினியின் உடம்பை ஒரு பூச்செண்டு போல் சுலபமாய் தூக்கிக் கொண்டு ஒரு விநாடிக்கும் குறைவான நேரத்தில் மின்னலாய் மறைந்தான்.

அதே விநாடி- வாசற்படிகளுக்கு எதிரேயிருந்தமே ஃப்ளவர் மரத்தின் நிழலில் அந்த போலீஸ் ஜீப் மெதுவாய் வந்து நின்று தன்னுடைய இன்ஜின் உதறலை நிறுத்திக் கொண்டது.

ஐம்பதுகளின் ஆரம்பத்தில் இருந்த கமிஷனர் ராமாமிர்தம், யூனிஃபார்மைத் தவிர்த்துவிட்டு வெள்ளை சர்ட்-வெள்ளை பேண்டில் இருந்தார். முடி கொட்டிப்போன மண்டை வெயில் பட்டு மின்னியது. கையில் ஒரு ஃபைலுடன் இறங்கிய வரை பரசுராம் எதிர் கொண்டார்.

வணக்கம் கமிஷனர் ஸார்."

ராமாமிர்தம் வேண்டா வெறுப்பா அந்த வணக்கத்தை கையசைப்பால் ஏற்றுக் கொண்டபடி படிகளில் ஏறினார்.

ஒரு பத்து நிமிஷம் பேசணும்!"

என்கொயரின்னு சொல்லுங்க..."

என்கொயரின்னு சொன்னா உங்களுக்குக் கோபம் வரும். அதனால் தான் அப்படிச் சொல்லலை..."

இருவரும் எதிரெதிர் நாற்காலிகளில் உட்கார்ந்தார்கள். சில விநாடிகளுக்கு அங்கே வேண்டாத ஒரு மௌனம் நிலவியது. பரசுராம் அந்த மௌனத்தைக் கலைத்தார்.

நல்ல வெயில்ல வந்திருக்கீங்க... மோர் கொண்டு வரச் சொல்லட்டுமா...?"

நான் என்கொயரிக்கு... போற இடத்துல எதையும் சாப்பிடறதில்லை."

ஓ... ஸாரி...! நீங்க ஏற்கெனவே இதைச் சொல்லியிருக்கீங்க! நான் தான் மறந்துட்டேன்!"

இனிமே மறக்காதீங்க"

கமிஷனருக்கு இன்னமும் என் மேல கோபம் இருக்குப் போலிருக்கு... கோபம் உடம்புக்கு நல்லதில்லை கமிஷனர் ஸார்..."

இது நியாயமான கோபம். உடம்பை ஒண்ணும் பண்ணாது" எரிச்சலாய்ச் சொன்ன கமிஷனர் தன் கையில் வைத்து இருந்த ஃபைலைப் பிரித்தார்.

பரசுராம்! போன வாரம் தான் என்கொயரிக்காக இங்கே வந்த போது உங்ககிட்ட 'நீங்க எந்தெந்த வெளிநாடுகளுக்குப் போயிருக்கீங்கன்னு கேட்டேன். அதுக்கு நீங்க சிங்கப்பூர், மலேசியா தவிர வேற எந்த வெளிநாட்டுக்கும் போனதில்லைன்னு சொன்னீங்க... ஞாபகம் இருக்கா?"

நல்லாவே இருக்கு..."

ஆனா நீங்க சீனா போயிருக்கீங்க.."

"அட... எப்போ..?"

ஆறுமாசத்துக்கு முந்தி! அதாவது டிசம்பர் மாசம் பதினாறாம் தேதி டெல்லியிலிருந்துப் புறப்பட்டு பீஜிங் போயிருக்கீங்க... இதோ அதுக்கான எவிடென்ஸ் ஃப்ளைட் நெம்பர். நீங்க டிக்கெட் புக் பண்ணின ஏஜென்ஸியோட நேரம், பீஜிங்கில் நீங்க தங்கின ஹோட்டல், பார்த்த நபர்கள், போன இடங்கள் எல்லாமேயிருக்கு... ம்... பாருங்க ஃபைலை..."

பரசுராம் சலனமில்லாத முகத்தோடு ஃபைலைப் புரட்டிப் பார்த்துவிட்டு மௌனமாய் அதை மறுபடியும் கமிஷனரிடம் கொடுத்தார்.

இப்ப என்ன சொல்றீங்க பரசுராம்?"

பீஜிங் போனது இப்பத்தான் ஞாபகத்துக்கு வருது... ஸாரி கமிஷனர் ஸார்! அன்னிக்கு நான் சொல்ல மறந்துட்டேன்..."

இதை நீங்க மறக்கலை... என்கிட்டயிருந்து மறைச்சுட்டீங்க.."

அப்படின்னு நீங்க நினைச்சா நான் அதுக்கு பொறுப்பில்லை. பீஜிங் போயிட்டு வந்தது எனக்கு சுத்தமா ஞாபகம் இல்லை..."

நம்பற மாதிரி இல்லையே?"

ஒரு நிமிஷம்!" என்று சொன்ன பரசுராம் தன் கையில் இருந்த செல்ஃபோனை உசுப்பிப் பேசினார்.

மனோஜ்!" ஏதாச்சும் வேலையா இருக்கியா?"

இல்லீங்கயா. நீங்க கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி குடுத்த வேலையைக் கூட முடிச்சுட்டேன்."

சரி...! என்னோட மேஜை ட்ராயர்ல நீளமா வெள்ளைக் கவர் ஒண்ணு இருக்கும். அதை எடுத்துட்டு வா..."

சரிங்கயா!"

பரசுராம் செல்ஃபோன் தொடர்பைத் துண்டித்து விட்டு ராமாமிர்தத்தை ஏறிட்டார்.

நான் பீஜிங் போனதை கன்ஃபர்ம் பண்ணிக்கத் தான் இந்த வேகாத வெயிலில் வந்தீங்களா... கமிஷனர்ஸார்?"

போலீஸ்காரனுக்கு வெயிலும் மழையும் ஒண்ணுதான்! சரி, எதுக்காக பீஜிங் போனீங்க...?"

சும்மா... சைட் ஸீயிங்தான்...! சீனப் பெருஞ்சுவரைப் பார்க்கணும்ன்னு ரொம்ப நாளாவே ஆசை, அதான் போயிட்டு வந்தேன்!"

பரசுராம்! நீங்க... சொல்ற பொய்கள் அழகாயிருக்கு. ஆனா அந்தப் பொய்களுக்கு ஆயுசுகம்மி...!"

பரசுராம் சிரித்தார்.

பொய்களை உண்மைகளாகவும் உண்மைகளை பொய்களாகவும் கற்பனை பண்ணிக் கொள்கிற ஒரே டிபார்ட்மென்ட் உங்க போலீஸ் டிபார்ட்மெண்ட் தான்!"

நீங்க என்னிக்குமே இப்படி சாமார்த்தியமா பேசிட்டு இருக்க முடியாது. இந்த இடம், சேரிடபிள் ட்ரஸ்ட் சட்ட விதிகளுக்கு உட்படாமல் தன்னிச்சையா நடத்தப்பட்டு வந்திருக்கு என்கிற உண்மையைக் கோர்ட் ஒத்துகிட்டு ட்ரஸ்ட்டை தொடர்ந்து நடந்த தடை போட்டிருக்கு என்கிற உத்தரவை மறந்துட வேண்டாம் பரசுராம்?"

தடை உத்தரவுதானே போட்டிருக்கு... அது ஒண்ணும் தீர்ப்பு இல்லியே?" பரசுராம் சொல்லிச் சிரித்துக் கொண்டிருக்கும்போதே உள்ளேயிருந்து மனோஜ் எதிர்ப்பட்டான். தன் கையில் வைத்து இருந்த வெள்ளை நிறக் கவரை நீட்டினான். அதை வாங்கிய பரசுராம் கமிஷனரிடம் நீட்டினார்.

இதை ஒரு பார்வை பார்த்துக்குங்க கமிஷனர் ஸார்."

என்ன இது...?"

என்னோட மெடிக்கல் ரிப்போர்ட். இனிக்கு சிட்டியில் இருக்கிற நெம்பர் ஒன் நியூரோ ஸ்பெஷலிஸ்ட் சர்வேஸ்வரன் கிட்டே போன வாரம் போனேன். எனக்கு இருக்கிற மறதி நோயைப் பத்திச் சொன்னேன். அவர் என்னை தரோவா செக் பண்ணி மூளையை ஸ்கேன் பண்ணிப் பார்த்துட்டு எனக்கு என்ன பிரச்னைங்கிறதை ரிப்போர்ட்டாவே எழுதிக் குடுத்துட்டார். ரிப்போர்ட்டைப் படிங்க.. உண்மை என்னான்னு உங்களுக்குப் புரியும்."

கமிஷனர் ராமாமிர்தம் கவரை வாங்கிப் பிரித்தார். உள்ளேயிருந்து கம்ப்யூட்டர் உற்பத்தி செய்த தாள்கள் ஒவ்வொன்றாய் வெளிப்பட்டன, புரட்டிப் பார்க்க ஆரம்பித்தார். 'டிமென்ஷியா' என்கிற மறதி நோயின் பாதிப்பு பரசுராமுக்கு ஏற்பட்டு இருப்பதாக ரிப்போர்ட்டின் கடைசி வாசகம் அடிக்கோடிடப்பட்டு உறுதியாய்ச் சொல்லப்பட்டு இருந்தது. கவரை அவரிடமே நீட்டினார் ராமாமிர்தம்.

என்ன கமிஷனர் ஸார்! ரிப்போர்ட்டை படிச்சீங்களா...? ஏதாவது புரியுதா...? புரியலைன்னா சோல்லுங்க... டாக்டரையே உங்க கூட பேச வைக்கிறேன்."

புரியுது... உங்களுக்கு டிமென்ஷியா என்கிற மறதி நோயின் பாதிப்பு இருக்கிறதா டாக்டர் மென்ஷன் பண்ணியிருக்கார்."

நான் ஆறு மாசத்துக்கு முன்னாடி பீஜிங் போன விஷயத்தை உங்ககிட்ட ஏன் சொல்லலைங்கிறதுக்கான காரணம் இப்ப உங்களுக்குத் தெரிஞ்சுருக்குமே..."

ராமாமிர்தம் எழுந்து கொண்டார்.

இட்ஸ் ஓ.கே...! இன்னிக்கு உங்களுக்கு நாள் நல்லாயிருக்கு. நான் வர்றேன்..."

கமிஷனர் ஸார்...! என்கொய்ரி என்கிற பேர்ல இங்கே நீங்க என்னைப் பார்க்க வர்றது இது அஞ்சாவது தடவை. ஒவ்வொரு தடவை வரும்போது என்னைப் பத்தின ஒரு பரபரப்பான செய்தியோடு வந்தீங்க. ஆனா இங்கே வந்த பிறகு அந்தச் செய்தி தண்ணியில நனைஞ்ச பட்டாசு மாதிரி ஆயிடுது... அடுத்த தடவையாவது ஒரு உருப்படியான செய்தியோடு வாங்க..." சொல்லிவிட்டு பரசுராம் சிரிக்க கமிஷனர் கையமர்த்தினார்.

இப்ப சிரிக்க வேண்டாம்... கடைசியில் யார் சிரிக்கறாங்களோ அவங்க தான் ஜெயிச்சவங்க...!" சொன்ன கமிஷனர் ஒரு கோபத் நடையோடு, வேகமாய்ப் போய் மரத்தடியில் நின்ற ஜீப்பில் ஏறிக் கொண்டார்.

ஜீப் புகை தள்ளிப் பயணித்து காம்பௌண்ட் கேட்டைத் தாண்டும் வரை மௌனம் காத்த பரசுராம் பிறகு தனக்கு எதிரே நின்றிருந்த மனோஜை ஏறிட்டார்.

அந்த பத்திரிகைக்காரியை என்ன பண்ணினே?"

அய்யா! அவ சாமான்யப்பட்ட பொண்ணில்லை. தற்காப்புக்கலை எல்லாம் கத்து வெச்சுருக்கா. என்னையே தாக்கப்பார்த்தா. ஒரு கட்டத்துல என்கிட்டேயிருந்து தப்பிச்சுடுவாளோன்னுகூட பயந்துட்டேன்..."

அப்புறம்...?"

வேற வழியில்லாம 'நியூட்ரோவேட்' ஸ்ப்ரேயை எடுத்து அவமுகத்துல ஸ்ப்ரே பண்ணிட்டேன். ஒரு நாலுமணி நேரத்துக்கு இனி கண் விழிக்கமாட்டா!"

எங்கே படுக்க வெச்சுருக்கே?"

மாடிப்படிக்குக் கீழேயுள்ள அண்டர் க்ரௌண்ட் ரூமுக்குள்ளே" என்று சொன்ன மனோஜ் யாழினியின் வானிடி பேக்கை பரசுராமிடம் கொடுத்தான்.

அய்யா! இந்த கைப்பையில் ஒரு செல்ஃபோனும் ஆயிரத்துச் சொச்ச ரூபாயும் ஒரு ஏ.டி.எம். கார்டும் இருக்கு...!"

அந்த ஏ.டி.எம். கார்டை எரிச்சு சாம்பலாக்கிடு!"

சரிங்கயா...!"

அப்புறம் இன்னொரு விஷயம், கமிஷனர் இங்கே அடிக்கடி வர ஆரம்பிச்சுட்டார். இங்கே நடக்கிற நிழலான காரியங்களை தரமணியில் இருக்கிற பண்ணை வீட்டுக்குக் கொண்டு போயிடணும்!"

எப்போன்னு சொல்லுங்கய்யா... நான் ஏற்பாடு பண்ணிடறேன்!" மனோஜ் சொன்ன விநாடி- யாழினியின் கைப்பையில் இருந்த செல்ஃபோன் குறைந்த டெஸிபலில் ரிங்டோனை வெளியிட்டது. செல்ஃபோனை எடுத்து அழைப்பது யார் என்று பார்த்தார். டிஸ்ப்ளேயில் 'மங்கையர்க்கரசி'யின் பெயர் விட்டு விட்டு ஒளிர்ந்தது.

செல்ஃபோனில் ரிங்டோன் போய்க் கொண்டிருக்க, பரசுராம் நெற்றி வியர்த்து பதற்றத்தோடு அதையே பார்த்துக் கொண்டிருந்தார். மூளை வேகமாய் யோசித்துக் கொண்டு இருந்தது. ஃபோனை எடுப்பதா... வேண்டாமா...?

'வேண்டாம். இப்போது ஃபோனை அட்டெண்ட் செய்யாமல் இருப்பது தான் உத்தமம். எடுத்துப் பேசினால் ஏதாவது பொய் சொல்ல வேண்டியிருக்கும்!'

இருபது விநாடிகள் வரை ஒலித்த செல்ஃபோன் பிறகு வாயை சாத்திக் கொள்ள பரசுராம் மனோஜைப் பார்த்தார்.

மனோஜ்!"

அய்யா...!"

அந்த ஃபோனை எடுத்து இப்ப வந்த இன்கம்மிங் கால் நம்பர்க்கு நான் சொல்றபடி ஒரு மெஸேஜ் அனுப்பு!"

மனோஜ் தலையை ஆட்டியபடி யாழினியின் செல்ஃபோனை எடுத்துக்கொள்ள பரசுராம் சொன்னார்.

மன்னிக்கவும். பரசுராம் அவர்களை இன்றைக்கு என்னால் சந்திக்க முடியாது. காரணம் அதற்குள் வேறு ஒரு அவசர வேலை வந்துவிட்டது. ஊழல் புகார்களில் சம்பந்தப்பட்ட ஒரு அரசியல் தலைவரின் காரை என் ஸ்கூட்டியில் பின் தொடர்ந்து போய்க் கொண்டிருக்கிறேன். ஒரு மணி நேரம் கழித்து நானே செல்ஃபோனில் உங்களைத் தொடர்பு கொள்கிறேன் - யாழினி."

மனோஜ் மெஸேஜ் ஆப்ஷனுக்குப் போய் க்ரியேட் மெஸேஜிங் பரசுராம் சொன்னதை அப்படியே டைப் செய்து அனுப்பினான். அடுத்த சில விநாடிகளில் மங்கையர்கரசியிடமிருந்து. 'இட்ஸ் ஓ.கே. யாழினி. பரசுராமைப் போய்ப் பார்ப்பது ஒரு முக்கியமான விஷயமில்லை. உனக்கு எப்போது நேரம் கிடைக்கிறதோ, அப்போது போய் பார்த்தால் போதும்...!

அந்த மெஸேஜைப் படித்ததும் பரசுராமின் உதடுகளில் ஒரு புன்முறுவல் பரவியது.

மனோஜ்! இனி யாழினி நம்ம சொத்து. அவ இங்கே வந்ததுக்கான எல்லா சாட்சியங்களையும் தார் பூசி அழிச்சுட்டோம். இந்த செல்ஃபோனை அவளோட சிம்கார்டோடு சேர்த்து எரிச்சுடு...!''

சரிங்கயா...!''

அப்படியே யாழினி ஓட்டிட்டு வந்த ஸ்கூட்டி ஸ்பேர் பார்ட்ஸ்களை மூட்டையாய்க் கட்டி சிட்டியை விட்டுத்தள்ளி ஆள் நடமாட்டம் இல்லாத இடமாய்ப் பார்த்து ஆழமாய் குழி தோண்டிப் புதைச்சுடு. எங்கேயாவது ஒரு சின்னத் தப்பு நடந்தால் கூட மாட்டிக்குவோம்."

எந்தத் தப்பும் நடக்காதுயா...!"

சரி... நீ போய் யாதவ்வை வரச் சொல்லு..." மனோஜ் தலையாட்டிவிட்டு உள்ளே வேகமாய்ப் போக, பரசுராம் அங்கிருந்த சோபாவுக்கு சாய்ந்தார். தன் சர்ட் பாக்கெட்டில் இடம் பிடித்திருந்த செல்ஃபோனை எடுத்து அதை உயிர்ப்பித்து ஒரு எண்ணைத் தொடர்பு கொண்டார். மறுமுனையில் ஒரு பெண்ணின் குரல்.

எஸ்...!"

டாக்டர் உத்தண்டராமன் ப்ளீஸ்" நீங்க?"



நான் பரசுராம். அவரோட ஃப்ரெண்ட், டாக்டர் கிட்டே பேசணும். நீங்க அவரோட மனைவியா?"

ஆமா... அவர் இப்போ காரை ட்ரைவ் பண்ணிட்டிருக்கார். ஏதாவது முக்கியமான விஷயமா?"

ஆமா...!"

ஒரு நிமிஷம்!"

பரசுராம் காதில் ஒட்ட வைத்த செல்ஃபோனோடு காத்திருக்க, அடுத்த சில விநாடிகளில் டாக்டர் உத்தண்டராமனின் குரல் கேட்டது.

சொல்லுங்க பரசுராம்... என்ன இந்த நேரத்துல போன்...?"

காரணம் இல்லாமே ஃபோன் பண்ணுவேனா?"

விஷயத்தைச் சொல்லுங்க!"

பூவில் செய்த ஆயுதம்"

அட... எப்போ...?"

கொஞ்ச நேரத்துக்கு முந்தி...?"

எப்படி...?"

நீங்க காரை ஓட்டிகிட்டு இருக்கீங்க. உங்க ஒஃப் பக்கத்துல உட்கார்ந்துட்டிருக்காங்க. பூவில் செய்த ஆயுதத்தைப் பத்தி சொல்ல முடியுமா...?"

சரி... ராத்திரி எட்டு மணிக்கு வர்றேன்"

அவ்வளவு நேரமாகுமா?"

தரமணியில் ஒரு அபார்ட்மெண்ட் கன்ஸ்ட்ரக்ஷன்... அதைப் பார்க்கத்தான் நானும் என்னோட ஒய்ஃப்பும் போய்கிட்டிருக்கோம். நான் ராத்திரி எட்டு மணி சுமார்க்கு வந்துடறேன்..."

லேட் பண்ணாமே வாங்க டாக்டர்..."

ஷ்யூர்... ஷ்யூர்...!"

பரசுராம் பேச்சை முடித்துக்கொண்டு செல்ஃபோனை அணைத்த விநாடி அந்த யாதவ் வந்து அவருக்கு முன்பாய் நின்றிருந்தான். நடுத்தர வயது. தொப்பையும் வழுக்கையும் போட்டிப் போட்டுக் கொண்டு புஷ்டியாய் இருந்ததில் சற்று வயோதிகமாய்த் தெரிந்தான்.

அய்யா...!"

வேன் ரெடியா இருக்கா?"

இருக்கய்யா..."

கொஞ்ச நேரத்துக்கு முந்தி இங்கே என்ன நடந்ததுன்னு உனக்குத் தெரியுமா யாதவ்?"

தெரியும்ங்கயா... மனோஜ் சொன்னான்."

என்ன சொன்னான்?"

போலிஸ் கமிஷனர் வந்துட்டுப் போனதா."

அதுக்கு முந்தி...?"

யாரோ ஒரு பொண்ணு வந்ததாகவும், செத்துப் போன ஹரிதாவை நம்ம ஆட்கள் வேனுக்கு கொண்டுட்டுப் போன போது அந்தப் பொண்ணு பார்த்துட்டதாகவும் சொன்னான்."

இப்போ அந்தப் பொண்ணை மயக்கத்துக்கு உட்படுத்தி நம்ம கஸ்டடிக்குள்ளே கொண்டு வந்துட்டோம். இனி அவ உயிரோடு வெளியே போக முடியாது. அதையும் சொன்னானா?"

சொன்னான்ங்கய்யா!"

இதோ பார் யாதவ்...! இனிமேல் ஹரிதா விஷயத்தில் நடந்த மாதிரியான தப்பு மற்ற பெண்களுக்கு நடக்கக்கூடாது. நடந்தா நான் சும்மா இருக்க மாட்டேன்... இது ஒண்ணும் விபச்சார விடுதி கிடையாது. ஒரு மருத்துவ ரீதியான உண்மையை விஞ்ஞான பூர்வமாகக் கண்டுபிடிக்கறதுக்காக டாக்டர்களின் உதவியோடு முயற்சி பண்ணிட்டிருக்கோம்."

அது எனக்கு தெரியும்யா..."

உனக்கு மட்டும் தெரிஞ்சு என்ன பிரயோஜனம்...? மருத்துவச் சோதனைக்கு உட்படுத்தப்பட்டிருந்த ஹரிதாவை நேத்து ராத்திரி நம்ம ஆட்கள்ல ஒருத்தன் குடிபோதையில் போய் ஃபோர்ஸ் பண்ணியிருக்கான். அவ செத்துட்டா... அப்படி கெடுக்க முயற்சி பண்ணினது யார்ன்னு உனக்குத் தெரியுமா யாதவ்...?"

தெரியலைங்கய்யா...! நானும் எல்லாரையும் விசாரிச்சுப் பார்த்துட்டேன்... யாருமே ஹரிதா கிட்ட தப்பா நடந்துக்க முயற்சி பண்ணலையாம்."

சரி! இனிமே நீ சிரமப்படாதே... ஹரிதாவோட மரணத்துக்கு யார் காரணங்கிறதை நான் கண்டுபிடிச்சுட்டேன்..."

யாதவ்வின் முகத்தில் இலேசா இருள் பரவியது.

அய்யா! அது யார்ன்னு நான் தெரிஞ்சுக்கலாமா?"

அதைச் சொல்லத்தானே உன்னைக் கூப்பிட்டேன்! அந்தக் கட்டிலுக்குக் கீழே கொஞ்சம் குனிஞ்சுப் பாரு..."

யாதவ் தயக்கத்தோடு குனிந்து பார்த்தான். கைகளையும் கால்களையும் பரப்பிக் கொண்டு ரத்தம் உறைந்துபோன பேண்ட் சட்டையோடு ஒரு உருவம் தெரிந்தது.

அய்யா! அ... அ... அது யார்ன்னு..."

வெளியே இழுத்துத்தான் பாரேன்...!" பரசுராம் சோபா திண்டில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டு சொல்ல, யாதவ் திகில் உறைந்துபோன விழிகளோடு கட்டிலுக்குக் கீழே மண்டியிட்டு உட்கார்ந்து, அந்த உருவத்தின் தோள்பட்டையைப் பிடித்து பலங்கொண்ட மட்டும் பிடித்து இழுத்தான்.

நிலைத்துப் போன கண்களோடு உருவம் வெளியே வந்தது. யாதவ் திடுக்கிட்டுப் போனவனாய் பரசுராமைப் பார்த்தான்.

அய்யா... இது... இது... உங்க அண்ணன் பையன் கைலாஷ்...?"

அவனேதான்...! நேரத்துராத்திரி இங்கே என்னைப் பார்க்க வந்தான். வரும்போதே போதையில் இருந்தான். என்னைப் பார்த்ததும் அழுதான். ‘சித்தப்பா! எனக்கும் அப்பாவுக்கும் சொத்து பிரிக்கிற விஷயத்துல கொஞ்சம் பிரச்னை. அவரோடு சண்டை போட்டுகிட்டு வீட்டை விட்டு வெளியே வந்துட்டேன். ஒரு ரெண்டு நாளைக்கு அப்பாவோட பார்வையில் படாமல் இங்கே இருக்கேன். அவரால என்னைப் பார்க்காமே ஒருநாள் கூட இருக்க முடியாது. ரெண்டு நாள் பார்க்காமே இருந்தார்னா தானா என்னோட வழிக்கு வந்துடுவான்னு சொன்னான்.

நானும் அவன் சொன்னதுல இருக்கிற நியாயத்தை புரிஞ்சுகிட்டு என்னோட ரூமுக்குப் பக்கத்துல இருக்கிற ஒரு ரூமிலேயே தங்கிக்கச் சொன்னேன். ராத்திரியில் எனக்குத்தான் சரியா தூக்கம் வராதே... ஏதோ சத்தம் கேட்டு அறைக்கு வெளியே வந்து பார்த்தேன். கைலாஷ் ஒரு திருட்டுப்பூனை மாதிரி சுற்றும் முற்றும் பார்த்துக்கிட்டு நிலவறையை நோக்கிப் போகிட்டு இருந்தான். நானும் ஃபாலோ பண்ணினேன். நிலவறையில் அறைகுறை மயக்கத்தில் இருந்த ஹரிதாவை மூர்க்கமாய் கெடுக்க முயற்சி செய்ய, நான் அவனை எதிர்த்துப் போராடிப் பார்த்தேன். என்னால் முடியலை. வேற வழியில்லாமே கைலாஷை என்னோட சைலன்ஸர் பிஸ்டலாலே சுட்டுத்தான் ஆக வேண்டியதாயிடுச்சு... இவன் உயிரைவிட்ட கொஞ்ச நேரத்திலேயே ஹரிதாவும் இறந்துட்டா."

அ... அ... அய்யா!"

என்ன அப்படிப் பார்க்கிறே யாதவ்...? நாம பண்ணிட்டு இருக்கறதே தப்பான காரியம். இந்தத் தப்பான காரியத்தைச் சரியா பண்ணிட்டு இருக்கிற வரைக்கும் நமக்கு எந்தப் பிரச்னையும் இல்லை...இது எது மாதிரியான பிசினஸ்னு உனக்குத் தெரியும். கோடிக் கணக்கில் பணம் கொட்டப் போகிற பிசினஸ். இதுக்கு இடைஞ்சலா யார் இருந்தாலும் சரி, குறுக்கே யார் வந்தாலும் சரி, என்னோட சைலன்ஸர் பிஸ்டலில் இருக்கிற தோட்டாவை வாங்கிக்க வேண்டியதுதான். உயிரை விட வேண்டியதுதான்."

இதோ பார் யாதவ்... கைலாஷ் இங்கே வந்த விஷயமும் உயிரைவிட்ட விஷயமும் உனக்கும், எனக்கும் மனோஜுக்கும் மட்டும்தான் தெரியும். ஹரிதாவோட பாடியை டிஸ்போஸ் பண்ணும் போது இவனோட உடம்பையும் சேர்த்து டிஸ்போஸ் பண்ணிடு. விஷயம் எந்த ஜென்மத்திலும் என்னோட அண்ணனுக்குத் தெரியக்கூடாது."

அய்யா! இதுவரைக்கும் ஹரிதாவையும் சேர்த்து ஏழு பேரை டிஸ்போஸ் பண்ணியிருக்கேன். பிரச்னை நம்ம பக்கம் எட்டிக் கூடப் பார்த்தது இல்லை. இந்த டிஸ்போஸிலும் அப்படித்தான் இருக்கும். நீங்க உங்க முக்கியமான பிசினஸைக் கவனியுங்கய்யா... நான் இந்த சில்லறை விஷயங்களைப் பார்த்துக்கிறேன்."

பரசுராம் சிரித்தார். நீயும் சரி, மனோஜும் சரி நீங்க ரெண்டு பேரும் எனக்கு ரெண்டு திருமலை மஹால் தூண்கள் மாதிரி. நீங்க இருக்கும்போது எனக்கு என்ன கவலை...?"

அய்யா!"

என்ன சொல்லு...?"

ஒரு புதுப்பொண்ணு வந்திருக்கிறதா மனோஜ் சொன்னான். யாரய்யா அந்தப் பொண்ணு?"

பேரு யாழினி... பத்திரிகைக்காரப் பொண்ணு" பரசுராம் சொல்லிக் கொண்டிருக்கும்போதே அவருடைய செல்ஃபோன் அழைத்தது. எடுத்து காதுக்கு ஒற்றினார்.

யாரு...?"

அங்கிள்...! நான் அட்சய் பேசறேன்..."

என்ன அட்சய்...?"

அம்மாவுக்கு உடம்பு ரொம்பவும் முடியலை அங்கிள்... திடீர்ன்னு பி.பி. ரெய்ஸாகி அன்கான்ஸியஸ் ஸ்டேஜுக்குப் போயிட்டாங்க. மூளையில் ரத்தக்குழாய் வெடிச்சுருக்கலாம்னு டாக்டர் சந்தேகப்படறார். அப்பா வேற ஊர்ல இல்லை... எனக்கு என்ன பண்றதுன்னு தெரியலை. நீங்க உடனே புறப்பட்டு டாக்டர் உமையாளோட ஹாஸ்பிடலுக்கு வர முடியுமா...?"

பயப்படாதே அட்சய்! அம்மாவுக்கு ஒண்ணும் ஆகாது. நான் உடனே புறப்பட்டு ஹாஸ்பிடலுக்கு வர்றேன்... நீ தைரியமாய் இரு..."

பரசுராம் செல்ஃபோனை அணைத்து இடது உள்ளங்கையில் அதக்கிக் கொண்டு எதிரில் நின்றிருந்த யாதவ்வை ஏறிட்டார்.

யாதவ்...!"

அய்யா...!"

நான் இப்போ அவசர வேலையா வெளியே கிளம்பறேன். வர்றதுக்கு எப்படியும் சாயந்தரம் ஆறு மணிக்கு மேல் ஆயிடும். நீயும் மனோஜும் கொஞ்சம் கவனமாய் இருந்து எல்லாத்தையும் பார்த்துக்கணும்"

நாங்க பார்த்துக்கிறோம்யா... இதை நீங்க சொல்லணுமா என்ன...?"

நான் இன்னிக்கு இப்படி சொல்றதுக்குக் காரணம் இருக்கு யாதவ். நமக்கு இன்னிக்கு நாள் சரியில்லை. எல்லாமே தப்பாவே நடந்துட்டு வருது. இனிமேலும் தப்பு நடக்கக்கூடாது."

அய்யா! இதுக்கு முன்னாடியும் இது மாதிரியான தப்புகள் நடந்திருக்கு... அதையெல்லாம் நாம சரியானபடி சுத்தம் பண்ணியிருக்கோம்."

இருந்தாலும் இன்னிக்கு நம்ம எல்லைக்குள்ளே ஒரு பத்திரிகைக்காரி உள்ளே நுழைஞ்சுட்டா. அவ என்னைப் பார்க்க வந்தது வெளியே யார் யார்க்குத் தெரியும்னு தெரியலை... அவளை யாராவது தேடிட்டு இங்கே வரலாம்... அப்படி தேடிட்டு வர்றவங்களை பதற்றம் இல்லாமே எதிர்கொள்ளணும். அவங்களுக்குச் சந்தேகம் வராதபடி பேசி அனுப்பணும்."

அதையெல்லாம் நானும் மனோஜும் பார்த்துக்கிறோம்யா."

அப்புறம்... ஹரிதாவையும், என்னோட அண்ணன் மகன் கைலாஷையும் எப்படிச் சுத்தம் பண்ணணுமோ அப்படிப் பண்ணிடு. போலீஸோட வாசனை நாம இருக்கிற திசைப்பக்கம் அடிக்கக் கூடாது. யாழினிக்கு மயக்கம் தெளியற மாதிரி இருந்தா மறுபடியும் ஓர் இன்ஜெக்ஷன் போட்டுடு. அவளை படப்பையில் இருக்கிற பண்ணை வீட்டுக்கு விடியறதுக்குள்ள கொண்டுபோயிடணும்."

யாதவ் தலையாட்டிக் கொண்டிருக்க, பரசுராம் வெளியே போர்டிகோவில் நின்றிருந்த அந்த வெள்ளை நிற அம்பாசிடர் கார்க்கு வந்து ட்ரைவிங் இருக்கையை ஆக்ரமித்தார். இக்னீஷியனை உசுப்ப கார் உயிர்ப் பிடித்தது. வேகம் எடுத்து அடுத்த நிமிடத்தின் ஆரம்பத்தில் கிண்டி சாலையின் போக்குவரத்தில் கலந்தது.

சரியா ஒரு மணி நேரப் பயணம் டாக்டர் உமையாள் ஹாஸ்பிடலின் வளாகத்துக்குள் நுழைந்து நிழலைப் பரப்பி வைத்திருந்த ஒரு மரத்தடியில் காரை நிறுத்திவிட்டு கீழே இறங்கினார் பரசுராம். கண்ணாடிச் சுவர்களாலான ரிசப்ஷனில் உட்கார்ந்திருந்த அட்சய், பரசுராமைப் பார்த்ததும் பதற்றம் பரவிக் கொண்ட உடம்போடு வெளிப்பட்டு அவரை எதிர் கொண்டான்.

வாங்க அங்கிள்!"

அம்மா, இப்போ எப்படியிருக்காங்க அட்சய்...?"

இன்னமும் மயக்கத்திலிருந்து மீளலை. அன்கான்ஷியஸ் ஸ்டேஜ்லதான் இருக்காங்க" இருவரும் பேசிக் கொண்டே உள்ளே போனார்கள்.

டாக்டர் உமையாள் என்ன சொல்றாங்க?"

மூளையில் இருக்கிற ஏதாவது ஒரு ரத்தக்குழாய் 'பர்ஸ்ட்' ஆகியிருக்க வாய்ப்பு இருக்குன்னு சொல்லியிருக்காங்க. பட், ஸ்கேன் ரிப்போர்ட் இன்னமும் வரலை."

டாக்டரம்மா ரூம்ல இருக்காங்களா? வா... பேசிடலாம்...! நீ ஒண்ணும் பயப்படாதே... அம்மாவோட உயிர்க்கு எந்த ஆபத்தும் வராது... இன்னிக்கு இருக்கிற மருத்துவ விஞ்ஞானத்துல ப்ளட் ப்ரஷரும், சுகரும் ஜலதோஷம் இருமலுக்கு சமமான நோய்கள். இன்னிக்கு ராத்திரிக்குள்ளே அம்மா நார்மலுக்கு வந்துடுவாங்க..."

ஸாரி அங்கிள்!"

எதுக்கு ஸாரி?"

அப்பா ஊர்ல இல்லாததால உங்களுக்கு ஃபோன் பண்ண வேண்டியதாயிடுச்சு. அப்பா ஃப்ளைட்ல இந்நேரம் டெல்லிக்குப் போயிட்டிருப்பார்."

இதோ பார் அட்சய்! நானும் உன்னோட அப்பாவும் தொழில் ரீதியான பார்ட்னர்ஸ் மட்டும் இல்லை. பரஸ்பரம் அன்பை மட்டும் பரிமாறிக் கொண்டு குடும்ப நண்பர்களாகவும் காலம் காலமாய்ப் பழகிட்டு இருக்கறவங்க. உனக்கு ஏதாவது ஒரு பிரச்னைன்னா நீ தாராளமாய் எந்த நேரத்திலும் கான்டாக்ட் பண்ணலாம்."

தேங்க்யூ அங்கிள்...!"

அப்புறம் இன்னொரு விஷயம் அட்சய்!"

சொல்லுங்க அங்கிள் "

நீ இன்னமும் கல்யாணத்தை தள்ளிப் போடறது சரியில்லை. நீ சீக்கிரமே ஒரு கல்யாணத்தைப் பண்ணிட்டு ஒரு பேரனையோ பேத்தியையோ பெத்துக் கொடுத்தா, உன் அம்மாவோட உடம்புல இருக்கிற ப்ளட் ப்ரஷரும் மத்த நோய்களும் காணாம போயிடும். உன்னோட அப்பா கோதண்டத்தோட உடம்பும் முன்னே மாதிரியில்லை. அது தெரியுமா உனக்கு?"

தெரியும் அங்கிள்..."

தெரிஞ்சும் ஏன லேட் பண்றே? உனக்குத்தான் வீட்ல முழு சுதந்திரம் கொடுத்து இருக்காங்களே...! அப்புறம் என்ன? உனக்குப் பிடிச்ச பொண்ணாய்ப் பாரு. என்கிட்டே சொல்லு, கல்யாணத்தை முடிச்சுடுவோம்.." பரசுராம் சொல்லி அட்சய் தலையாட்டிக் கொண்டிருக்கும் போதே டாக்டர் உமையாளின் அறை வந்தது.

இருவரும் அறைக்குள் நுழைந்தார்கள். செல்ஃபோனில் யாரிடமோ பேசிக் கொண்டிருந்தாள் டாக்டர் உமையாள்.

‘பரசுராமையும் அட்சயையும் பார்வையில் வாங்கிய டாக்டர் உமையாள், அவசர அவசரமாய்ப் பேச்சை முடித்துக்கொண்டு ஒரு சின்னப் புன்னகையோடு தனக்கு எதிரே இருந்த காலியான நாற்காலிகளைப் காட்டினாள்.

ப்ளீஸ்!"

உட்கார்ந்தார்கள்.

என்ன அட்சய்...! மிஸ்டர் பரசுராமுக்கும் ஃபோன் பண்ணிட்டே போலிருக்கு...!"

பயமாய் இருந்தது ஆன்ட்டி... அப்பா வேற ஊர்ல இல்ல. அதான் ஃபோன் பண்ணி விஷயத்தைச் சொன்னேன். அங்கிளும் உடனடியா புறப்பட்டு வந்துட்டார்."

யார் வந்து என்ன பண்ண அட்சய்? உங்க அம்மா ரோகிணியோட நிலைமை நாம சந்தோஷப்படற மாதிரி இல்லையே...?"

பரசுராம் பதற்றமாய் இடைமறித்தார்.

டாக்டர்! நீங்க என்ன சொல்றீங்க...?"

சொல்றதுக்கு என்ன இருக்கு...? ரோகிணியோட பி.பி.யை நான் சரியானபடி ட்ரீட்மெண்ட் கொடுத்து கண்ட்ரோல்ல வெச்சிருந்தேன். இந்த அட்சய் தேவையில்லாத ஒரு விஷயத்தை ரோகிணிகிட்டே சொல்லப் போக பி.பி. அதிகமாகி, மூளைக்குப் போகிற ஒரு ரத்தக் குழாயில் கசிவு ஏற்பட்டு இப்போ கிட்டத்தட்ட கோமாஸ்டேஜ். கார்டியால ஜிஸ்ட் நெற்றியைத் தேச்சுகிட்டு ‘அயாம் ஹெல்ப் லஸ்’ன்னு சொல்லிட்டுப் போறார். ஐ.ஸி.யூ.வில் இருக்கிற ரோகிணியைப் பார்க்கவே கஷ்டமாயிருக்கு. எப்ப நினைவு திரும்பும்னு என்னால யூகிக்க முடியலை..."

பரசுராமின் பார்வை இப்போது அட்சயின் மேல் நிலைத்தது- என்ன அட்சய்! டாக்டர் இப்படி சொல்றாங்க... ஏதோ தேவையில்லாத விஷயத்தை அம்மாகிட்டே சொல்லி அவங்களை டென்ஷன் படுத்தியிருக்கியாமே...?"

அந்த விஷயத்தை நானாகப் போய் சொல்லலை அங்கிள்; அம்மா கூப்பிட்டு கேட்டாங்க, நான் சொல்ல வேண்டியதாயிடுச்சு. நான் விஷயத்தைச் சொல்லும்போது அம்மா நார்மலாத்தான் இருந்தாங்க... நான் வீட்டை விட்டுக் கிளம்பும் போது அம்மா தூங்கிட்டு இருந்தாங்க. வேலையாள் மாரியப்பன்கிட்டே சொல்லிட்டு நான் கிளம்பிட்டேன்."

அம்மாவை டென்ஷன் படுத்தின அந்த விஷயம் என்ன?"

அது ஒண்ணுமில்லை அங்கிள்" அட்சய் நழுவ முயல உமையாள் பிடித்துக் கொண்டாள்.

ஒண்ணுமில்லையா...? இவர் கிட்டே நானே சொல்றேன். மிஸ்டர் பரசுராம்! இன்னிக்குக் காலையில் இவன் ஒரு முட்டாள்தனமான காரியம் பண்ணினான். இவனுக்கென்ன அழகில்லையா... பணம் இல்லையா.. படிப்பு இல்லையா... அந்தஸ்து இல்லையா... எல்லாத் தகுதிகளும் இவனுக்கு இருந்தும் ஒரு பத்திரிகையில் ரிப்போர்ட்டரா வேலை பார்க்கும் ஒரு பொண்ணுகிட்ட மண்டி போட்டு என்னைக் கல்யாணம் பண்ணிக்கிறியான்னு கேட்டான். அந்த ராங்கிக்காரி ‘சரித்தான் போடா நீயும் உன்னோட பணமும்’ன்னு சொல்லி கை நிறைய கரியை அள்ளி இவனோட முகத்துல பூசிட்டுப் போயிட்டா..."

பரசுராம் ஈரமான கையோடு மின் மெயின் ஸ்விட்ச்சை தொட்டுவிட்ட தினுசில் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

அ... அ... அந்தப் பொண்ணு பத்திரிகை ரிப்போர்ட்டரா?"

ஆமா..."

பேரு?"

யாழினி! ‘பூச்சரம்’பத்திரிக்கையில ரிப்போர்ட்டரா ஒர்க் பண்றா. பார்க்க லட்சணமாவும் இருப்பா. என்னைப் பேட்டி எடுக்க வந்த போது அட்ச அவளைப் பார்த்துட்டு அவளைக் கல்யாணம் பண்ணிக்க ஆசைப்பட்டான். தன்னோட ப்ரபோஸலை சொன்ன போது அவ ஒரு பெண் புலியா மாறி வார்த்தைகளால அட்சயை வதம் பண்ணிட்டா. நானும் அந்தப் பொண்ணு யாழினிகிட்டே அட்சயோட ஃபேமிலி பேக்ர்ரௌண்டைப் பத்தி எடுத்துச் சொல்லி கன்வின்ஸ் பண்ணப் பார்த்தேன். என்னையும் அவ மதிக்கலை."

பரசுராம் தன் மோவாயை யோசனையோடு தடவினார்.

அட்சய் மாதிரியான ஒரு பையனைக் கல்யாணம் பண்ணிக்கிறதுல அவளுக்கு என்ன பிரச்னையாம்?"

அதுக்கும் பதில் சொன்னாளே?"

என்ன சொன்னா?"

இது என்னோட பர்சனல் மேட்டர். இதை போனவாரம் எனக்கு அறிமுகமான உங்க ிட்டேயோ, கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி எனக்கு நீங்க அறிமுகப்படுத்தி வெச்ச அட்சய் கிட்டேயோ சொல்ல வேண்டிய அவசியமில்லைன்னு சொல்லிட்டா!"

ரொம்பவும் திமிர் பிடிச்சவளாய் இருப்பா போலிருக்கே?" அட்சயின் முகத்திலும் இப்போது கோப ரத்தம் பாய்ந்து சிவப்பான அவனுடைய முகத்தை பீட்ரூட் நிறத்துக்குக் கொண்டு போயிற்று.

அது திமிரில்லை அங்கிள்! மேதமை, ஆணவம், அகந்தை, அகங்காரம் இப்படி எல்லாமே கலந்த ஒரு அழகான ராட்சசி அந்த யாழினி. நான் அவகிட்டே என்னோட கல்யாண ப்ரப்போஸலை சொன்ன போது தன்னோட முகத்தை இயல்பாய் வெச்சட்டு ஒரு ‘ஸாரி’ சொல்லிட்டுப் போயிருக்கலாம். அதை விட்டுட்டு ஆணவமாய் எடுத்தெறிஞ்சு பேசி ஒரு ருத்ரதாண்டவமே ஆடிட்டுப் போயிட்டா"

உமையாள் பரசுராமை ஒரு சின்ன கேலிப் புன்னகையில் நனைத்தபடி பேசினாள்.

மிஸ்டர் பரசுராம்! அந்த யாழினி அட்சயை ஒரு டிஷ்யூ பேப்பர் மாதிரி கசக்கி வீசிட்டுப் போயிட்டாலும் இன்னமும் இவனுக்கு அவ மேல ஒரு ஸா்ப்ட் கார்னர் இருக்கு"

அட்சய் ஆவேசமாய் குறுக்கிட்டான்.

இல்ல ஆன்ட்டி... அந்த ஸாப்ட் கார்னர் எல்லாம் ஒரு மணி நேரத்துக்கு முன்னாடி வரைதான். இந்த நிமிஷத்திலிருந்து அவ என்னோட எதிரி. அம்மாவை கோமா நிலைக்கு கொண்டு போன அவளுக்கு என்னோட மனசுல இனி இடம் கிடையாது. அவ எப்படி ஒருத்தனை கல்யாணம் பண்ணிகிட்டு சந்தோஷமாய் வாழ்ந்துடறான்னு பார்த்துடறேன். இனிமே அவளுக்கு வரப் போகிற எல்லா நாட்களுமே கசப்பு தடவின நாட்களாய்த்தான் இருக்கும். ஒரு வினாடி கூடி நிம்மதியாய் இருக்க விடமாட்டேன். எல்லாத்துக்கும் மேலாய் இன்னொரு விஷயத்தையும் சொல்லிடறேன். என்னோட அம்மாவுக்கு ஏதாவது ஒண்ணு ஆயிடுச்சுன்னா அந்த யாழினியும் உயிரோடு இருக்கமாட்டா" கழுத்து நரம்புகள் புடைக்க, கோப ரத்தம் முகம் முழுவதும் பாய்கிற அளவுக்கு கத்தி, தன் இடது கை முஷ்டியால் அட்சய் மேஜையைக் குத்திய விநாடி...

அவனுடைய சட்டைப் பையில் இடம் பிடித்து இருந்த செல்்போன் சிணுங்கியது. எரிச்சலாய் எடுத்து அழைப்பது யார் என்று பார்த்தான். டிஸ்ப்ளேயில் நகுல் பெயர் ஒளிர்ந்தது. கோபத்தை ஜீரணித்துக்கொண்டு செல்்போனைக் காதுக்கு ஒற்றினான்.

சொல்லு நகுல்...!"

அம்மாவுக்கு இப்போ எப்படியிருக்கு? ஒண்ணும் பிரச்னையில்லையே?"

கொஞ்சம் பிரச்னைதான்"

என்னடா சொல்றே?"

அம்மா இப்போ கோமா ஸ்டேஜில்"

டாக்டர் என்ன சோல்றார்?"

நோ பாஸிட்டீவ் ரிப்ளை"

கவலைப்படாதே அட்சய்! அம்மாவுக்கு சீக்கிரமே சுய உணர்வு வந்துடும். உன்னோட நல்ல மனசுக்கு எல்லாமே நல்லபடியா நடக்கும். நீ இன்னிக்கு உன்னோட கார்ல எனக்கு லி்ப்ட் கொடுத்தே... அந்த யோகமோ என்னவோ எனக்கு ஒரு நல்ல வேலை கிடைச்சுடுச்சு. என்னோட ‘ஸ்கில் செட்’க்கு ஏற்ற மாதிரியான வேலை...! வேலையில் ஜாய்ன் பண்ண, நாளைக்கு ்ப்ளைட்ல புனே கிளம்பறேன்!"

கங்கிராட்ஸ்!"

என்னடா... இவ்வளவு டல்லடிக்கிறே...? உனக்கு அம்மாவைப் பத்தின கவலை மட்டும் இல்லை. வேற ஏதோ ஒண்ணும் அதுல மிக்ஸ் ஆகியிருக்குன்னு நினைக்கிறேன்...!"

அதெல்லாம் ஒண்ணுமில்லை."

நோ... நோ... நான் ஒத்துக்கமாட்டேன்... இன்னிக்கு நான் உன்னோட கார்ல ஏறும்போதே நீ விரக்தி மனப்பான்மையோடு இருந்தே...' யாரோ ஒரு பொண்ணுகிட்ட நீ மேரேஜ் ப்ரோப்போஸலை வெச்சபோது அவ உன்னைக் கல்யாணம் பண்ணிக்க மாட்டேன்னு சொன்னதாக நீ என்கிட்ட சொன்னே. உண்டா... இல்லையா...?"

ஆ... ஆமா...!"

யார்ரா அந்த ராங்கிக்காரி? அவளோட செல் நம்பரை எனக்கு எஸ்.எம்.எஸ். பண்ணு. அவளை 'உண்டு இல்லை'ன்னு ஆக்கிடறேன்!"

நகுல் செல்ஃபோனில் கோபமாய்க் குரலை உயர்த்திப் பேச, அட்சய் வரவழைத்துக் கொண்ட புன்னகையோடு சொன்னான்.

வேண்டாம் நகுல்... இது என்னோட பர்சனல் மேட்டர். அதிலும் ஒரு பெண் சம்பந்தப்பட்ட விஷயம். நானே இதை எப்படி ஹேண்டில் பண்ணணுமோ அப்படிப் பண்ணிக்கறேன். இதுல நீ மூக்கை நுழைக்காதே!"

என்னடா இப்படிச் சொல்றே?"

வேற எப்படிச் சொல்றது? ஒரு பெண்ணோட மனசுல இடம் பிடிக்கிறதுக்கு அழகு, பணம், அந்தஸ்து இந்த மூன்றைக் காட்டிலும் வேற ஏதோ ஒண்ணும் இருக்குன்னு, அவ எனக்கு வகுப்பு எடுத்துட்டுப் போயிட்டா. இனிமேல்தான் நான் அதைப் படிச்சு புரிஞ்சுகிட்டு பரீட்சை எழுதி பாஸ் பண்ணனும். இதுல இன்னொரு விஷயமும் இருக்கு. ஒரு பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கிற விஷயத்துல கட்டாயப்படுத்த முடியாது."

அட்சய்...! நான் என்ன சொல்ல வர்றேன்னா?"

நல்ல வேலை கிடைச்சிருக்கிறதா சொன்னே... ஆல் த பெஸ்ட், போய் வேலையில சேரு.

சென்னைக்கு எப்ப வந்தாலும் சரி, என்னை வந்து பாரு. நான் இப்போ ஒரு முக்கியமான மீட்டிங்கில் இருக்கேன். அப்புறமா நான் பேசறேன்." அட்சய் செல்போனின் இணைப்பைத் துண்டித்து விட்டு முனகினான். இவன் ஒருத்தன் நேரம் காலம் தெரியாமே..."

உமையாள் கேட்டாள், ஃபோன்ல யாரு?"

என்னோட ஃப்ரண்ட் ஆன்ட்டி பேரு நகுல்..."

அந்த நகுல் கிட்டே யாழினியைப் பத்தி சொன்னியா?"

ஒரு பொண்ணுன்னு தெரியும். ஆனா பேரு... அவ என்ன 'ஜாப்'ல இருக்கா என்கிற விவரமெல்லாம் தெரியாது."

இனிமேலும் சொல்லாதே...! அப்புறம் இன்னொரு முக்கியமான விஷயத்தையும் சொல்லிடறேன். அந்த யாழினியை மறந்துடு... அவ ஒரு பவர் ஃபுல்லான பெண்கள் பத்திரிகையில் வேலை செய்யறா. நீ அவளை சின்னதா சீண்டினாலே போதும் மீடியாவில் அது ஒரு பூகம்பமாய் மாறும். அப்புறம் வரப்போகிற பிரச்னையை உன்னால சமாளிக்க முடியாது."

என்ன ஆன்ட்டி... யாழினியும் ஒரு பெண் என்கிறதால கட்சி மாறிட்டீங்களா?"

நான் கட்சி மாறலை... உனக்கு உண்மையை எடுத்துச் சொல்லக்கூடிய கடமை எனக்கு இருக்கு... நான் காலேஜ்ல படிக்கும்போது சைக்காலஜி புரொபசர் ஒருத்தர் அடிக்கடி இந்த வாக்கியத்தைச் சொல்வார். "Hurt me with truth; But, never satisfy me with a lie' உண்மையை எடுத்துச் சொன்னா உனக்குப் பிடிக்காது தான். யாழினியோட விஷயத்துல நான் பொய் சொல்லி உன்னோட மனசை ஒரு தற்காலிக சந்தோஷத்துக்கு உட்படுத்த நான் விரும்பலை.

ஆன்ட்டி! அந்த யாழினி திமிர் பிடிச்சவ..."

அது நியாயமான திமிர்ன்னு நான் நினைக்கிறேன்."

அதுவரைக்கும் ஒன்றும் பேசாமல் வாய் மூடி மௌனியாய் இருந்த பரசுராம் மெல்ல வாயைத் திறந்தார்.

டாக்டர்! நீங்க சோல்றதுதான் சரி! யாழினியாலே அவமானப்படுத்தப்பட்ட அட்சய்க்குக் கோபம் கண்ணை மறைக்கிறதால இப்ப நீங்க என்ன சொன்னாலும் அவன் மண்டைக்குள்ளே ஏறாது. நான் அவனுக்குப் புரிய வைக்கிறேன்..."

தட்ஸ் குட் மிஸ்டர் பரசுராம்...! யாழினியை விட்டா அட்சய்க்கு வேற பெண்ணா கிடைக்காது? இன்னிக்கு பெண்களுக்கு எதிரான குற்றங்களுக்குத் தண்டனைகள் கடுமையா இருக்கு...! இவன் எதையாவது செய்யப் போய் அது 'நான்... பெலபிள்' கேஸா மாறிட்டா ஆறு மாசமாவது உள்ளே இருக்க வேண்டியதுதான்." சொன்ன உமையாள் தன் ரிஸ்ட் வாட்ச்சைப் பார்த்துவிட்டு சற்றே பதற்றமாய் நாற்காலியிலிருந்து எழுந்தாள்.

ஸாரி! இது என்னோட ஓ.பி. நேரம். ஆல்ரெடி டென்மினிட்ஸ் லேட். நான் கிளம்பறேன். நீங்க ரெண்டு பேரும் பேசிட்டிருங்க. அட்சய்! நீ பரசுராம் ஸாரைக் கூட்டிகிட்டு ஐ.ஸி.யூ.வில் இருக்கிற அம்மாவைப் பார்க்கப் போறதா இருந்தால், விசிட்டர்ஸ் நேரம் முடியறதுக்குள்ளே போய் பார்த்துட்டு வா. நாம் நாளைக்குக் காலையில் மீட் பண்ணலாம்.

டாக்டர் உமையாள் அறையினின்றும் கிளம்பிச் சென்ற பிறகு. சில விநாடிகள் வரை மௌனம் காத்த பரசுராம், அட்சயின் தோள் மீது மெதுவாய் கை வைத்தார். குரலைத் தாழ்த்திக் கொண்டார்.

அட்சய்! யாழினி மேல உனக்கு இருக்கிற கோபம் நியாயமானதுதான். அவளை நீ எப்படி தண்டிக்கணும்னு விரும்பறே...?"

என்னை நிராகரிச்சது எவ்வளவு பெரிய தப்புன்னு அவ உணரணும். எல்லாத்துக்கும் மேலா என்னோட கால்ல விழுந்து என்னை மன்னிச்சுடுன்னு கதறணும்"

கண்டிப்பா... நீ நினைக்கிற மாதிரியெல்லாம் நடக்கும்"

அட்சயின் விழிகள் வியப்பில் விரிந்தன.

எப்படி அங்கிள்...?"

அந்த யாழினியை நாளைக்கு உனக்கு முன்னாடி கொண்டு வந்து நிறுத்துறேன்..."

அட்சயின் கண்களில் ஆச்சரியம் அலையடித்தது. உங்களுக்கு யாழினியைத் தெரியுமா அங்கிள்?"

தெரியும்... ஆனா எப்படித் தெரியும்ன்னு கேக்காதே! எல்லாத்தையும் நாளைக்குச் சொல்றேன். அதுக்கு முன்னாடி நேத்தைக்கு ராத்திரி எனக்கு ஃபேக்ஸில் வந்த ஒரு லெட்டரை நீ படிக்கணும்! "

என்ன லெட்டர்... யார் அனுப்பியிருக்காங்க?"

யு.எஸ்.ஸிலிருந்து டாக்டர் கெப்ளர்" பரசுராம் சொல்லிக் கொண்டே தன் சட்டைப் பையில் பத்திரப்படுத்தி வைத்து இருந்த அந்தக் கம்ப்யூட்டர் தாளை எடுத்து நீட்டினார். அட்சய் அதை வாங்கிப் பிரித்து ஆங்கிலத்தில் பிரிண்ட் செய்யப்பட்டிருந்த வாசகங்களைப் படிக்க ஆரம்பித்தான். தமிழாக்கம் மனசுக்குள் ஓடியது.

'இதம்' சேரிடபிள் ட்ரஸ்ட்டின் முக்கியமான பொறுப்புகளில் இருக்கும் நபர்களோடு நான் இந்த விஷயத்தை கவலையோடு பகிர்ந்து கொள்கிறேன். யு.எஸ். பயோ-மெடிக்கல் சயின்ஸ் சேம்பர் சார்பா சென்னையில் எந்த நோக்கத்திக்காக 'இதம்' சேரிடபிள் ட்ரஸ்ட் ஆரம்பிக்கப்பட்டதோ, அந்த நோக்கத்தில் நாம் ஐம்பது சதவீதம் கூட வெற்றி அடையவில்லை. இதுவரைக்கும் ஐம்பது கோடி ரூபாய் கவுன்சில் செலவழித்து இருக்கிறது. டாக்டர் உத்தண்டராமன் உறுதி அளித்ததின் பேரில் அவருக்கு தரமணியிலும், படப்பையிலும் இரண்டு பண்ணை வீடுகள் கட்டிக் கொடுக்கப்பட்டு மாடர்ன் லாப்ரட்ரிகளும் அமைக்கப்பட்டன. எங்கள் தரப்பில் நாங்கள் அனைத்து ஏற்பாடுகளையும் வெற்றிகரமாய் செய்து கொடுத்து இருக்கிறோம். ஆனால் உங்கள் தரப்பில் உள்ளவர்களின் செயல்பாடுகள் யு.எஸ்.பயோ. 'மெடிக்கல் சயின்ஸ் கேட்'டிருக்கு மகிழ்ச்சியளிப்பாக இல்லை. சென்னை நகர காவல் துறையும் உங்கள் ட்ரஸ்ட்டின் நடவடிக்கைகளை சந்தேகக் கண்கொண்டு பார்ப்பதாக தகவல் கிடைத்தது. எங்கள் சேம்பரின் ரிசர்ச் ஸ்காலர் மிஸ்டர் காரல்மேத்யூ வரும் ஞாயிற்றுக் கிழமை சென்னை வருகிறார். அவரோட நடத்தப்படும் பேச்சு வார்த்தை பயனுள்ளதாக இருக்கும் பட்சத்தில் தொழில் ரீதயான நம் நட்பு தொடரும். இல்லையேல் கை குலுக்கி'குட்'பை சொல்ல வேண்டிய கட்டாயம் ஏற்படலாம்?"

அட்சய் கடிதத்தை முழுவதுமாய் படித்து விட்டு அதிர்ச்சியோடு பரசுராமின் முகத்தை ஏறிட்டான்.

என்ன அங்கிள்! கெப்ளர் இவ்வளவு ஹார்ஷா ஃபேக்ஸ் பண்ணியிருக்கார்?"

கோடிக் கணக்கில் பணம் போட்டவன் ரிசல்ட் 'ஒண்ணுமில்லை' என்ற நிலைமை வரும் போது கேள்வி கேட்கத்தான் செய்வான்"

அப்பாவுக்கு இந்த விஷயம் தெரியுமா?"

தெரியாது. நேத்து ராத்திரி அவருடைய செல்ஃபோனுக்கும் உன்னோட செல்ஃபோனுக்கும் ட்ரை பண்ணினேன். 'நாட் ரீச்சபிள்'னு வந்தது...!"

ஸாரி அங்கிள்! நேத்து ராத்திரி நானும் அப்பாவும் ஒரு ரெஃப்ரெஷ்மென்ட்டுக்காக மகாபலிபுரம் ரீசார்ட் போயிருந்தோம். இன் கம்மிங் கால்ஸை அவாட் பண்றதுக்காக ஜாமரை ஆக்டிவேட் பண்ணியிருந்ததால் உங்க ரீச் ஆகலை..."

சரி... இந்த கெப்ளரோட ஃபேக்ஸ் மேட்டரை எப்படி ஹேண்டில் பண்றது. கொஞ்சம் விட்டாலும் பிச்சுக்கிட்டு போயிடுவான் போலிருக்கே?"

அப்படி விட்டுடக்கூடாது அங்கிள்...! அப்பா நாளைக்கெல்லாம் டெல்லியிலிருந்து வந்துடுவார். டாக்டர் உத்தண்டராமன், நான், நீங்க, அப்பா நாலு பேரும் உட்கார்ந்து பேசுவோம். கெப்ளர் இந்த ப்ராஜக்ட்டை கான்சல் பண்ணாமே இருக்கிறதுக்கு என்ன வழின்னு யோசிப்போம்!"

நீ நினைக்கிறமாதிரி இது சாதாரண பிரச்னையில்லை. மிகப் பெரிய பிரச்னை சாவி சின்னதுதான்... இந்தப் பிரச்னைக்கும் ஒரு சாவி கிடைக்கும்... வாங்க, அம்மாவைப் போய் பார்க்கலாம்..."

இருவரும் எழுந்து அறையினின்றும் வெளிப்பட்டு, ஐ.ஸி. யுனிட்டை நோக்கி பளபளப்பான இந்த க்ரானைட் வராந்தாவில் நடக்க ஆரம்பித்தார்கள்.

அங்கிள்"

என்ன?"

அந்த யாழினியை நாளைக்கு எனக்கு முன்னாடி கொண்டு வந்து நிறுத்துறதா சொன்னீங்களே, எப்படி?"

பொறுத்திருந்து பாரு..." சொன்ன பரசுராமின் உதட்டில் ஒரு நமட்டுச் சிரிப்பு ஸ்லோ மோஷனிலில் பரவியது...

'பரஸ்பரம்' அமைப்பின் நிர்வாகி மங்கையர்க்கரசி அந்த முன்னிரவு நேரத்தில் அவ்வளவு பதற்றத்தோடு நகுலை எதிர்பார்க்கவில்லை.

முகம் வியர்வையில் இருக்க விழிகளில் கலவரம்.

வா... நகுல்...!" சொல்லிக் கொண்டே தான் படித்துக் கொண்டிருந்த புத்தகத்தைக் கவிழ்த்து வைத்தாள்.

மேடம்! யாழினி இங்கே வந்தாளா?"

மத்தியானம் வந்ததுதான்...! நீ புறப்பட்டுப் போன கொஞ்ச நேரத்திலேயே அவளும் புறப்பட்டுப் போயிட்டா. ஏன் என்ன விஷயம்...? ஏன் இவ்வளவு டென்ஷனா இருக்கே...?

மேடம்! சாயந்தரம் நாலு மணியிலிருந்து அவளோடு பேச ட்ரை பண்றேன். 'திஸ் நெம்பர் ஈஸ் நாட் இன் யூஸ்' என்கிற ரிக்கார்டட் வாய்ஸ் மட்டும்தான் வருது. அவ வேலை பண்ற பத்திரிக்கை ஆ.ஃபீசுக்கு ஃபோன் போன் பண்ணினேன். சாயந்தரம் பத்திரிகை ஆ.ஃபீசுக்கு வரவேண்டிய யாழினி வரலைன்னு எடிட்டரே சொன்னார். ஒரு வேளை யாழினி தன்னோட செல்.ஃபோனைத் தவற விட்டிருந்தாலும் வேற ஏதாவது ஒரு நம்பரிலிருந்து என்னை காண்டாக்ட் பண்ணியிருப்பா..."

மங்கையர்க்கரசி நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

நகுல்! இப்பத்தான் எனக்கு ஞாபகம் வருது. நான் யாழினிக்கு ஒரு வேலை குடுத்து இருந்தேன். அதாவது 'இதம் சேரிடபிள் ட்ரஸ்ட்'டிலிருந்து மூணு மாசமாய் அவங்க அனுப்பவேண்டிய உதவித் தொகையை அனுப்பலை... அதைப்பத்தி விசாரிக்கும் படியாய்ச் சொல்லியிருந்தேன். யாழினியும் அது பத்திரிகை ஆ.ஃபீசுக்கு போறவழிதானே... ட்ரஸ்ட் சேர்மனைப் பார்த்து ஒரு வார்த்தை கேட்டுட்டுப் போறேன்னு கிளம்பிப் போனாள். ஆனா அப்படி சொன்னபடி அவ ட்ரஸ்ட்டுக்குப்போகலை. அதுக்குப் பதிலா என்னோட செல்.ஃபோனுக்கு ஒரு எஸ்.எம்.எஸ். பண்ணியிருந்தா."

எஸ்.எம்.எஸ்...?"

ஆமா... ட்ரஸ்ட் சேர்மன் பரசுராம் அவர்களை இன்னிக்கு என்னால சந்திக்க முடியாது. அதுக்குள்ளே வேற ஓர் அவசர வேலை வந்துட்டது. ஊழல் புகாரில் சம்பந்தப்பட்ட ஓர் அரசியல் தலைவரோட காரைப் பின் தொடர்ந்து போய்கிட்டிருக்கேன். ஒரு மணி நேரம் கழிச்சு மறுபடியும் உங்களை கான்டாக்ட் பண்றேன். இதுதான் யாழினி குடுத்த எஸ்.எம்.எஸ்."

அந்த எஸ்.எம்.எஸ்ஸை நான் பார்க்கலாமா மேடம்?"

இதோ!" சொன்ன மங்கையர்க்கரசி தன்னுடைய செல்.ஃபோனை எடுத்து மெஸேஜ் ஆப்ஷனுக்குப் போய் அந்த எஸ்.எம்.எஸ். செய்தியைக் காட்டினாள்.

அதை வாங்கிப் படித்துப் பார்த்த நகுல் இலேசா முகம் மாறினான்.

மேடம்"

என்ன நகுல்?"

உங்களுக்கு சந்தேகம் வரலையா?"

என்ன சந்தேகம்?"

அவசர அவசரமாய் ஒருத்தரை ஃபாலோ பண்ணிட்டிருக்கும்போது இவ்வளவு நீளமாய் யாராவது எஸ்.எம்.எஸ். பண்ணுவாங்களா...? "



அட்சய், பரசுராம் இருவரும் அந்த ஹாஸ்பிடலின் நீளமான வராந்தாவில் மெதுவாய் நடைபோட்டு ஐ.சி.யூனிட்டை நெருங்கினார்கள்.

யூனிட்டில் இருந்த முதல் அறைக்குள் பிராணவாயு சிலிண்டரின் உதவியுடன் ரோகிணி சுவாசித்துக் கொண்டிருக்க, அட்சய் அவளுக்குப் பக்கத்தில் போய் நின்று மெல்லத் தொட்டு அம்மா!" என்று குரல் கொடுத்தான். ரோகிணியின் உடம்பு அட்சயின் குரலைக் கேட்டு ஒரு சின்ன அசைவுக்குக் கூட உட்படவில்லை. சற்றே குரலை உயர்த்திய அட்சய் மறுபடியும் அம்மா" என்றபோது, பக்கத்தில் நின்றிருந்த நர்ஸ் குறுக்கிட்டாள்.

ஸாரி ஸார்! கோமா ஸ்டேஜில் இருக்குறவங்களை ஃபோர்ஸ் பண்ணி சுய உணர்வுக்குக் கொண்டு வர முயற்சிக்கக் கூடாது... அது உயிருக்கே ஆபத்தாய் முடியலாம்னு டாக்டர் சொல்லியிருக்கார்..."

அட்சய் ஒரு பெருமூச்சோடு கண்ணீர் மல்க பக்கத்தில் நின்றிருந்த பரசுராமை ஏறிட்டான்.

அங்கிள்! அம்மாவுக்கு ஒண்ணும் ஆயிடாதே. எனக்கு அம்மாவோட நிலைமையைப் பார்க்கும் போது மனசுக்குள்ளே ‘திக்’னு இருக்கு."

பயப்படாதே அட்சய்! அம்மாவுக்கு திடீர்னு ஏற்பட்ட ஓர் அதிர்ச்சியின் காரணமாத்தான் இப்படியொரு நிலைமை ஏற்பட்டிருக்கு. உணர்ச்சிவசப்படாம கொஞ்சம் பொறுமையாய் இரு. டாக்டர் உமையாள் அம்மாவை எப்படியும் பழைய நிலைமைக்குக் கொண்டு வந்துடுவாங்க...! நீ இங்கே நிக்காதே! வா... வெளியே போயிடலாம்."

அட்சய் சில விநாடிகள் தன் அம்மாவையே இதயம் கனக்கப் பார்த்துவிட்டு வெளியே வந்தான்.

மறுபடியும் வராந்தாவில் நடை போட்டார்கள்.

அங்கிள்"

என்ன சொல்லு...!"

அம்மாவைப் பார்க்கப் பார்க்க என்னோட ரத்த நாளங்கள் எல்லாம் தீப்பிடிச்சு எரியுற மாதிரி இருக்கு. அந்த யாழினியை எனக்கு முன்னாடி கொண்டு வந்து நிறுத்தப் போறதாய்க் கொஞ்ச நேரத்துக்கு முந்தி சொன்னீங்க. இல்லையா அங்கிள்?"

ஆமா"

அவளை எப்படி உங்களுக்குத் தெரியும்?"

பரசுராம் அவனுடைய தோளைத் தட்டிக் கொடுத்து விட்டு மெலிதாய்ப் புன்னகைத்தார். இன்னிக்கு ராத்திரி ட்ரஸ்ட் பங்களாவுக்கு டாக்டர் உத்தண்டராமன் வர்றார். நீயும் வா... யாழினியைப் பார்க்கலாம்."

நடந்து கொண்டிருந்த அட்சய் சட்டென்று நின்றான்.

அங்கிள்! அப்போ... யாழினி...?"

என்னோட கஸ்டடியில் தான் இருக்கா..."

எப்படி அங்கிள்...?"

இந்த ஹாஸ்பிடல் காண்டீன்ல காப்பி நல்லாயிருக்கும். வா... சாப்பிட்டுக்கிட்டே பேசுவோம்...!"

இருவரும் ஹாஸ்பிடலுக்குப் பின்புறம் இருந்த காண்டீனை நோக்கி நடந்தார்கள்.

நகுலின் தோளை மெள்ளத் தொட்டாள் மங்கையர்க்கரசி.

என்ன நகுல், ஸ்டில் போட்ட மாதிரி உட்கார்ந்துட்டே?"

'இதம்' சேரிடபிள் ட்ரஸ்ட்டுக்கு யாழினி போயிருக்கணும். அங்கே அவளுக்கு ஏதோ ஒரு பிரச்னை ஏற்பட்டிருக்கணும்."

நீ சொன்னது சாத்தியமான்னு யோசனை பண்ணிட்டிருக்கேன்."

இதுல யோசனை பண்ண என்ன இருக்கு மேடம்? நான் சொன்னதை மறுபடியும் நீங்க நிதானமாய் யோசனை பண்ணிப்பாருங்க... ஸ்கூட்டியை ஓட்டிகிட்டே யாழினியாலே எப்படி எஸ்.எம்.எஸ். கொடுத்து இருக்க முடியும்? சரி, அப்படியே ஸ்கூட்டியை ஒரு இடத்துல நிறுத்தி எஸ்.எம்.எஸ். பண்ணியிருந்தாலும் இவ்வளவு விளக்கமாய் ஒரு செய்தியை அனுப்பியிருக்க வேண்டியது இல்லியே...?

யாழினிக்கு எதாவது ஆபத்து ஏற்பட்டு இருக்கணும்ன்னு நினைக்கறியா நகுல்?"

எனக்கு சொல்லத் தெரியலைங்க மேடம்... யாழினி ரொம்பவும் சென்ஸிடிவ் டைப். தப்பு பண்ணின நபர்கள் யாரா இருந்தாலும் சரி, தட்டி கேட்கிற ரகம். 'இதம்' சேரிடபிள் ட்ரஸ்ட் கடந்த மூணு மாசமாய் உங்க 'பரஸ்பரம்' அமைப்புக்கு அனுப்ப வேண்டிய பணத்தை அனுப்பாத காரணத்தால அங்கே போன யாழினி கோபமாய் ஏதாவது பேசியிருக்கலாம். அது வாக்குவாதமாக மாறி ஒரு பிரச்னையா உருவெடுத்து இருக்கலாம்."

நீ சொல்றதும் யோசிக்க வேண்டியதுதான்"

அந்த ட்ரஸ்ட்டோட ஃபோன் நெம்பர் உங்ககிட்டே இருக்கா மேடம்?"

இருக்கு!"

ஃபோன் பண்ணிப் பார்க்கலாமா?"

வேண்டாம் நகுல்...! இது மாதிரியான பிரச்னைகளுக்கு டெலிஃபோனிக் கான்வர்சேஷன் உதவாது. நீ நேரிடையாய் ட்ரஸ்ட்டுக்கு புறப்பட்டுப் போ. அங்கே இருக்கிற நபர்கள் கிட்டே யாழினியைப் பற்றி விசாரி. அப்படி விசாரிக்கும் போதே அவங்களோட முகங்களில் நிகழ்கிற மாற்றங்களைக் கவனி.

அகத்தின் அழகு முகத்தில்னு சொல்வாங்க. யாழினி விஷயத்தில் அவங்க தப்பு பண்ணியிருந்தா கண்டிப்பா அவங்களோட முகங்களே காட்டிக் கொடுத்துடும்..."

மே... மேடம்..."

என்ன...?"

இப்ப மணி ஏழே கால்... நான் உடனே புறப்பட்டாலும் இந்த ட்ராஃபிக் பீக் அவர்ல ‘இதம்’ ட்ரஸ்ட்டுக்குப் போய்ச் சேர எட்டு மணியாயிடும்... அந்த நேரத்துக்கு ட்ரஸ்ட்ல யாராவது இருப்பாங்களா?"

இதோ பார் நகுல்...! இப்படியெல்லாம் யோசனை பண்ணி நேரத்தை வேஸ்ட் பண்ணிட்டு இருக்காதே! மொதல்ல ட்ரஸ்ட்ல போய் விசாரி. அங்கே நமக்குச் சாதகமான பதில் கிடைக்கலைன்னா போலீசுக்குப் போயிடுவோம்.. நீ உடனே கிளம்பு...!"

நகுல் தலையை ஆட்டிவிட்டு வியர்த்த முகமாய் வெளியே வந்தான். சாலைப் போக்குவரத்தில் காலியாய்ப் போன ஆட்டோ ஒன்றை நிறுத்தி ஏறிக் கொண்டான்.

இடத்தைச் சொல்லிவிட்டு இருக்கைக்கு சாய்ந்து உட்கார்ந்த நகுலின் அடிவயிற்றில் ஒரு பயம் இடியாய் இறங்கி அவனுடைய இருதயத்துடிப்பை அதிகரித்திருந்தது. மூளைக்குள் கேள்விகள் குடைந்தன.

‘யாழினி! நீ இப்போ எங்கே?’

‘உனக்கு என்னவாயிற்று?’

நகுலின் கண்களில் நீர் எட்டிப் பார்த்து ஒரு புது பிளேடின் கூர்மையைப் போல் பளபளத்தது.

இதுதான் ஸார் அந்த சேரிடபிள் ட்ரஸ்ட்!" ஆட்டோ டிரைவர் சாலையின் ஓரமாய் ஆட்டோவை நிறுத்திக் கொண்டு சொல்ல, நகுல் பணத்தைக் கொடுத்துவிட்டு எந்திரத்தனமாய் இறங்கினான்.

சாத்தப்பட்டிருந்த அந்தப் பெரிய இரும்புக்கேட்டை நோக்கி நடந்தான். கேட்டின் ஒரு ஓரத்தில் விக்கெட்டோர் ஒன்று தெரிய அதன் பக்கத்தில் போய் நின்று மெள்ளத் தட்டினான்.

சில விநாடிகளுக்குப் பிறகு...

அந்தக் கதவை மெதுவாய் திறந்து கொண்டு செக்யூரிட்டி நரசிம்மன் எட்டிப் பார்த்தான்.

யாரு...?"

என் பேரு நகுல்... இந்த ட்ரஸ்ட் நிர்வாகி மிஸ்டர் பரசுராமைப் பார்த்துப் பேசணும்!"

என்ன விஷயமா?"

அது... அது... வந்து... கொஞ்சம்... பர்சனல்"

பரசுராம் அய்யா வெளியே போயிட்டாரே?"

உள்ளே வேற யார் இருக்காங்க?"

யாரும் இல்லே...!" சொல்லிக் கொண்டே அந்த விக்கெட் டோரை நரசிம்மன் சாத்த முயல, நகுல் அவசரக் குரலில் குறுக்கிட்டான்.

ஒரு நிமிஷம்"

என்ன?"

இன்னிக்கு மத்தியானம் சுமார் ஒரு மூணு மணிக்கு இந்த ட்ரஸ்ட்டுக்கு ஒரு பொண்ணு வந்தாளா?"

நரசிம்மன் ஜாக்கிரதையானான்.

பொண்ணா?"

ஆமா... பிங்க் நிற ஸ்கூட்டியில் அந்தப் பொண்ணு இங்கே வந்திருப்பாள்..."

அப்படி யாரும் வரலையே?"

ப்ளீஸ்... கொஞ்சம் யோசனை பண்ணி" நகுல் பேச்சை முடிக்கும் முன்பே நரசிம்மன் கோபமாய்க் குறுக்கிட்டான்.

நான்தான் வரல்லேன்னு சொல்றேனே... அப்புறமும் என்ன... ப்ளீஸ்... க்ளீஸுன்னு...! ட்ரஸ்ட்டே நடக்காமே மூணு மாசமா முடங்கிக் கிடக்கு... இவரு பெரிசா விசாரிக்க வந்துட்டாரு! போயா..."

நகுலுக்குள் சின்னதா ஒரு கோப ஜுவாலை அனலாய் வீசியது. முகம் சிவக்கப் படபடத்தான். இப்ப... நான் என்ன கேட்டுட்டேன்...? இன்னிக்கு மத்தியானம் மூணு மணிக்கு பிங்க் நிற ஸ்கூட்டியில் ஒரு பொண்ணு வந்தாளான்னு கேட்டேன். அதுக்கு ஏன் இவ்வளவு கோபம்...? பேச்சுல மரியாதை இருக்கட்டும்... வாயா போயான்னு பேசினா... அப்புறம் நானும் பேச வேண்டியிருக்கும்..."

என்னது...! நீயும் பேசுவியா...? பேசு... நீ என்னதான் பேசறேன்னு நானும் பார்க்கறேன்... பேசுயா..." நரசிம்மன் எகிறிக் கொண்டு வர அதே விநாடி கார் ஒன்று ஹெட்லைட் வெளிச்சத்தோடு கேட் அருகே வந்து சத்தமில்லாமல் நின்றது.

செக்யூரிட்டி நரசிம்மன் பதற்றப்பட்டு காரை நோக்கி ஓடினான். காரின் ட்ரைவிங் இருக்கையில் உட்கார்ந்திருந்த பரசுராம் காரின் கண்ணாடியை இறக்கினார். எட்டிப் பார்க்க நரசிம்மன் பவ்யமாக் குனிந்தான். பரசுராம் கேட்டார்.

கேட்டுக்குப் பக்கத்துல நிக்கறது யாரு?"

குரலை வெகுவாய்த் தாழ்த்தினான் நரசிம்மன்.

அய்யா! அவன் பேரு நகுல். அந்தப் பத்திரிக்கைக் காரப் பெண்ணைத் தேடிட்டு வந்திருக்கான்."

பரசுராமின் முகம் ஒரு விநாடி கறுத்து பின் பழைய நிலைமைக்குத் திரும்பியது.

நீ என்ன சொன்னே?"

எந்தப் பொண்ணும் வரலைன்னு சொல்லிட்டேன்"

நம்பிட்டானா?"

நம்பின மாதிரி தெரியலைங்கயா... ஏதோ போலீஸ் மாதிரி விசாரணை பண்ணிட்டிருக்கான். அதான்... கோபம் வந்து..."

முட்டாள்! இது மாதிரியான சமயங்கள்ல பொறுமை இழக்காமே நிதானமாய் பேசணும்...! இனிமே நான் அவன்கிட்டே பேசிக்கிறேன்." என்று சொன்னவர் காரைவிட்டு இறங்கினார். கேட் அருகே நின்றிருந்த நகுலை நோக்கிப் போனார்.

என்ன தம்பி! செக்யூரிட்டிகிட்டே என்ன பிரச்னை?"

ஒரு பிரச்னையும் இல்ல ஸார்... எனக்குத் தெரிஞ்ச ஒரு பொண்ணு பேரு யாழினி. ஒரு பத்திரிகையில் ரிப்போர்ட்டரா வேலை பார்க்கறா!"

ஓ! அந்தப் பொண்ணா...! எனக்கு நல்லாத் தெரியுமே... மூணு மாசத்துக்கு முன்னாடி இந்த சேரிடபிள் ட்ரஸ்ட்டுக்கு வந்து என்கிட்டே ஒரு பேட்டி கூட எடுத்துட்டுப் போனா. அந்தப் பொண்ணுக்கு என்ன?"

அது... வந்து... வந்து..."

சொல்லு தம்பி...!"

இன்னிக்கு மத்தியானம் மூணு மணியிலிருந்து அந்தப் பொண்ணு யாழினையைக் காணோம் ஸார்."

எ... எ... என்னது...! பொண்ணைக் காணோமா?" பரசுராம் தன்னுடைய முகத்தில் ஒரு செயற்கையான அதிர்ச்சியைக் காட்டினார்.

ஆமா... ஸார்"

சரி...! அந்தப் பொண்ணு யாழினி காணாமே போனதுக்கும் நீ இங்கே வந்து பிரச்னை பண்ணிகிட்டு இருக்கிறதுக்கும் என்ன காரணம்?"

யாழினி மத்தியானம் மூணு மணி சுமார்க்கு இந்த 'இதம்' சேரிடபிள் ட்ரஸ்ட்டுக்குத்தான் வந்திருந்தா...?"

மத்தியானம் ஒரு மணியிலிருந்து சாயந்தரம் ஆறுமணி வரைக்கும் நான் இந்த ட்ரஸ்ட்லதான் இருந்தேன். இப்பத்தான் வெளியே போயிட்டு வர்றேன். நீ சொல்ற அந்த நேரத்துல யாழினி என்னைப் பார்க்க வரலையே?"

இவர் சொல்வது உண்மையா... பொய்யா என்ற குழப்பத்தில் இருந்த நகுலின் தோள் மீது கையை வைத்தார் பரசுராம்.

இதோ பார் தம்பி...! யாழினி ஒரு பத்திரிகையில் வேலை செய்யற பொண்ணு. ஏதாவது ஒரு இடத்துக்குப் பேட்டி எடுக்கப் போயிருக்கலாம். அங்கே எதிர்பாராதவிதமாய் லேட்டாகியிருக்கலாம். ஆனா நிச்சயமாய் இந்த ட்ரஸ்ட்டுக்கு வரலை. வரவும் வாய்ப்பில்லை. ஏன்னா கடந்த மூணு மாச காலமாய் இந்த ட்ரஸ்ட் செயல்படறது இல்ல. ட்ரஸ்ட்டோட நடவடிக்கைகளை கோர்ட் முடக்கி வெச்சிருக்கு... இதுக்கு மேலேயும் நான் சொன்னதுல உனக்கு நம்பிக்கையில்லைன்னா என்னோட கார்ல ஏறு. உள்ளே வந்து பாரு."

வே... வேண்டாம் ஸார்...! நீங்க சொன்னதை நம்பறேன். உங்க செக்யூரிட்டி மரியாதை குறைவா பேசினதால்தான் நானும் பதிலுக்குப் பேச வேண்டியதாயிடுச்சு."

இந்த செக்யூர்ட்டி கொஞ்சம் முன் கோபக்காரன். அவனுக்கு யார்கிட்டே எப்படி நடந்துக்கணுங்கிற விவஸ்தை கிடையாது. அவனோட சார்புல நான் மன்னிப்புக் கேட்டிக்கிறேன் தம்பி..."

பரவாயில்ல ஸார்...! மனுஷங்கள்ல யாரும் கெட்டவங்க கிடையாது. கொங்சம் வித்தியாசமாய் இருப்பாங்க. அவ்வளவுதான்... நீங்க இவ்வளவு ஆறுதலாய்ப் பேசறதே எனக்கு சந்தோஷமாய் இருக்கு. நான் வர்றேன் ஸார்" சொல்லிக் கொண்டே நகர முயன்ற நகுலை தன் குரலால் நிறுத்தினார் பரசுராம்.

ஒரு நிமிஷம் தம்பி!"

நகுல் நின்றான்.

அந்தப் பொண்ணு யாழினி உனக்கு என்ன ஆகணும்?"

அது... அது... வந்து... நானும் யாழினியும் ஒருத்தரையொருத்தர் விரும்பறோம்... ஸார்..."

ஓ ! காதல்..."

ஆமா ஸார்..."

கவலைப்படாமே வீட்டுக்குப் போய் தம்பி... யாழினி எங்கிருந்தாவது இன்னும் ஒரு மணி நேரத்துக்குள்ளே ஃபோன் பண்ணுவா... நீங்க ரெண்டு பேரும் கல்யாணம் பண்ணிக்கிட்டு அமோகமாய் இருக்கணும். என்னோட வாழ்த்துகள்!"

ரொம்பவும் நன்றி ஸார்" நகுல் கைகளைக் குவித்து வணங்கிவிட்டு நடக்க ஆரம்பித்தான். மனசுக்குள் யோசனைகள் ஓடின. 'பரசுராமைப் பார்த்தால் பொய் சொல்கிறவர் போல் தோன்றவில்லை, அந்த ஊழல் அரசியல்வாதி யார் என்பதைக் கண்டுபிடிப்பதுதான் அடுத்தகட்ட வேலை...!'

யோசனைகளோடு நடை போட்டுக் கொண்டிருந்த நகுலைப் பின்னாலிருந்து வந்த அந்தப் பெண்ணின் குரல் சட்டென்று நிறுத்தியது.



ஸார்... ஸார்.. ஸார்"

நகுல் திரும்பிப் பார்க்க அந்தப் பெண் நின்றிருந்தாள். நடுத்தர வயது. இரட்டை சாரீரம். தட்டுமுட்டாச் சுற்றப்பட்ட ஒரு பழைய கைத்தறிச் சேலை. முகத்தில் எட்டணா சைஸுக்கு ஒரு குங்குமப் பொட்டு.

என்ன என்பது போல் அவளைப் பார்த்தான் நகுல். அவள் சுற்றும் முற்றும் ஒருசில விநாடிகள் பார்வையைச் சுழற்றிவிட்டு குரலைத் தாழ்த்தினாள்.

ஸார்... எம் பேர் பூங்காவனம். அதோ... அந்த ட்ரஸ்ட்டுக்குக் கொஞ்சம் தள்ளித்தான் பழக்கடை போட்டிருக்கேன். அந்த ட்ரஸ்ட் செக்யூரிட்டிகிட்டே நீங்க பேசிட்டு இருந்ததை நானும் கேட்டுகிட்டுதான் இருந்தேன். அந்த ஆளும் சரி, கார்ல வந்த அந்தப் பெரிய மனுஷனும் சரி... ரெண்டு பேருமே பொய் சொல்றாங்க"

ஏ... ஏ... என்னது... பொய்யா?"

ஆமா... ஸார்... இன்னிக்கு மத்தியானம் மூணு மணி இருக்கும். அந்த ட்ரஸ்ட் கட்டடத்துக்குள்ளே ஒரு பொண்ணு உள்ளாரப் போறதைப் பார்த்தேன்... அதுக்கப்புறம் அந்தப் பொண்ணு திரும்பி வந்த மாதிரி தெரியலை..."

நகுல் இதயம் அதிர்ந்து போனவனாய் அந்தப் பெண்ணையே பார்த்தான். குரல் நடுக்கமாய் வெளிப்பட்டது.

நீ என்னம்மா சொல்றே..."

ஆமா ஸார்... பிங்க் கலர் ஸ்கூட்டர்"

நகுல் தன் செல்ஃபோனை எடுத்து ஃபோட்டோ ஆப்ஷனுக்குப் போய் யாழினியின் ஃபோட்டோவை ஜூம் செய்து காட்டினான்.

நீ பார்த்தது இந்தப் ஃபோட்டோவில் இருக்கிற பொண்ணுதானான்னு கொஞ்சம் பார்த்து செல்லும்மா!"

அந்தப் பெண் போட்டோவைப் பார்த்துவிட்டு தன் தாடையை தடவியவளாய் மொகம் சரியாத் தெரியலை சார். ஆனா இந்த மாதிரியான வயசுப் பொண்ணுதான்..."

நகுல் நெற்றியைப் பிடித்துக் கொண்டு தவிப்போடு சுற்றும் முற்றும் பார்த்தான்.

இப்ப என்ன பண்றதுன்னு தெரியலையே?"

ஸார்! நானும் ரொம்ப நாளாவே கவனிச்சுட்டு வர்றேன். இந்த ட்ரஸ்ட் கட்டடத்துக்குள்ளே ஏதோ ஒரு தப்புக் காரியம் நடக்குது ஸார். திடீர் திடீர்னு யார் யாரோ வர்றாங்க... பேறாங்க... ஒரு தபா வெளி நாட்டுக்காரர் ஒருத்தர் கூட வந்திருந்தார். நீங்க மேற் கொண்டு என்ன பண்ணணுமோ பண்ணி அந்தப் பொண்ணைக் கண்டுபிடிக்க முயற்சி எடுங்க ஸார். கடையில யாரும் இல்லை... நான் வர்றேன் ஸார்."

குரலைத் தாழ்த்திக் கொண்டு படபடவென்று பேசி முடித்த அந்தப் பெண் பழக்கடையை நோக்கிப் போய்விட நகுல் திரும்பி நின்று இருட்டில் கரைந்து போயிருந்த ட்ரஸ்ட் கட்டடத்தை அடி வயிற்றில் எரிகின்ற நெருப்பு ஜுவாலையோடு பார்த்தான்.

'அந்த பழக்கடைக்காரி சொல்வது போல் யாழினி இந்தக் கட்டடத்திற்குள் இருப்பாளா?'

'எப்படி உறுதி செய்து கொள்வது?'

'இந்தக் கட்டடத்தின் பின்பக்கமாய் போய் சுவரேறிக் குதித்து உள்ளே போய் பார்க்கலாமா...?'

நகுல் ஒரு முடிவுக்கு வந்தவனாய் கட்டடத்தின் பின்பக்கம் இருந்த திசையை நோக்கி வேக வேகமாய் நடைபோட்டான். இருதயம் தெறித்து விடுவதைப் போல் துடித்துக் கொண்டிருந்தது. வியர்வை உச்சந்தலையில் உற்பத்தியாகி முகத்திலும், முதுகிலும் சரம் சரமாய் வழிந்து சட்டையை நனைத்துக் கொண்டிருந்தது. மூக்கும் வாயும் ஒரே நேரத்தில் சுவாசித்தது.

இரண்டு நிமிஷ நடையில் கட்டடத்தின் பின் பக்கம் வந்தது. சுற்றிலும் கரி பூசிய தினுசில் இருட்டு. சுவர் திண்ணென்று உயர்ந்து ஏழடி உயரத்துக்கு விஸ்வரூபம் காட்டியது.

'எப்படி ஏறுவது?'

நகுல் அண்ணாந்து பார்த்து யோசித்துக் கொண்டிருக்கும் போது அவனுடைய செல்ஃபோன் அழைத்தது. எடுத்துப் பார்த்தான். டிஸ்ப்ளேயில் மங்கையர்க்கரசியின் பெயர். காதுக்கு ஒற்றிப் பேசினான்.

மே...ட...ம்"



என்ன நகுல்... உன்கிட்டேயிருந்து ஃபோனே காணோம். அந்த ட்ரஸ்ட்டுக்குப் போனியா இல்லையா?"

போ... போ... போனேன் மேடம்"

என்னாச்சு... யாழினி அங்கே இருக்காளா?"

மேடம்... நீங்க சொன்ன மாதிரி டிரஸ்ட் சரியில்லை. யாழினிக்கு டிரஸ்ட்டுக்குள்ளே ஏதோ ஆபத்து ஏற்பட்டிருக்கு?"

எப்படிச் சொல்றே நகுல்...?"

நகுல் சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு சில நிமிடங்களைச் செலவழித்து எல்லா விஷயங்களையும் சொல்லி முடித்தான். மறுமுனையில் மங்கையர்க்கரசி தீப்பற்றிக் கொண்ட ஒரு தீப்பந்தமாய் மாறினாள்.

அந்த பரசுராம் சரியில்லைன்னு எனக்கு முன்னாடியே தெரியும். அவனை சும்மாவிடக்கூடாது. அவன் தான் யாழினியை ஏதாவது பண்ணியிருக்கணும்."

மேடம்! நான் இப்போ ட்ரஸ்ட்டோட பின்பக்க சுவர் ஏறி குதிச்சு உள்ளே போகப் போறேன்."

வேண்டாம் நகுல்..."

ஏன் மேடம்...?"

இந்த விஷயத்துல நாம அவசரப்படக்கூடாது. நிதானமாய் யோசனை பண்ணித்தான் பரசுராமை நோக்கி அடியெடுத்து வைக்கணும்..."

இப்ப என்ன பண்ணலாம்னு சொல்றீங்க..."

ஒரு நிமிஷம் கூட தாமதம் பண்ணாமே நேரா போலீஸ் கமிஷனர் ஆஃபீசுக்குப் போயிடுங்க. நானும் அங்கே அரைமணி நேரத்துக்குள்ளே வந்துடறேன்."

இந்த விஷயத்தைப் போலீசுக்குக் கொண்டு போயிடலாம்னு நினைக்கறீங்களா?"

ஆமா...! போலீஸ் கமிஷனர் ராமாமிர்தம் நம்ம ‘பரஸ்பரம்’ அமைப்புக்கு ரொம்பவும் வேண்டியவர். அவர் டெப்டி கமிஷனரா இருந்த போதே உடல் தான பத்திரத்துல கையெழுத்து போட்டுக் குடுத்துட்டார். அவர் கிட்டே போய் விஷயத்தைச் சொல்லுவோம். அவர் யாழினியை மீட்க போலீஸ் தரப்பிலிருந்து ஒரு புத்திசாலித்தனமான முடிவை எடுப்பார்."

மேடம்! நாம் லேட் பண்ற ஒவ்வொரு நிமிஷமும் யாழினிக்கு ஆபத்தாய் முடியலாம்."

அதுக்காக உணர்ச்சிவசப்பட்டு சுவர் ஏறி குதிச்சு உள்ளே போய் வேவு பார்க்கிற வேலையெல்லாம் வேண்டாம். அது உனக்கே கூட ஆபத்தில் போய் முடியலாம். இது மாதிரியான விஷயங்களை எப்படி வேண்டிப் பண்ணணும்னு போலீஸ் கமிஷனருக்கு நல்லாவே தெரியும். நீ உடனடியா அங்கிருந்து புறப்பட்டு கமிஷனர் ஆஃபீசுக்கு வந்து சேரு. நான் உனக்காக அங்கே வெயிட் பண்ணிட்டிருப்பேன்.

மேடம்..."

பேசிட்டிருக்காதே... புறப்படு!"

போலீஸ் கமிஷனர் அலுவலகம்.

கமிஷனர் ராமாமிர்தம் தனக்கு முன்பாய் இறுகிப் போன முகங்களோடு உட்கார்ந்திருந்த நகுலையும், மங்கையர்கரசியையும் ஒரு பெருமூச்சோடு பார்த்தார். பிறகு மேஜையின் மேல் இருந்த பேப்பர் வெயிட்டை உருட்டியபடி பேச ஆரம்பித்தார்.

நான் இன்னிக்கு மத்தியானம்தான் ஒரு மூணு மணி அளவுல அந்த இதம் டிரஸ்ட்டுக்குப் போய் பரசுராமை விசாரணை பண்ணிட்டு வந்தேன். அந்த ஆள் ஒரு ஃபிராட், சட்ட விரோதமான ஆசாமின்னு எங்க டிபார்ட்மெண்ட்டுக்கு நல்லாவே தெரியும். அவர் சேர்மனா இருக்கிற சேரிடபிள் ட்ரஸ்ட் சட்ட விதிகளுக்கு உட்படாமல் தன்னிச்சையாய் மனம் போனபடி நடத்தப்பட்டு வந்திருக்கு என்கிற உண்மையை கோர்ட் உறுதிபடுத்தி ஒரு தீர்ப்பை வழங்கியிருக்கு.

அந்த தீர்ப்பின்படி டிரஸ்ட் இப்போ செயல்படமுடியாத சூழ்நிலைக்குத் தள்ளப்பட்டிருக்கு. அவர் அடிக்கடி வெளிநாடு போயிட்டு வர்றார். காரணம் கேட்டா தனக்கு அல்சைமர் நோய் இருக்கிறதாகவும் அந்த நோய்க்கான ட்ரீட்மென்ட்டை வெளிநாட்டு டாக்டர்களால் தான் தரமுடியும்ன்னு விதண்டாவாதம் பேசுவார்.

அந்த டிரஸ்ட்டை சோதனை போட சர்ச் வாரண்ட் கேட்டு ரெண்டு தடவை கோர்ட்டை அணுகியும் பரசுராம் அதுக்கு 'ஸ்டே' வாங்கி முட்டுக்கட்டை போட்டதால என்னால ஒண்ணும் பண்ண முடியலை."

நகுல் கண்களில் நீர் மல்க கமிஷனரை ஏறிட்டான்.

ஸார்! பரசுராம் டிரஸ்ட்டை நடத்துறாரோ... நடத்தலையோ அதைப் பத்தி எனக்குக் கவலையில்லை. இப்போ என்னோட யாழினி அவர்கிட்டே ஏதோ ஒரு வகையில் மாட்டியிருக்கா... அவளை மீட்கணும்..."

யாழினியை மீட்கணும்னா ஒரு அதிரடியான நடவடிக்கையைத்தான் எடுக்கணும்."

அதிரடியான நடவடிக்கைன்னா... எப்படி ஸார்?"

மஃப்ட்டியில் ஒரு போலீஸ் படை ஜீப்புல புறப்பட்டுப் போய் டிரஸ்ட் கட்டடத்துக்குள்ளே நுழைஞ்சு மின்னல் வேகத் தேடலை நடத்தணும்." ஆனா அதுல ஒரு ஆபத்து இருக்கு மிஸ்டர் நகுல்."

என்ன ஆபத்து ஸார்?"

யாழினி கொல்லப்படலாம்."

ஸ...ஸ...ஸார்...!"

இது ஒரு கெஸ் ஒர்க்தான்... ரிஸ்க் இருக்குன்னு சொல்ல வர்றேன்... அதே நேரத்துல யாழினி மீட்கப்படவும் வாய்ப்பு இருக்கு... எப்பவுமே ஒரு அதிரடியான நடவடிக்கை எடுத்தா அதோட சக்சஸ் ரேட் ஃபிப்டி பர்சென்ட்தான்!"

நகுலும் மங்கையர்க்கரசியும் ஒருவரையொருவர் பார்த்து திகில் பார்வைகளைப் பரிமாறிக் கொண்டனர். கமிஷனர் ராமாமிர்தம் தொடர்ந்தார்.

இப்ப சொல்லுங்க நகுல்...யாழினியை மீட்க அதிரடி நடவடிக்கை எடுக்கலாமா... வேண்டாமா?"

நகுல் மங்கையர்க்கரசியிடம் திரும்பினாள்.

மேடம்! நீங்க என்ன சொல்றீங்க?"

இதுல யோசனை பண்ண ஒண்ணுமேயில்லை நகுல். யாழினி அந்த டிரஸ்ட் கட்டடத்துக்குள்ளே போயிருக்காங்கிற விஷயம் உறுதியாயிடுச்சு. இனிமே அதிரடியான நடவடிக்கைதான் அவசியம். ஃபார்மல் என்கொய்ரி எல்லாம் பரசுராம்கிட்டே எடுபடாது."

நகுல் கமிஷனரைப் பார்த்து பயந்த பார்வையோடு தலையாட்டினான்.

அதிரடி நடவடிக்கை எடுத்துடலாம் ஸார்!"

தென்... நோ பிராப்ளம்" என்று சொன்ன கமிஷனர் தன் மேஜையின் மேல் இருந்த இன்டர்காமில் பேசினார். ஒரு 'ஃபோர் வி' ஆப்ரேஷன் ஈஸ்வாண்டட். உடனே என்னோட ரூமுக்கு அனுப்பி வையுங்க!"

கமிஷனர் ராமாமிர்தம் ரிஸீவரை வைத்து விட்டு மினரல் வாட்டர் பாட்டிலை எடுத்தார். தொண்டையை நனைத்துக் கொண்டு பாட்டிலை கீழே வைப்பதற்குள் நான்கு பேர் தேகாப்பியாச உடம்புகளில் ஆறடிக்கும் குறையாத உயரத்தில் கமிஷனரின் அறைக்குள் நுழைந்தனர்.

ஒரு நேர்க்கோட்டில் நான்கு பேரும் நின்று 'சுளீர்' என்று சல்யூட் அடித்துத் தளர்ந்தார்கள். கமிஷனர் அவர்களை ஏறிட்டார்.

இதம் சேரிடபிள் டிரஸ்ட்டை அதிரடியாய்ச் சோதனை போட்டு அங்கே சிறை வைக்கப்பட்டிருக்கிற யாழினி என்கிற பெண்ணை உயிரோடு மீட்கணும். யாருக்கும் எந்த உயிர்ச்சேதமும் ஏற்படக் கூடாது. சுட வேண்டிய அவசியம் ஏற்பட்டால் முழங்காலுக்கு கீழ் எய்ம் பண்ணுங்க. இவர் மிஸ்டர் நகுல். அந்த பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கப் போகிறவர்... ஸோ, ஆப்ரேஷன் சக்சஸ்ஃபுல்லா அமைய வேண்டியது முக்கியம்."

எஸ்... ஸார்"

கமிஷனரின் பார்வை இப்போது நகுலிடம் திரும்பியது.

மிஸ்டர் நகுல்!"

ஸார்"

இது ஒரு ஃபோர்மென் கமாண்டோ. இதில் இடம் பெற்று இருக்கிற நான்கு பேரோட பெயர்கள் வடிவேல், வெங்கடேஷ், வசீகர், வெற்றிச் செல்வன். இந்த நான்கு பேர்களோட பெயர்களும் 'வி'யில் ஆரம்பிக்கிறதால இந்த அதிரடி நடவடிக்கைக்கு 'ஃபோர் வி' ஆப்ரேஷன்னு பேரு.

இந்த நாலு பேரும் மஃப்டியில் ஒரு அம்பாசிடர் காரில் இதம் சேரிடபிள் டிரஸ்ட்டுக்குப் புறப்பட்டு போவாங்க. நீங்களும் இவங்க கூட இருப்பீங்க. டிரஸ்ட்டுக்கு வெளியே காரை நிறுத்திட்டு இவங்கள்ல மூணு பேர் தடாலடியா டிரஸ்ட் கட்டடத்துக்குள்ளே நுழையும் போது நீங்களும் இன்னொரு கமாண்டோ வீரரும் காருக்குள்ளே இருந்துகிட்டு கட்டடத்துக்குள்ளேயிருந்து யாராவது வெளியே வர்றாங்களான்னு கண்காணிக்கணும். ஏதாவது ஆபத்துன்னா உடனடியா போலீஸ் கண்ட்ரோல் ரூமுக்கு தகவல் கொடுக்க வேண்டிய பொறுப்பும் உங்களோடதுதான். இவங்க கூட போக உங்களுக்கு பிரியம் இல்லாத பட்சத்தில் நாங்க வற்புறுத்த மாட்டோம்! ஏன்னா இதுல ஆபத்தும் இருக்கு..."

இல்ல ஸார்... நானும் போறேன். என்னோட யாழினியை மீட்கற விஷயத்துல என்னோட உயிர் ஒரு பொருட்டே இல்லை...!" கண்களில் நீர் மின்ன நகுல் எழுந்து கொண்டான். உடம்பில் ஒரு போர்கால பதற்றம் பரவியிருந்தது..



அந்த வெள்ளை நிற அம்பாசிடர் கார் 'இதம் சாரிடபிள்' டிரஸ்ட்டுக்குச் சற்றுத் தள்ளி நின்று என்ஜினின் இயக்கத்தை நிறுத்திக் கொண்ட போது நேரம் சரியா பத்துமணி. சாலையில் போக்குவரத்தின் அடர்த்தி குறைந்து போயிருக்க ஷட்டர்கள் இழுபட்டு பெரும்பாலான ரோட்டோர கடைகள் இருட்டில் இருந்தன.

'ஃபோர் வீ ஸ்குவாடைச் சேர்ந்த வசீகர், டிரைவிங் இருக்கையில் இருக்க, பக்கத்திலே நகுல் வியர்வை வழியும் முகத்தோடு கலவரமாய்த் தெரிந்தான். காரின் பின் இருக்கையில் வடிவேல், வெங்கடேஷ், வெற்றிச்செல்வன் மூன்று பேரும் நெருக்கிக் கொண்டு உட்கார்ந்திருந்தனர். காரில் நிலவிய நிசப்தத்தைக் கலைத்தார் வெங்கடேஷ்.

வசீகர்!"

ஸார்..."

நான், வடிவேல், வெற்றிச்செல்வன் மூன்று பேரும் டிரஸ்ட்டுக்குள்ளே போறோம். நீங்களும் நகுலும் கார்லேயே இருங்க. நாங்க உள்ளே அதிரடியாய்ச் சோதனை நடத்திட்டு இருக்கும்போது தப்பிச்சுட்டுப் போற

எண்ணத்துல உள்ளேயிருந்து யாராவது வெளியே வரலாம். அப்படி யாராவது வந்தாங்கன்னா அவங்களை மடக்க வேண்டியது உங்க ரெண்டு பேரோட வேலை...!"

எஸ்... ஸார்" என்றார் வசீகர்.

மூன்று பேரும் இறங்கிக் கொண்டு அரையிருட்டான பிளாட்பாரத்தில் நடைபோட்டார்கள். க்ரே நிற சஃபாரி யூனிஃபார்ம் அவர்களின் தேகாப் பியாச உடம்புகளைக் கச்சிதமாய் கவ்வியிருந்தது. வெங்கடேஷ் நடந்து கொண்டே பேசினார்.

வெற்றிச் செல்வன்!"

ஸார்...."

ரிவால்வர் அலர்ட்ல இருக்கட்டும்...நீங்க கொஞ்சம் எமோஷனல் டைப். அவசியம் ஏற்பட்டால் மட்டுமே ரிவால்வர் உங்க கைக்கு வரணும்."

எஸ்... ஸார்...!"

வடிவேல்!"

ஸார்..."

உங்களுக்கும் அதே இன்ஸ்ட்ரக்ஷன்தான்... நம்முடைய எம் பரசுராம் இல்லை. யாழினி. அந்தப் பெண்ணை உயிரோடு மீட்கறதுதான் நம்ம நோக்கம். நாம் கமேண்டோ ட்ரெனிங்கில் இருக்கும்போது ஒரு விஷயம் சொல்லிக் கொடுத்து இருக்காங்க. 'விடாமல் தட்டிக் கொண்டே இரு... கதவு திறக்கும் வரை அல்ல, காரியம் கை கூடும் வரை...! ஞாபகம் இருக்கா...?"

இருக்கு ஸார்..."

அதைத்தான் இப்போ பண்ணப் போறோம்... பரசுராம் கிட்டே ஏதோ ஒரு பெரிய அளவில் சட்ட விரோதமான காரியம் இருக்கு. அதுல ஒரு வெளிநாட்டோட பங்கும் இருக்கு. அது என்னான்னு ஸ்மெல் பண்ண கமிஷனர் எவ்வளவோ முயற்சி செய்தும் முடியலை... இன்னிக்கு அந்த சட்ட விரோதமான காரியம் என்னான்னு நாம கண்டுபிடிக்கப்போறோம். யாழினி இந்த டிரஸ்ட்டை விட்டு வெளியே வரும் போது பரசுராம் சம்பந்தப்பட்ட உண்மைகளும் வெளியே வந்துவிடும். இந்த நிமிஷத்திலிருந்து நம்ம அதிரடி ஆபரேஷன் ஆரம்பமாகிறது."

மூவரும் காம்பௌண்ட் கேட்டை நெருங்கி அதன் ஓரமாய் இருந்த விக்கெட் டோரைத் தட்ட, செக்யூரிட்டி நரசிம்மன் கதவைத் திறந்த கொண்டு மெள்ள எட்டிப் பார்த்தான். இரும்புத் தூண்களைப் போல் நின்றிருந்த மூன்று பேரைப் பார்த்ததும் இலேசாய் முகம் மாறினான். வெங்கடேஷ் அவனுடைய தோள்பட்டையில் கையை வைத்து அழுத்தம் கொடுத்துக் கொண்டே கேட்டார்.

பரசுராம் உள்ளே இருக்காரா?"

இல்ல... நீங்க யாரு...?"

நரசிம்மனின் உதட்டோரம் பளீரென்று ஓர் அறை விழ வாய்க்குள் உப்பு கரித்தது. வெங்கடேஷின் குரல் உயர்ந்தது.

பரசுராம் இருக்காரா... இல்லையா?"

சட்டென்று நரசிம்மனுக்கு மூளையில் உறைத்தது. 'இவர்கள் போலீஸ்...! மற்றவர்களைப் பேல இவர்களை விரட்ட முடியாது.'

என்ன கேட்டது... காதுல விழலையா?"

ஸ...ஸ...ஸார்... பரசுராம் அய்யா இப்பத்தான் வெளியே போனார். இனி நாளைக்குக் காலையில் தான் வருவார்." அவன் சொல்லி முடிக்கவில்லை, இடது பக்கக் கன்னத்தில் இடி இறங்கியது போன்ற தினுசில் இன்னொரு அடி விழ, நரசிம்மன் பொறி கலங்கிப் போனவனாய் அப்படியே மண்டியிட்டு உட்கார்ந்தான். இரண்டு கைகளையும் உயர்த்திக் கும்பிட்டான். அடிக்காதீங்க ஸார்... அய்யா... உள்ளேதான் இருக்கார்."

வேற யார் யாரெல்லாம் உள்ளே இருக்காங்க...?"

வேற யாரும் இல்லீங்க ஸார்."

வெற்றிச் செல்வனை வெங்கடேஷ் ஏறிட்டார். ஸார்! இவ்வளவு பெரிய கட்டடத்துக்குள்ளே பரசுராம் எங்கேயிருக்கார்னு நமக்குத் தெரியாது. ஆனா, இவனுக்குத் தெரியும். இவனையும் கூட்டிக் கிட்டு உள்ளே போயிடுவோம். பரசுராமைத் தடாலடியா மடக்குவோம்..."

நரசிம்மனைத் தள்ளிக் கொண்டு நடந்தார்கள். மரங்கள் சூழ்ந்த அந்தப் பகுதி இருட்டின் அடர்த்தியில் ஏதோ ஒரு காட்டுப் பகுதி போன்ற சூழ்நிலையை உருவாக்கியிருந்தது. சற்றுத் தொலைவில் ஒரு ட்யூப் லைட் சோகையாய் ஒளிர்ந்து உற்பத்தி செய்திருந்த வெளிச்சத்தில் கட்டடத்தின் முகப்பு தெரிந்தது.

உம் பேர் என்ன?"

ந... ந... நரசிம்மன் ஸார்"

எத்தனை வருஷமாய் இங்கே வேலைக்கு இருக்கே?"

ரெண்டு வருஷமாய்."

இன்னிக்கு மத்தியானம் மூணு மணி சுமார்க்கு பிங்க் நிற ஸ்கூட்டியில் ஒரு பொண்ணு இங்கே வந்தாளா?"

நரசிம்மனின் அடிவயிற்றில் பயம் சுருண்டது. ‘போலீசுக்கு விஷயம் போய்விட்டது!’

அப்படி யாரும் வரலை ஸார்...’

பொய் சோல்லாதே...! அந்தப் பொண்ணு பேரு யாழினி. அவ இந்த டிரஸ்ட் கட்டடத்துக்குள்ளே வந்ததை ஒருத்தர் பார்த்து இருக்கார்..."

ஸார்... இப்போ இந்த டிரஸ்ட் நடக்கிறது இல்லை. நான் பேருக்குத்தான் செக்யூர்ட்டி. யார் உள்ளே போறாங்க யார் வெளியே வர்றாங்கன்னு நான் அவ்வளவாய்க் கண்டுக்கிறது இல்லை..."

நீ பொய் சொல்றியா... உண்மை சொல்றியான்னு இன்னும் கொஞ்சம் நேரத்துல தெரிஞ்சுடும்ட...!" வெங்கடேஷ் சொல்லிக் கொண்டே நரசிம்மனைத் தள்ளிக் கொண்டு கட்டடத்துக்கு முன்பாய் வந்து நின்றார்.

உன்னோட அய்யா இப்போ எங்கே இருப்பார்?"

முதல் மாடியில் தூங்கிட்டிருப்பார் ஸார்..."

கட்டடத்தின் அரையிருட்டான படிகளில் ஏறினார்கள். நிமிஷ நேரத்துக்குப் பிறகு மாடி வராந்தா நீளமாய் வந்தது. வராந்தாவில் முதல் அறை. கதவு சாத்தியிருந்தது. வெங்கடேஷ் நரசிம்மனுக்குக் கண்ணைக் காட்டினார்.

ம்... தட்டு...!"

நரசிம்மன் வியர்த்து வழிந்து கொண்டு கதவைத் தட்டினான். இரண்டு தட்டலுக்குப் பிறகு உள்ளேயிருந்த பரசுராமின் குரல் கேட்டது.

யாரு...?"

அய்யா... நான்தான்"

என்னடா! இந்த நேரத்துல வந்து கதவைத் தட்டிகிட்டு இருக்கே? விஷயம் என்னவா இருந்தாலும் எனக்கு ஃபோன் பண்ண வேண்டியதுதானே?"

அய்யா...! போலீஸ் வந்திருக்காங்க. உங்களைப் பார்க்கணுமாம்..."

உள்ளே சில விநாடிகளுக்கு மௌனம். பிறகு நடைச்சத்தம். தொடர்ந்து தாழ்ப்பாள் விலகும் சத்தம். கதவு திறந்தது. பரசுராம் பைஜாமாய் மாதிரியான ஒரு ட்ரஸ்ஸில் புகுந்து தொள தொளப்பாகத் தெரிந்தார்.

கண்களில் இலேசான தூக்கக் கலக்கம். இடது புறங்கையால் கெட்டாவியை அடக்கிவிட்டு வெங்கடேஷை ஏறிட்டார்.

பகல் நேரத்துல கமிஷனர் வந்துட்டுப் போனார். இந்த ராத்திரி நேரத்துல நீங்க வந்திருக்கீங்க. என்ன விஷயம்?"

வெங்கடேஷ் தன் கையில் இருந்த தாளை நீட்டினார்.

சர்ச் வாரண்ட்!"

பரசுராமின் இரண்டு புருவங்களும் சில மில்லி மீட்டர் உயரத்துக்கு மேலேறின.

சர்ச் வாரண்ட்டா...?"

ம்"

எதுக்கு...?"

இன்னிக்கு மத்தியானம் மூணு மணி சுமார்க்கு யாழினி என்கிற ஒரு பத்திரிகை ரிப்போர்ட்டர் பொண்ணு உங்களைப் பார்க்க வந்திருக்கா. அதுக்கப்புறம் அந்தப் பொண்ணுகிட்டேயிருந்து ஒரு தகவலும் இல்லை. அதனால..."

பரசுராமின் முகத்தில் கோபத்தின் செம்மை பரவியது.

அதனால... அவ இந்த ட்ரஸ்ட் கட்டடத்துக்குள்ளே தான் இருப்பா என்கிற எண்ணத்துல சர்ச் வாரண்ட்டோட வந்துட்டீங்க?"

எஸ்..."

தாராளமாய் போய் தேடுங்க. இந்த பங்களாவுக்குப் பின்னாடி அவுட் ஹவுஸ் ஒண்ணு இருக்கு. அங்கே ரெண்டு வேலைக்காரங்க இருப்பாங்க. ஒருத்தன் பேரு யாதவ். அவன் சமையல்காரன். இன்னொருத்தன் மனோஜ். என்னுடைய தேவைகளை கவனிச்சுக்கிற ஆள். இந்த ரெண்டு பேரையும் தவிர வேற யாரும் இங்கே இருக்க மாட்டாங்க!"

உள்ளே யார் இருக்காங்க... யார் இல்லைன்னு என்கிற விவரமெல்லாம் இன்னும் கொஞ்ச நேரத்துல தெரியும்" என்று சொன்ன வெங்கடேஷ் வடிவேலையும் வெற்றிச் செல்வனையும் பார்த்தார்.

உங்க ரெண்டு பேர்ல யாராவது ஒருத்தர் இவர்கிட்டே இருக்கணும். இவர் இந்த ரூமை விட்டு வெளியே போகக்கூடாது. யாருக்கும் ஃபோன் பண்ணவும் கூடாது. ரெண்டு பேர்ல யார் இருக்கீங்க?"

நான் இருக்கேன் ஸார்" என்றார் வெற்றிச் செல்வன்.

ஓ.கே...! பீ... கேர்ஃபுல் வெற்றிச்செல்வன்! பரசுராமோட செல்ஃபோனை வாங்கி வெச்சுக்குங்க... உங்க ரிவால்வர் அலர்ட்ல இருக்கட்டும். இவர் உங்களைத் தாக்க முயற்சி பண்ணினாலோ, அல்லது இங்கேயிருந்து தப்பிக்க நினைச்சாலோ தயங்காம முழங்காலுக்கு கீழே ‘ஷூட்’ பண்ணிருங்க."

எஸ்... ஸார்..." என்று சொன்ன வெற்றிச் செல்வன் பரசுராமை நோக்கி கையை நீட்ட, அவர் கோபத்தோடு தன்னிடம் இருந்த செல்ஃபோனை எடுத்து வீசாத குறையாகக் கொடுத்தார்.வெங்கடேஷும், வடிவேலும் உயர்த்திப் பிடித்த ரிவால்வர்களோடு செக்யூர்ட்டி நரசிம்மனைத் தள்ளிக் கொண்டே நடந்தனர்.

இந்த பங்களாவுக்குள்ளே இருக்கிற ஒவ்வொரு அங்குல இடத்தையும் காட்ட வேண்டியது. உன்னோட வேலை....ம்...நட!"

வெற்றிச்செல்வனின் கையில் இருந்த ரிவால்வர் பரசுராமையே பார்த்துக் கொண்டிருக்க, அவர் கட்டிலில் அசையாமல் ஒரு சிலையைப் போல் உட்கார்ந்திருந்தார்.

அறையில் கனத்த அமைதி.

முழுதாய் இரண்டு நிமிடம் கரைந்து காணாமல் போயிருந்த போது பரசுராம் கட்டிலிலிருந்து இறங்கினார்.

என்ன வெற்றி...! அவங்க கீழே போயிட்டாங்களா?"

போயிட்டாங்க அய்யா!"சொன்ன வெற்றிச்செல்வன் பவ்யமாய் எழுந்து நின்றார். ரிவால்வரை இடுப்பில் செருகிக் கொண்டார். அய்யாவை பார்த்த மாதிரி துப்பாக்கியை நீட்டினதுக்காக மன்னிக்கணும்." பரசுராம் புன்னகைத்தார்.

கவர்மெண்ட் தர்ற சம்பளத்துக்கு நீ அந்த வேலையைக் கூட பண்ணலைன்னா எப்படி வெற்றி?"

அய்யா...! இப்ப பங்களாவுக்குள்ளே ஒரு புறா கூட இல்லையே...?"

புறா இருந்ததுக்கான அடையாளம் கூட இருக்காது. சரியான நேரத்துல நீ தகவல் கொடுத்ததால அத்தனை புறாக்களையும் படப்பை பண்ணை வீட்டுக்குக் கொண்டு போயிட்டேன். சரி... என்னோட செல்ஃபோனைக் குடு. நான் அட்சய்கிட்டே பேசணும். அவன் என்னோட ஃபோன் காலை எதிர்பார்த்து காத்திட்டிருப்பான்.

வெற்றிச்செல்வன் செல்ஃபோனை எடுத்துக் கொடுத்தார்.

வெற்றி!"

அய்யா...!"

அப்படி அறைக்கு வெளியே நின்னு அவங்க வர்றாங்களான்னு ஒரு பார்வை பார்த்துக்க. திடும்ன்னு வந்துடப் போறங்க..."

நீங்க பயப்படாமே பேசுங்கய்யா! இன்னும் ஒரு அரை மணி நேரத்துக்கு குறையாம அந்த ரெண்டு பேரும் வரமாட்டாங்க. அதிலும் அந்த வெங்கடேஷ் இருக்கானே அவன் ஒவ்வொரு செங்கல்லாய்த் தடவிப் பார்ப்பான்."

பரசுராம் செல்ஃபோனில் அட்சயைப் பிடித்தார்.

அங்கே நிலைமை எப்படி அங்கிள்?"

போலீஸ் அவங்க ட்யூட்டியைப் பார்த்துட்டிருக்காங்க. வெற்றி தன்னோட ட்யூட்டியைப் பார்த்துட்டிருக்கான்."

நீங்க இப்போ படப்பை ஃபார்ம் ஹவுஸுக்கு வர முடியாதா?"

இன்னிக்கு நான் அசையக் கூட முடியாது!"

என்ன அங்கிள் நீங்க...? அந்த பழிகாரி யாழினியை நான் பார்க்கணும்னு துடியாய்த் துடிச்சிட்டிருக்கேன். நீங்க என்னடான்னா...?"

இதோ பார் அட்சய்...! நாம இப்போ எச்சரிக்கையா இருக்க வேண்டிய நேரம். இந்த நிமிஷம் முக்கியமான விஷயம் அந்த யாழினி கிடையாது. கோடிக்கணக்கில் பணம் கொட்டுகிற பிசினஸ்-யு.எஸ்.ஸிலிருந்து ரிசர்ச் ஸ்காலர் காரல்மேத்யூ கம்மிங் சண்டே இந்தியாவுக்கு வர்றார். அவரோட பேச்சுவார்த்தை நடத்த வேண்டிய கட்டாயத்தில் இருக்கோம்."

யூ... ஆர். .. கரெக்ட்... அங்கிள்... எனக்கு அந்த யாழினியைப் பார்க்கணும் போல் இருக்கு!"

நம்ம பார்ட்னர் டாக்டர் உத்தண்டராமனைக் கூட்டிகிட்டு படப்பை பண்ணை வீட்டுக்குப் போ... அவரும் யாழினியைப் பார்க்கணும்னு சொன்னார். பண்ணை வீட்டு நிலவரைச் சாவி வாட்ச்மேன் ஈஸ்வர்கிட்டே இருக்கும்... வர்ங்கிக்க...!"

தேங்க்ஸ் அங்கிள்"

ஒரு விஷயம்"

என்ன?"

மூர்க்கத்தனமான உன்னோட கோபத்தை யாழினிகிட்டே காட்டி அவளை ஒண்ணும் பண்ணிடாதே... அவளை பரிசோதனைகளுக்கு உட்படுத்த டாக்டர் உத்தண்டராமன் விரும்பறார்..."

யூ... மீன்...'பூவில் செய்த ஆயுதம்?"

அதேதான்!"

அட்சய் அந்த முன்னிரவு நேரத்தில் காரை நூறு கிலோ மீட்டர் வேகத்தில் விரட்டிக்கொண்டிருக்க, டாக்டர் உத்தண்டராமன் கலவரம் உறைந்த முகத்தோடு நெற்றியில் வியர்வை மின்ன பக்கத்து இருக்கையில் உட்கார்ந்திருந்தார்.

அட்சய்... இந்த ராத்திரி நேரத்துல நாம படப்பைப் பண்ணை வீட்டுக்குப் போய்த்தான் ஆகணுமா...? நாளைக்குக் காலையிலகூட போயிருக்கலாமே?"

ஸாரி அங்கிள்... எனக்கு அந்த யாழினியை உடனடியாய்ப் பார்க்கணும் போல் இருக்கு. ஃபார்ம் ஹவுஸோட நிலவறைக்குள்ளே அவ ஒரு குப்பைக் காகிதமா கசங்கிக் கிடக்கிறதை நான் பார்க்கணும்... அப்பத்தான் என்னோட மனசுக்கு ஒரு சின்ன ஆறுதல் கிடைக்கும்.!"

இருந்தாலும் இப்ப நிலைமை சரியில்லையே... போலீஸ் பரசுராமை ஸ்மெல் பண்ணி சர்ச் வாரண்டோட இதம் ட்ரஸ்டுக்குப் போயிருக்காங்க"

போலீஸ் ஸ்மெல் பண்ணிட்டாங்க... உண்மை தான்... ஆனா, சட்ட ரீதியா நம்ம மேல் எந்த ஒரு நடவடிக்கையையும் எடுக்க போலீஸ் டிபார்ட்மென்ட்ல இருக்கிற எந்த ஒரு கொம்பனாலும் முடியாது. அப்படியே ஏதாவது நடவடிக்கை எடுக்கிற மாதிரி இருந்தாலும் என்னோட அப்பா பார்த்துக்குவார். அப்பாவோட அரசியல் செல்வாக்கு டெல்லி அக்பர் சாலை வரைக்கும் பரவியிருக்கிற விஷயம் உங்களுக்குத் தெரியாதா என்ன?"

இருந்தாலும்...!"

இதோ பாருங்க அங்கிள்...! நீங்க, நான், என்னோட அப்பா, பரசுராம் அங்கிள், நாம நாலுபேரும் சேர்த்துதான் 'இந்த பூவில் செய்த ஆயுதம்' ப்ராஜக்டை லான்ச் பண்ணினோம். இது ஒரு சட்ட விரோதமான, விபரீதமான விஷயம்னு தெரிஞ்சுருந்தும், கொஞ்சம் கூட பயப்படாமே அதை செயல்படுத்திக் கிட்டு வந்தோம். காரணம் நம்ம மேல பெய்த டாலர் மழை. அந்த மழையில தொடர்ந்து நனைய வேண்டாமா என்ன?"

நனையணும்."

அப்படின்னா பயப்படாதீங்க... பிரச்னை எந்த உருவத்துல, எப்படி வந்தாலும் அதை நாம் ஃபேஸ் பண்ணியாகணும். யு.எஸ்.ஸில் இருக்கிற பயோமெடிக்கல் சயின்ஸ் சேம்பர்ஸ் இந்த ப்ராஜக்ட்டுக்காக பணத்தைக் கோடிக் கோடியாய்க் கொட்டத் தயாரா இருக்காங்க. அதை நாம் பயன்படுத்திக்க வேண்டாமா?"

பயன்படுத்திக்கணும்..."

வர்ற ஞாயிற்றுக்கிழமை யு.எஸ்.ஸிலிருந்து காரல் மேத்யூ வர்றார். அவர் கூட நீங்க நடத்தப் போகிற பேச்சு வார்த்தை யூஸ்ஃபுல்லா நமக்கு அமையணும். இப்போ தற்காலிகமா நின்னு போயிருக்கிற டாலர் மழை மறுபடியும் கொட்டணும்."

அட்சய்! நான் ஒரு விஷயம் சொல்லட்டுமா?"

என்ன...?"

இந்த பூவில் செய்த ஆயுதம்' ப்ராஜக்ட் எந்த ஒரு பிரச்னையும் இல்லாமே நல்லபடியாதான் போயிட்டிருந்தது. ப்ராஜக்ட்டுக்குத் தேவையான பெண்களை நான் பார்த்து தேர்வு பண்ணிட்டு இருந்தேன். நடுவுல பரசுராம் இந்த விவகாரத்துல புகுந்து குழப்பிட்டார். நாம குறிவைக்கிற பெண்களுக்கு அம்மா அப்பாவோ... சொந்த பந்தங்களோ இருக்கக்கூடாதுங்கிறது ஒரு பொதுவான விதி. ஆனா பரசுராம் தன்னோட வேலைக்காரங்க யாதவ் மனோஜ் மூலமாய் வீடு வீடாப் போய் ஃபினாயிலும் ஊதுவத்தியும் விக்கிற ஒரு பெண்ணை அவ ரொம்பவும் அழகாயிருந்தா.. என்கிற ஒரே ஒரு காரணத்துக்காக ட்ரஸ்ட் பங்களாவுக்குக் கடத்திட்டு வந்துட்டார். அந்த ஹரிதாவுக்கு அண்ணன் தம்பி, அம்மா அப்பான்னு ஒரு பெரிய குடும்பமே இருக்கு... ஹரிதா காணோம்ன்னு ஒட்டு மொத்த குடும்பமும் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போயிடுச்சு... போலீஸ் சரியான நடவடிக்கை எடுக்காத காரணத்தால கலெக்டர் ஆஃபீஸ் வாசலில் ஹரிதாவோட உறவு ஜனம் பூராவும் உண்ணாவிரதம் இருக்கப்போய் எல்லா மீடியாவிலேயும் இப்ப இதுதான் ஹாட் நியூஸ். கமிஷனர் நியமிச்ச ஒரு போலீஸ் தனிப்படை ஹரிதாவை மும்முரமாய்த் தேடிகிட்டு இருக்காங்க..."

அட்சய் காரின் வேகத்தை அதிகப்படுத்திக் கொண்டே வக்ரமாய்ச் சிரித்தான். அங்கிள்! இந்தப் பொண்ணுக கொஞ்சம் அழகா இருந்துட்டாபோதும் மனசுக்குள்ளே ஒரு பெரிய உலக அழகி என்கிற நினைப்பு வந்துடும். அந்த ஹரிதாவை பரசுராம் அங்கிள் கடத்தினது நூத்துக்கு நூறு சரி. தெரிஞ்சோ தெரியாமலோ எனக்கும் அவர் ஓர் உதவி பண்ணியிருக்கார்."

நீ அந்த யாழினியைத்தானே சொல்றே...?"

ஆமா...!"

உன்னை அவமானப்படுத்தின அந்த யாழினி இப்ப நம்ம கையில மாட்டியிருக்கா என்கிற ஒரே காரணத்துக்காக நீ இப்போ சந்தோஷப்படலாம் அட்சய். ஆனா, நாளைக்கு யாழினி காணாமே போயிட்ட விவகாரம் மீடியாவுக்குத் தெரிய வரும் போது தமிழ்நாடு பூராவும் பெரிய அளவுல பேசக் கூடிய விஷயமாக மாறி விஸ்வரூபம் எடுக்கும்..."

அங்கிள்! உங்களுக்கு ஒரு உண்மை தெரியலை. எந்த ஒரு பரபரப்பான நியூஸா இருந்தாலும் சரி மூணே மூணு நாளைக்குத்தான் சூடா இருக்கும். அதுக்கு அப்புறம் அது ஆறி ஒரு கரிக்கட்டையா மாறிடும்."

அட்சய்! உனக்கொரு விஷயம் தெரியுமா?"

என்ன?"

அந்த ஹரிதா இப்போ உயிரோடு இல்லை."

தெரியும்.... பரசுராம் அங்கிள் சொன்னார். அவரோட அண்ணன் மகன் கைலாஷ் நேத்து ராத்திரி ட்ரஸ்ட் பங்களாவுக்கு வந்து ஸ்டே பண்ணியிருக்கான். குடிபோதையில் இருந்த அவன் ஹரிதா படுத்திருந்த அறைக்குப் போய் அவளைக் கெடுக்க முயற்சி செய்ய அங்கிள் அவனைச் சுட்டுக் கொன்னுட்டார். யாதவ்வும், மனோஜும் ரெண்டு பாடியையும் செங்கல்பட்டுக்குக் கொண்டு போய் ஆள் நடமாட்டம் அறவே இல்லாத ஒரு கல் குவாரிக்குப் பக்கத்துல எரிச்சுட்டு வந்துட்டாங்க...!

அட்சய்!"

சொல்லுங்க அங்கிள்!"

யு.எஸ்.ஸில் இருக்கிற பயோ- மெடிக்கல் சயின்ஸ் சேம்பரைச் சேர்த்த ரிசர்ச் ஸ்காலர்களுக்கு இது மாதிரியான விவகாரங்கள் எல்லாம் தெரிஞ்சா அவங்க அந்த நிமிஷமே ப்ராஜக்டை கான்ஸல் பண்ணிடுவாங்க... இனிமேல் நாம் ஜாக்கிர தையா இருக்கணும். பரசுராம் கிட்டே நீதான் பேசணும்!"

டோண்ட் வொர்ரி அங்கிள்...! நான் பேசிடறேன்...! இப்ப எனக்கு இருக்கிற ஒரே ஆசை என்ன தெரியுமா?"

சொல்லு!"

ப்ராஜக்ட் சம்பந்தமா நீங்க யாழினியை மருத்துவ ரீதியாக் கையாளும் போது நான் பக்கத்துல நின்னு பார்க்கணும்... அவ துடிக்கிறதை நான் ரசிக்கணும்."

ரெண்டு நாள் பொறு... அந்த போலீஸ் அமளியெல்லாம் அடங்கட்டும். ட்ரீட்மென்ட்டை ஸ்டார்ட் பண்ணிடலாம்."

டாக்டர் உத்தண்டராமன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே அட்சயின் செல்ஃபோன் ரிங்டோனை வெளியிட்டது. ஹெட் போனை காதுக்குக் கொடுத்து ஸ்பீக்கரை ஆன் செய்தான். மறுமுனையில் பரசுராம் பேசினார்.

ஹலோ அட்சய்! என்ன... படப்பை ஃபார்ம் ஹவுஸுக்குப் போயிட்டிருக்கீங்களா?"

போயிட்டே இருக்கோம். இன்னும் ஒரு அஞ்சு நிமிஷத்துக்குள்ளே ரீச் ஆயிடுவோம். அங்கே நிலைமை எப்படி?"

பரசுராம் சிரித்தார் பலமா. வெற்றிச் செல்வன் நம்ம பக்கம் இருக்கும்போது நமக்கு என்ன கவலை...? வந்தாங்க... டரஸ்ட் பங்களா முழுவதையும் ஒரு மணி நேரமாய்ச் சுற்றிப் பார்த்துட்டு வெறுங்கையை வீசிட்டுப் போயிட்டாங்க... போலீஸ் கமிஷனர் எத்தனை கமாண்டோ படைகளை அனுப்பினாலும் சரி, நாம் பண்ணின தப்புகள்ல ஒரு தப்பைக் கூட கண்டுபிடிக்க முடியாது."

இருந்தாலும் அங்கிள்... இனிமே நாம் மெத்தனமா இருக்கக்கூடாது. போலீஸை எல்லா நேரத்திலும் நாம ஏமாத்திட முடியாது. டெல்லியிலிருந்து அப்பா சென்னை திரும்பியதும் நாம நாலு பேரும் உட்கார்ந்து பேசி போலீஸ் நம்மை நெருங்காதபடி ஒரு பாதுகாப்பான வளையத்தை உருவாக்கிக்கணும்... இல்லேன்னா சட்டத்தோட கை என்னிக்காவது ஒரு நாள் நீண்டு நம்ம சட்டைக் காலரை எட்டிப் பிடிச்சுடும்."

அது எனக்கும் தெரியும் அட்சய்...! இப்ப நான் எதுக்காக உனக்கு ஃபோன் பண்ணினேன் தெரியுமா?"

எதுக்காக...?"

நம்ம கிட்ட மாட்டியிருக்கிற யாழினி மத்த பெண்கள் மாதிரி கிடையாது. அவ ஒரு ஜர்னலிஸ்ட். அவ ரொம்ப நாளைக்கு நம்ம கிட்டே இருக்கக் கூடாது. நம்ம ப்ராஜக்ட் ட்ரீட்மென்ட்டுக்குத் தேவையான அளவு அவளை யூஸ் பண்ணிட்டு டிஷ்யூ பேப்பரை கசக்கி வீசற மாதிரி டிஸ்போஸ் பண்ணிடணும்."

அங்கிள்! நீங்க அந்த யாழினையைப் பத்தி கொஞ்சமும் கவலைப்படாதீங்க... அவளை இனிமேல் ஹேண்டில் பண்றது என்னோட வேலை... மொதல்ல டாக்டர் உத்தண்டராமன் அங்கிளுக்கு அவ ஒரு பரிசோதனை எலியா இருக்கட்டும். அதுக்கப்புறம் யாழினையை என்னோட பொறுப்புல எடுத்துகிட்டு அவளோட திமிரை அடக்கறேன். ஆனா எக்காரணம் கொண்டும் அவள் உயிரோட வெளியே போகமாட்டா..."

சரி... நீங்க ரெண்டு பேரும் எப்போ சிட்டிக்குத் திரும்புவீங்க?"

எப்படியும் விடியற்காலைக்குள்ளே திரும்பிடுவோம்"

பார்த்து பத்திரம்...! இந்த ராத்திரி நேரத்துல ட்ரிங்க்ஸ் எதுவும் எடுத்துக்க வேண்டாம். போலீஸ் அங்கங்கே ப்ரீத் அனலைஸரோடு வெயிட் பண்ணிட்டு இருப்பாங்க..."

யூ டோண்ட் வொர்ரி... வீடேக் கேர் அங்கிள்!"

கார் ஒரு பெரிய காம்பௌண்ட் கேட்டுக்கு முன்பாய் நின்றது. அட்சய் பலமாய் ஹாரனை அழுத்தினான். காம்பௌண்ட் கேட் திறக்கப்பட காத்திருந்தான்.

பதினைந்து விநாடிகள் வரை பொறுமை காத்த அட்சய் எரிச்சலாகி மீண்டும் நீளமாய் ஹார்ன் அடித்தான். இப்போது நாய் உள்ளேயிருந்து குரைத்தது.

வாட்ச்மேன் ஈஸ்வர் என்ன பண்றான்...தண்ணியைப் போட்டுக்கிட்டு தூங்கிட்டானா?"

அட்சய்...! நான் இறங்கிப் பார்க்கட்டுமா?"

நீங்க உட்காருங்க அங்கிள்... நான் போய்ப் பார்க்கிறேன்." அஔன்ன அட்ச காரிலிருந்து இறங்கிப் போய் கேட்டைத் தள்ளிப் பார்த்தான். அது உட்பக்கமாக பூட்டப்பட்டு இருந்தது. அருகில் போடப் பட்டிருந்த ஒரு கல்லின் மேல் ஏறி உள்ளே எட்டிப் பார்த்தான்.

கையில் டார்ச் விளக்கோடு வாட்ச்மேன் ஈஸ்வர் பங்காளவின் உள்ளேயிருந்து ஓட்டமும் நடையுமாய் வந்து கொண்டிருந்தான்.

அய்யா வந்துட்டேன்!"

அட்சய் கோபமாய்க் கத்தினான். கேட் கிட்டே நிக்காமே உள்ளே உனக்கு என்னடா வேலை...?"

மன்னிச்சுக்குங்கயா...! பங்களாவுக்குள்ளே ஏதோ சத்தம் கேட்ட மாதிரி இருந்தது- அதான் உள்ளே போய்ப் பார்த்துட்டு வந்தேன்." வாட்ச்மேன் ஈஸ்வர் சொல்லிக் கொண்டே மூச்சிரைக்க ஓடி வந்து கேட்டைத் திறந்துவிட்டான். அந்தக் கறுப்பு நாய் ரோஜரும் அவன் பின்னால் குறைத்தபடி ஓடி வந்தது. அட்சய் மேல் தாவி வாலை ஆட்டியபடி மெலிதாய்க் கத்தியது. அதன் தலையைத் தடவினான் அட்சய்.

என்னடா ரோஜர்! போன தடவை பார்த்ததை விட இந்தத் தடவை ரொம்பவும் பெருத்துட்டே! நிறைய பீஃப் சாப்பிடறியா?" சொன்ன அட்சய் வாட்ச் மேனிடம் திரும்பினான். ஒரு நாய் இப்படி புளிமூட்டையாட்டம் இருந்தா எப்படி வேகமாய் ஓடும். யாராவது உள்ளே நுழைஞ்சா எப்படி துரத்திப் பிடிக்கும்? அதுக்கு ஒரு வேளைச் சாப்பாட்டைக் குறை."

சரிங்கயா...!" ஈஸ்வர் சொல்லிவிட்டு பவ்யமாய் ஒதுங்கி நிற்க, அட்சய் கார்க்கு வந்து அதைக் கிளப்பி பங்களாவின் உள்ளேயிருந்த போர்டிக்கோவில் கொண்டு போய் நிறுத்தினான். டாக்டர் உத்தண்டராமனும் அவனும் கீழே இறங்கினார். பங்களாவின் சுற்றுப்புறம் முழுவதும் இருட்டில் கரைந்து போயிருந்தது.

ஈஸ்வர்!" அட்சய் கூப்பிட்டான்.

அயா...!"

பங்களாவுக்குள்ளே ஏதோ சத்தம் கேட்டதுன்னு சொன்னியே! என்ன சத்தம்?"

யாரோ நடக்கிற மாதிரி... நாற்காலியைத் தள்ளிக்கிட்டு யாரோ எந்திரிக்கிற மாதிரி... சில சமயம் பேசற மாதிரி..."

டாக்டர் உத்தண்டராமன் கேட்டார், உள்ளே மொத்தம் எத்தனை பொண்ணுங்க இருக்காங்க?"

மூணு பேர்..."

புதுசா வந்த அந்த யாழினிங்கிற பொண்ணையும் சேர்த்துதானே சொல்றே?"

ஆமாங்காயா! அந்த மூணு பொண்ணுகளும் நல்ல மயக்கத்துல இருக்காங்க. போதா குறைக்கு அவங்க மயக்கம் தெளிஞ்சு தப்பிச்சுப் போயிடக் கூடாதேங்கிறதுக்காக கட்டிலோடு சேர்த்து நல்லா கட்டி வால ப்ளாஸ்ட்ரையும் ஒட்டியிருக்கோம்."

அட்சய் தன் நெற்றியைத் தீவிரமாய்த் தேய்த்தபடி சில விநாடிகள் யோசித்துவிட்டு ஈஸ்வரை ஏறிட்டான். அப்படியிருந்தும் உனக்கு உள்ளே யாரோ இருக்கிற மாதிரி சத்தங்கள் கேட்குது...!"

ஆமாங்கயா!"

அது உன்னோட பிரமையா இருக்கும். ராத்திரியில் தண்ணி போடறதை முதல்ல நிறுத்து!"

அட்சய் பேசிக் கொண்டிருக்கும் போதே...

பங்களாவுக்குள் அந்த சத்தம் கேட்டது.

ச்சசல்லீர்ர்ர்"

கண்ணாடி உடைத்து நொறுங்கும் சத்தம்!

பங்களாவின் உள்ளே கண்ணாடிப் பாத்திரம் ஒன்று ‘ச்சசல்லீர்ர்ர்’ என்ற சத்தத்தோடு விழுந்து உடையும் சத்தம் கேட்டு அட்சயும் டாக்டர் உத்தண்டராமனும் கலவர முகங்களோடு ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

வாட்ச்மேன் ஈஸ்வர் பயத்தில் எச்சிலை விழுங்கிக்கொண்டு சொன்னான். இப்படித்தான்யா... இன்னிக்கு சாயந்திரத்திலிருந்தே இப்படி ஏதாவது ஒரு சத்தம் உள்ளேயிருந்து கேட்டுகிட்டே இருக்கும். நானும் பதறியடிச்சுகிட்டு உள்ளே போய்ப் பார்த்தா யாரும் இருக்க மாட்டாங்க. வெச்ச பொருள்கள் வெச்ச இடத்துல அப்படியே இருக்கும்...!"

இப்போ ஏதோ கண்ணாடி உடைஞ்ச மாதிரி சத்தம் கேட்டதே!"

இப்படித்தான்யா சத்தம் கேட்கும். ஆனா உள்ளே போய்ப் பார்த்தா உடைஞ்ச பொருள் எதுவும் இருக்காது!"

கதவைத் திற! உள்ளே போய்ப் பார்த்துடுவோம்"

ஈஸ்வர் சாவிக்கொத்தோடு போர்டிகோ படிகளில் ஏறி வாசல் கதவில் தொங்கிக் கொண்டிருந்த அந்தப் பெரிய பூட்டுக்கு விடுதலை கொடுத்தான். அட்சய் முதல் ஆளா உள்ளே போக உத்தண்டராமன் அவனுடைய தோளைத் தொட்டார். காதருகே முணுமுணுத்தார். அட்சய்! எதுக்கும் கொஞ்சம் எச்சரிக்கையோடு இருப்போம். யாராவது உள்ளே மறைஞ்சிருக்கலாம்..."

ஈஸ்வர் இடது பக்கமாய் நடந்து போய் சுவரில் இருந்து ஸ்விட்சுகளைத் தட்டினான். பங்களாவுக்குள் சி.எம்.எல். பல்புகளின் உபயத்தால் வெளிச்சம் பரவி அந்தப் பெரிய ஹாலில் இருந்த எல்லாப் பொருட்களையும் காட்டியது. ‘ட’ வடிவத்தில் போடப்பட்ட நீலவண்ண வெல்வெட் சோபா. அதன் நடுவே போடப்பட்டிருந்த பளப்பளப்பான ரோஸ்வுட் டீபா. அதன்மீது கண்ணாடி உடம்பாலான ஃப்ளவர் வாஷ். அதில் செருகப்பட்ட ப்ளாஸ்டிக் பூங் கொடுத்து.

அட்சய் ஹாலின் மையத்தில் நின்று கொண்டு சுற்றும் முற்றும் பார்த்தான். அந்த மூணு பெண்களும் அண்டர்க்ரௌண்ட் ரூம்களில்தானே இருக்காங்க?"

ஆமாங்கய்யா!"

ஹாலையொட்டியிருந்த எல்லா அறைகளையும் அலசிப் பார்த்துவிட்டு பின்புறம் இருந்த டைனிங் ஹாலை நோக்கிப் போனார்கள்.

டைனிங் டேபிளின் மேல் வைத்த பொருள்கள் அப்படியே இருந்தன. தண்ணீர் நிரம்பிய கண்ணாடி 'ஜக்' டேபிளின் மையத்தில் பிரதானமாய்த் தெரிந்தது.

அட்சய் தன் தாடையைத் தடவிக் கொண்டு ஆச்சர்ரியப்பட்டான். எந்த இடத்திலும் கண்ணாடிப் பொருள்கள் உடைஞ்ச மாதிரி தெரியலையே?

என்னோட கெஸ் ஒர்க்கைச் சொல்லட்டுமா அட்சய்?"

என்ன அங்கிள்?"

இது போன்று தனியா இருக்கும் ஒற்றை பங்களாக்களில் காற்று பலமாய் வீசும் போது கண்ணாடி ஜன்னல்களில் காய்ந்த இலைச்சருகுகள் வந்து மோதும். அது மாதிரியான சமயங்களில் எழும் சின்னச் சின்ன சத்தங்கள் கூட இந்த நிசப்தமான ராத்திரி வேளைகளில் பல்வேறு வகையான ஓசைகளை உருவாக்கும். உதாரணமாய் ஈஸ்வர் சொன்ன மாதிரி பங்களாவுக்குள் யாரோ நடப்பது போலவும், ஓடுவது போலவும், நாற்காலியை நகர்த்துவது போலவும் சத்தங்கள் வர அந்தக் காற்றுதான் காரணமாய் இருக்க முடியும். அது ஃபிசிக்ஸ்; பௌதிக அடிப்படையிலான உண்மை..."

எனக்கென்னமோ கொஞ்சம் சந்தேகமாயிருக்கு அங்கிள்"

இதோ பார்! 'அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்'னு சொல்வாங்க. இங்கே நம்மைத் தவிர வேற யாரும் வர வாய்ப்பில்லை. மொதல்ல அந்தப் பொண்ணுங்க மூணு பேரும் எது மாதிரியான நிலைமையில் இருக்காங்கன்னு பார்ப்போம். முக்கியமாய் அந்தப் பத்திரிகைக்காரப் பொண்ணு யாழினி... வா... போலாம்."

வாட்ச்மேன் ஈஸ்வர் மறுபடியும் ஹாலுக்குள் நுழைந்து மாடிப்படிக்குக் கீழே இருந்த தட்டுமுட்டு சாமான்களை அகற்றிவிட்டு டைல்ஸ் பதிக்கப்பட்டிருந்த அந்த 'மேன் ஹோல்'சதுரத்தைப் பிடித்துத் தூக்கினான். உள்ளே மங்கிய வெளிச்சத்தில் படிகள் சுழல் வடிவில் தெரிந்தது.

ஈஸ்வர் கேட்டான்.

அய்யா! உள்ளே இறங்கலாமா?"

மொதல்ல நீ இறங்கு...!"

ஈஸ்வர் கையில் இருந்த டார்ச்சை உயிர்ப்பித்துக் கொண்டு இறங்க அட்சயும் உத்தண்டராமனும் ஜாக்கிரதை உணர்வுடன் பின் தொடர்ந்தார்கள்.

அடுத்த சில விநாடிகளில் நிலவறையின் தரை தட்டுப்பட்டது. குறுகலான பாதையில் நடந்து பூட்டப்பட்டிருந்த அறைக் கதவுக்கு முன்பாக வந்து நின்றார்கள். ஈஸ்வர் சொன்னான்.

அந்தப் புதுப்பொண்ணு யாழினி இந்த ரூம்லதான்யா இருக்கா!"

திற...!"

ஈஸ்வர் தன்னிடம் இருந்த சாவிக் கொத்தில் ஒரு சாவியைப் பொறுக்கி எடுத்து கதவில் தொங்கிய பூட்டுக்குக் கொடுத்தான். கனமான கதவு விலகி வழிவிட்டது. உள்ளே மங்கலாய் ஜீரோவாட்ஸ் விளக்கொன்று அழகான வெளிச்சத்தை அந்த அறை பூராவும் தூவியிருக்க, சுவரோரமாய்ப் போடப்பட்டு இருந்த கட்டிலில் யாழினி அசைவற்ற நிலையில் மல்லாந்து தெரிந்தாள். அட்சய் மெதுவா நடந்து போய் அவளுக்குப் பக்கத்தில் நின்றான்.

இன்றைக்குக் காலையில் பறித்த ரோஜாவாய்ப் பரவசப்படுத்தியவள். இப்போது வாடிய கீரைத் தண்டா உணர்வில்லாமல் படுத்து இருப்பதைப் பார்த்ததும் அட்சயின் உதட்டில் ஒரு குரூரப் புன்னகை உதிர்த்தது. டாக்டர் உத்தண்டராமனைத் திரும்பிப் பார்த்தான்.

அங்கிள்! இவதான் அந்த திமிர் பிடிச்ச யாழினி!"

உத்தண்டராமன் தன் பார்வையால் அவளுடைய உடம்பு முழுவதையும் தடவிவிட்டு கண்ணாடியைக் கழற்றி கையில் வைத்துக் கொண்டு வலது கண்ணைச் சிமிட்டினார். அழகான சிவப்புப் புறா... இது மாதிரியான ஜாதிப் புறாக்கள்தான் நம்ம ப்ராஜக்ட்டுக்கு வேணும்..."

இவ உடம்புல உயிர் இருக்கிற வரைக்கும், ஒரு சொட்டு ரத்தம் இருக்கிற வரைக்கும் நீங்க யூஸ் பண்ணிக்கலாம் அங்கிள்... இனி இந்த யாழினியோட நாட்கள் இந்த இடத்துலதான் எண்ணப்படணும்."

அட்சய் சொல்லிக் கொண்டிருக்கும் போதே அந்தச் சத்தம் கேட்டது. நாய் ரோஜரின் குலைப்புச் சத்தம்.

அட்சய் ஈஸ்வரைத் திரும்பிப் பார்த்தான்.

என்ன ரோஜர் குரைக்கிறான்?"

என்னான்னு தெரியலைங்கய்யா..."

ராத்திரி சாப்பிட்டானா?"

நல்லாவே சாப்பிட்டான்"

உத்தண்டராமன் இடைமறித்துச் சொன்னார். அட்சய்! ரோஜரோட குரைப்பு கொஞ்சம் வித்தியாசமாயிருக்கு..."

வித்தியாசமா... என்ன வித்தியாசம்...?"

ஒரு திருடனையோ, அந்நிய நபரையோ பார்த்து குரைக்கிறது இல்ல இது?"

பின்னே?"

அது உயிருக்குப் போராடுகிற மாதிரி இருக்கு..."

அங்கிள்! நீங்க என்ன சொல்றீங்க?"

இது ரோஜரோட மரண ஓலம்... அதை யாரோ என்னமோ பண்ணியிருக்காங்க... வாங்க போய் பார்க்கலாம்..."

மூன்று பேரும் யாழினியை மறந்துவிட்டு நிலவறையை விட்டு வெளியே வந்தார்கள். ஈஸ்வர் அறைக் கதவைப் பூட்டினான்.

ரோஜரின் குரைப்பு விடாமல் கேட்டுக் கொண்டிருக்க அட்சய் வேகமாய் ஓடினான். ஈஸ்வர்! டார்ச்சை என்கிட்ட குரு."

அவன் கொடுத்தான்.

அடுத்த நிமிட நேரத்திற்குள் மேன் ஹோலைத் தள்ளிக் கொண்டு வெளியே வந்தார்கள். ஹாலில் ஓடி போர்கோவுக்கு வந்த போது ரோஜர் காருக்குப் பக்கத்தில் தெரிந்தது. நிலை கொள்ளாமல் அங்கும் இங்கும் ஓடிக் கொண்டிருந்தது.

ஏ ரோஜர்!"

அட்சய் போர்டிகோ படிகளில் நின்று கொண்டு குரல் கொடுக்க அது திரும்பிப் பார்த்து ஓடிவந்தது.

தள்ளாட்டமான ஓட்டம். பெரிது பெரிதாய் மூச்சு வாங்கிக் கொண்டு அட்சயின் மேல் தாவியது. அதை அப்படியே கட்டிப்பிடித்துக் கொண்டான். அதன் முதுகைத் தடவி விட்டான். உனக்கு என்னடா ஆச்சு... ஏண்டா இப்படிக் கத்தறே?" அட்சய் கேட்டுக் கொண்டு இருக்கும் போதே ரோஜர் அப்படியே வழுக்கிக் கொண்டு சரிந்து விழுந்தது.

இப்போது அதன் வாயிலும் மூக்கிலும் ரத்தம் எட்டிப் பார்த்து வழிய ஆரம்பித்தது.

ஈஸ்வர்! ரோஜர்க்கு என்னாச்சுன்னு பாரு."

ஈஸ்வர் மண்டியிட்டு உட்கார்ந்து நாயைப் புரட்டினான். அதன் உடலில் இப்போது அசைவில்லை. கண்கள் நிலைத்துப் போய் நாக்கு வெளித்தள்ளியிருந்தது. கண்களில் நீரோடு நிமிர்ந்தான் ஈஸ்வர்.

அய்யா! நம்ம ரோஜர் போயிடுச்சு..."

அட்சய் கலக்கமாய் டாக்டரைப் பார்த்தான். எப்படி அங்கிள்... நாம உள்ளே வரும் போது ரோஜர் ஹெல்த்தியாதானே இருந்தான்?"

தள்ளு ஈஸ்வர்... நான் பார்க்கிறேன்..." சொன்ன உத்தண்டராமன் டார்ச் வெளிச்சத்தில் நாயைச் சோதித்துப் பார்த்தார். ஒரு நிமிஷ நேரத்திற்குப் பிறகு பெருமூச்சோடு நிமிர்ந்தார்.

ஸ்நேக் பைட்... கட்டு விரியன் போட்டிருக்கும்னு நினைக்கிறேன்... அதான் ‘ப்ளட்’ க்ளாட்டாகி மரணம்."

அய்யா...!"

என்ன?"

நம்ம பங்களா ஏரியாவுக்குள்ளே பாம்புகளே இல்லையா... நான் இங்கே வேலைக்குச் சேர்ந்த புதுசுல ஒண்ணு ரெண்டு இருந்தது. அதையும் அடிச்சுக் கொன்னுட்டேன். அதுக்குப்புறம் ஒரு பாம்பு கூட கண்ணுல படலை..."

நீ பார்த்து இருக்கமாட்டே....அநியாயமாய் ஒரு நல்ல நாய் போச்சு... ஈஸ்வர்!"

அய்யா...?"

இதை பங்களாவுக்கு வெளியே எங்கேயாவது ஆழமாய் குழிதோண்டி புதைச்சுடு..."

சரிங்கய்யா...!" தலையாட்டிய ஈஸ்வர் நாயின் இரண்டு பின்னங்கால்களையும் பிடித்து இழுத்தபடி நகர்ந்தான்.

அட்சய் நாயையேப் பார்த்துக் கொண்டு அசையாமல் நிற்க டாக்டர் அவனுடைய தோளைத் தொட்டார்.

என்ன யோசனை...?"

விபரீதம் அங்கிள்"

என்ன விபரீதம்?"

இந்தப் பண்ணை பங்களாவில் ஏதோ ஒரு விபரீதம் இருக்குன்னு என்னோட மனசுக்குப்படுது... நாயோட மரணத்துக்கு பாம்புக்கடி காரணமாய் இருக்காதுன்னு நினைக்கிறேன்...!"

வேற எது காரணமாய் இருக்கும்ன்னு நினைக்கிறே?"

எனக்கு சொல்லத் தெரியலை அங்கிள்... நம்மை யாரோ ஸ்மெல் பண்ணிட்டாங்கன்னு நினைக்கிறேன்."

யாரோன்னா யாரு... போலீஸா?"

போலீஸா இருந்தா இந்நேரம் நாம எல்லாரும் லாக்கப்புக்குள்ளே உட்கார்ந்துட்டு இருப்போமே?"

பின்னே யாரு...?"

முகம் தெரியாத எதிரி"

இதோ பார் அட்சய்! தற்செயலாய் நடந்த நாயோட மரணத்துக்கு முடிச்சு போட்டு எதை எதையோ கற்பனை பண்ணிக்கிட்டு இருக்காதே நாளைக்கு நீ, நான், பரசுராம் மூணு பேரும் இங்கே வருவோம். மேற்கொண்டு ஏன்ன செய்யலாம்கிறதைப் பத்திப் போவோம்."

உத்தண்டராமன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே அட்சயின் செல்ஃபோன் அழைத்தது.

டாக்டர் உமையாள் செல்ஃபோனை காதுக்கு ஒற்றினான்.

என்ன ஆன்ட்டி...?"

நீ இன்னமும் தூங்கலையா அட்சய்... மணி பன்னிரண்டாகப் போகுது..."

தூக்கம் வரலை ஆன்ட்டி.... அம்மாவோட ஞாபகமாவே இருக்கு. அம்மா இப்போ எப்படி இருக்காங்க?"

கொஞ்சம் பெட்டர்... அதுதான் உனக்கு ஃபோன் பண்ணினேன். அம்மாவுக்கு எந்த நிமிஷமும் சுய உணர்வு திரும்பலாம். முடிஞ்சா ஹாஸ்பிடலுக்கு வந்துட்டுப்போ... இல்லேன்னா... நாளைக்குக் காலையில் வா..."

இப்ப என்னால உடடினயா புறப்பட்டு வர முடியாது ஆன்ட்டி. தூக்கம் வரலைன்னு ரெண்டு தூக்கமாத்திரை போட்டுகிட்டேன். இந்த நிலைமையில காரை ட்ரைவ் பண்ணிட்டு வர்றது ரிஸ்க்."

வேண்டாம்... வேண்டாம்! நீ நாளைக்கே வா. ஒண்ணும் அவசரமில்லை... நீ போய்த்தூங்கு. நாளைக்குப் பார்த்துக்கலாம். குட் நைட்!

மறு முனையில் டாக்டர் உமையாள் ஃபோனை வைத்து விட அட்சயும் செல்ஃபோனை அணைத்தான்.

உத்தண்டராமன் அட்சயைப் பார்த்து புன்னகை செய்தார். பொருத்தமான ஒரு பொய்யைச் சொல்லிட்டே. இனிமேலும் நாம இங்கே இருக்க வேண்டாம் கிளம்பு..."

பெரு மூச்சோன்றை வெளியேற்றிவிட்டு தலையாட்டினான் அட்சய்.

மறுநாள் காலை ஏழு மணி.

தன் படுக்கையறையின் கதவு மெலிதாய் தட்டப் படும் சத்தம் கேட்டு கண் விழித்தான் அட்சய். ராத்திரி முழுவதும் சரியான தூக்கம் இல்லாத காரணத்தால் மிளகாயைத் தொட்டு தேய்த்த மாதிரி கண்கள் எரிந்தது. போர்வையை உதறிவிட்டு எழுந்து கதவைத் திறந்தான்.

வேலையாள் நின்றிருந்தான்.

அய்யா!"

என்ன வேணு?"

உங்களை ஒருத்தர் பார்க்கிறதுக்காக ஆறு மணிக்கே வந்து இருந்தார். ஏதோ அவசரம்னு சொன்னார். நான் அவரை ஒரு மணி நேரம் கழிச்சு வரும்படி சொன்னேன். அவரும் சரியா ஏழு மணிக்கு வந்துட்டார். சிட் அவுட்ல உட்கார வெச்சிருக்கேன்."

அவரோட பேர் என்னான்னு கேட்டியா?"

நகுல்னு சொன்னாருயா!"

அந்தக் காலை வேளையில் தன் வீட்டு வரவேற்பறையில் நகுலைப் பார்த்ததும் அட்சய் இலேசா முகம் மாறி பிறகு இயல்பான நிலைக்கு வந்தான்.

என்ன நகுல் இவ்வளவு காலையில் வந்திருக்க?"

நகுல் பெருமூச்சோடு நிமிர்ந்தான்.

உன்னோட அம்மா இப்போ எப்படி இருக்காங்க?"

நோ பிராப்ளம்... ஷி ஈஸ் கம்ஃபர்டபிள்...! ஆமா, நீ ஏண்டா எதையோ பறிகொடுத்தவன் மாதிரியிருக்கே?"

உண்மையிலேயே பறி கொடுத்துட்டுத்தான்டா வந்திருக்கேன்."

என்னடா சொல்றே?"

எனக்குன்னு இருந்தது ஒரே ஒரு சந்தோஷம்தான். அதுவும் இப்ப இல்லைன்னு ஆயிடுச்சு..." சொன்ன நகுல் இரண்டு கைகளாலும் தன் முகத்தைப் பொத்திக் கொண்டான். விசும்பலில் அவனுடைய முதுகு அதிர்ந்தது.

அட்சய் அவனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்தான். தோளைப் பற்றி மெல்ல உசுப்பினான். நகுல்! நீ என்ன சொல்றேன்னு எனக்குப் புரியலை. ஊர்ல யாருக்காவது... ஏதாவது..."

நகுல் கண்ணீரை அடக்கிக் கொண்டு போனான்.

அட்சய்....! நீயும் நானும் இத்தனை நாள் நண்பர்களாய் பழகியிருந்தாலும் நான் உன்கிட்டே ஒரு விஷயத்தைப் பகிர்ந்துக்கொண்டது இல்லை... நான் இப்போ சொல்லப் போறேன்."

சொல்லு... என்ன?"

கடந்த ஒரு வருஷகாலமாய் நானும் ஒரு பெண்ணும் ஒருத்தரையொருத்தர் விரும்பிட்டிருந்தோம்."

அட... காதல்...! சொல்லு... சொல்லு..."

எனக்கு ஒரு வேலை கிடைச்சதும் கல்யாணம் பண்ணிக்கவும் இருந்தோம்... நேத்துதான் எனக்கு ஒரு வேலை கிடைச்சது..."

சரி... இப்ப என்ன பிரச்னை...?"

அந்த பொண்ணை நேத்து மத்தியானத்திலிருந்து காணோம்"

அட்ச சட்டென்று மனசுக்குள் பதுங்கினான். என்னது! பொண்ணைக் காணோமா?"

ஆமா..." தலையாட்டிய நகுலின் கண்களில் நீர் எட்டிப் பார்த்துப் பளபளத்தது.

எ... எப்படி...?"

தெரியலை... நேத்து மத்தியானம் வெளியே போனா. இதுவரை ஒரு தகவலும் இல்லை."

பொண்ணோட பேர் என்ன?"

யாழினி..."

அட்சயின் மொத்த உடம்பும் ஒரு விநாடி நேரத்துக்குள் வியர்வைக் குளியலுக்கு உட்பட்டது. நாக்கு வறண்டு தொண்டைக்குழி அவஸ்தையோடு ஏறி இறங்கியது.

யாழினியா...?"

அட்சயின் அதிர்ச்சியைக் கவனித்த நகுல் கேட்டான் என்ன அட்சய்... உனக்கு யாழினியைத் தெரியுமா?"

தெ... தெரியாது... ஏதோ பழக்கமான பேர் மாதிரி இருக்கேன்னு யோசனை பண்ணிப் பார்த்தேன்!"

யாழினி ஒரு பெண்கள் மாத பத்திரிகையில் ஃப்ரீ லான்ஸரா ஒர்க் பண்ணிட்டிருக்கா. ரொம்பவும் துணிச்சலான பொண்ணு. எந்த ஒரு சமூக அவலமும் அவளோட கண்ணுல பட்டுடக்கூடாது. ஒரு எரிமலையாட்டம் பொங்கி எழுந்துடுவா..."

அட்சயின் இதழ்க் கோடியில் கேலிப் புன்னகையொன்று அரும்பியது. ஓ... இப்போ புரியுது... வீதியில் போகிற பிரச்னைகளைக் கூப்பிட்டு விலை பேசி வாங்கற டைப் உன்னோட ஆளு... இல்லையா நகுல்?"

ஒரு வகையில் பார்த்தா அப்படித்தான்!"

ஒரு பொண்ணு காணாமே போறதுக்கு இந்த காரணம் ஒண்ணு போதுமே! சரி... கடைசியா யாழினியை எப்பப் பார்த்தே?"

நேத்து மத்தியானம் நானும் யாழினியும் அடையாரில் இருக்கிற 'பரஸ்பரம்' விடுதியில் ஒண்ணா லஞ்ச் சாப்பிட்டோம். கொஞ்ச நேரத்துல நான் வேலை விஷயமாய்க் கிளம்பிப் போயிட்டேன். அதுக்கப்புறமாய் யாழினி கிண்டியில் இருக்கிற 'இதம்' என்கிற ட்ரஸ்ட்டுக்குப் போயிருக்கா..."

அட்சய் மூளையின் ஒரு பாகத்தில் அலாரம் அடித்தது. ஆனால் அதிர்ச்சியைக் கொஞ்சமும் காட்டிக் கொள்ளாமல் இயல்பான குரலில் கேட்டான்.

இதம் ட்ரஸ்ட்டுக்கா... அங்கே யாழினிக்கு என்ன வேலை?"

இதம் ட்ரஸ்ட்டிலிருந்து மாதாமாதம் 'பரஸ்பரம்' அமைப்புக்கு ஒரு தொகை வந்துட்டிருந்தது. அந்தத் தொகை ஒரு மூணு மாசமாய் வரலைன்னு 'பரஸ் பரம்' அமைப்பின் நிர்வாகி சொல்லியிருக்காங்க. 'இதம்' ட்ரஸ்ட்டின் சேர்மன் பரசுராமை தனக்குத் தெரியும்ன்னு சொன்ன யாழினி பரசுராமைப் பார்க்கப் போயிருக்கா. நான் நேத்து ராத்திரி ஒரு எட்டு மணி அளவில் ட்ரஷ்ட்டுக்கு விசாரிக்கப் போனேன். பரசுராமையும் பார்த்தேன்."

அவர் என்ன சொன்னார்?"

யாழினி வரவே இல்லைன்னு சொல்லிட்டார்."

அப்புறம்?"

அவர் சொன்னதை நானும் நம்பிட்டேன். ஆனால் அந்த ட்ரஸ்ட்டுக்கு எதிரில் பழக்கடை வெச்சுருந்த ஒரு பெண் யாழினி ஸ்கூட்டியில் உள்ளே போறதைப் பார்த்திருக்கா... மறுபடியும் எனக்கு பரசுராம் மேல் சந்தேகம் வந்து, 'பரஸ்பரம்' அமைப்பு நிர்வாகியான மங்கையர்க்கரசிகிட்டே சொன்னேன். அவங்க உடனே போலீஸ் கமிஷனர்கிட்டே விஷயத்தைக் கொண்டு போயிட்டாங்க. போலீசும் நேத்து ராத்திரி உடனடியா

சர்ச் வாரண்ட்டோடு ட்ரஸ்ட் கட்டடத்துக்குப் போய் பரசுராம் முன்னிலையிலேயே சோதனை போட்டாங்க. பட்... அங்கே யாழினி இல்லை..."

அப்போ அந்த பழக்காரி சொன்னது...?"

அவ வேற எந்தப் பெண்ணையாவது பார்த்து இருக்கலாம்னு போலீஸ் கமிஷனர் சந்தேகப்படறார்..."

அட்சயின் மூளைக்குள் பயப் பறவைகள் பறந்தன. ‘நேற்று ராத்திரி இவ்வளவு விஷயங்கள் ட்ரஸ்ட் கட்டடத்துக்குள்ளே நடந்திருக்கு. பரசுராம் அங்கிள் இதைப்பத்தி ஒரு வார்த்தை கூட நம்ம கிட்டே சொல்லலையே...! ஏதோ ‘ரெய்ட்’ன்னு சொன்னார். அவ்வளவுதான்...!’

அட்சய், நான் உன்கிட்ட இப்போ எதுக்காக வந்திருக்கேன்னு தெரியுமா?"

சொல்லு..."

உன்னாலே எனக்கொரு உதவியாகணும்"

சொல்லு... நான் என்ன பண்ணணும்?"

போலீஸ்கமிஷனர்கிட்டே நான் பேசிப் பார்த்ததுல ஒரு விஷயம் க்ரிஸ்டல் க்ளீயரா புரிஞ்சுது"

என்ன?"

இந்த ட்ரஸ்டோட சேர்மன் பரசுராம் அவ்வளவு நல்ல மனுஷன் கிடையாதாம். ட்ரஸ்ட் கட்டடத்துக்குள்ளே சில சட்ட விரோதமான காரியங்கள் நடந்ததால் அந்த நிர்வாகம் போலீஸ் நடவடிக்கைக்கு உள்ளாகி கோர்ட் உத்தரவுபடி முடக்கி வைக்கப்பட்டிருக்காம்..."

சட்ட விரோதமான காரியங்கள்னா... அது எது மாதிரியானதுன்னு தெரியுமா நகுல்...?"

தெரியாது... கமிஷனர் குறிப்பிட்டு எதையும் சொல்லலை."

சரி! என்கிட்ட நீ இப்ப எதுமாதிரியான உதவியை எதிர்பார்க்கிறே...நகுல்?"

உன்னோட அப்பாவுக்கு தமிழ்நாட்டில் இருக்கிற அதிகாரிகளிலிருந்து டெல்லியில் இருக்கிற உயர் அதிகாரிகள் வரைக்கும் எல்லாரையும் தெரியும். அந்த செல்வாக்கைப் பயன்படுத்தி என்னோட யாழினியைக் கண்டுபிடிக்க உன்னால ஏதாவது நடவடிக்கை எடுக்க முடியுமா...?"

என்ன நகுல் இப்படி கேட்டுட்டே...? உனக்கொரு பிரச்னைனா அது எனக்கு வந்த பிரச்னை மாதிரி. அப்பா இன்னிக்கு டெல்லியிலிருந்து மத்தியானம் வந்துடுவார். நான் அவர்கிட்டே இதைப் பத்திப் பேசறேன்... பை..த..பை... போலீஸ் கமிஷனர் ராமாமிர்தம் ஃபர்தரா பரசுராம் மேல எது மாதிரியான நடவடிக்கையை எடுக்கப் போறதாச் சொன்னார்?"

பரசுராம் விஷயத்துல இனிமே என்னால எந்த மாதிரியான நடவடிக்கையும் எடுக்க முடியாது. ‘ஐயாம் ஹெல்ப்லெஸ்’னு சொல்லிட்டார்."

கவலைப்படாதே நகுல்... நீ காதலிக்கிற யாழினிக்கு எந்த ஆபத்தும் ஏற்பட்டிருக்காது. தைரியமா இரு... போலீஸ் கமிஷனர் வேணுமின்னா இந்த பிரச்னையிலிருந்து ஒதுங்கலாம். ஆனா இதுக்கு மேல சி.பி.சி.ஐ.டி. போலீஸ் இருக்கு... இந்த அதிகாரத்தை வெச்சு ‘மூவ்’ பண்ணலாம். யாழினி உனக்குக் கண்டிப்பாக் கிடைப்பா. டோண்ட் வொர்ரி."

நீ கண்டிப்பா உதவி பண்ணுவேன்னு எனக்குத் தெரியும் அட்சய். அதான் தயக்கம் எதுவும் இல்லாமே உன்கிட்டே வந்தேன்"

யாழினி எப்படியிருப்பான்னு எனக்குத் தெரியாது. உன்கிட்டே ஃபோட்டோ ஏதாவது இருக்கா... நகுல்?"

இருக்கு... தர்றேன்" என்று சொன்னவன் தன்னுடைய மணிபர்ஸை எடுத்து அதில் பத்திரப்படுத்தி வைத்து இருந்த ஃபோட்டோவை எடுத்துக் கொடுத்தான் நகுல். ஃபோட்டோவை வாங்கிப் பார்த்த அட்சய் நகுலைப் பார்த்து ஒரு புன்னகையோடு கண் சிமிட்டினான். நகுல், யூ ஆர் வெரி லக்கி! யாழினி ரொம்ப அழகு...! பொண்ணுங்க இவ்வளவு அழகா இருந்தாலே ஆபத்துதான்...!"

நகுல் எழுந்து அட்சயின் கைகளைப் பிடித்துக் கொண்டான். அட்சய்! நீதான் உன்னோட அப்பா கிட்ட சொல்லி எப்படியாவது யாழினியைக் கண்டுபிடிக்க முயற்சி எடுக்கணும்!"

கவலைப்படாமே போ... எல்லாத்தையும் நான் பார்த்துக்க்கிறேன்."

நகுல் கண்ணீரோடு நகர்ந்து போக, அவனையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த அட்சய், நகுலின் தலை மறைந்ததும் யாழினியின் ஃபோட்டோவை இரண்டாக, நாலாக, எட்டாகக் கிழித்து பக்கத்தில் இருந்த 'வேஸ்ட் பின்'னில் போட்டான்.

அட்சய் குளித்து முடித்து காலை உணவுக்குப் பின் உமையாளின் ஹாஸ்பிடல் போய் சேர்த்த போது, டாக்டர் உமையாள் ஆபரேஷன் தியேட்டரிலிருந்து வெளிப்பட்டு வராந்தாவில் வந்து கொண்டிருந்தாள்.

குட்மார்னிங் ஆன்ட்டி"

குட்மார்னிங்... அட்சய்! என்ன அம்மாவைப் பார்க்க வந்தியா...?"

ம்... அம்மாவுக்கு இப்போ எப்படியிருக்கு ஆன்ட்டி?"

நேற்றைக்கு இப்போ எவ்வளவோ பரவாயில்லை. பி.பி.யும் பல்ஸ் ரேட்டும் நார்மலுக்கு வந்தாச்சு... இன்னிக்கு சாயந்தரத்துக்குள்ளே எப்படியும் கான்ஷியஸ் திரும்பிடும்...! ஆமா... உனக்கு ஏன் கண்ணெல்லாம் சிவந்து போய் ஒரு மாதிரி டல்லடிக்கிறே?"

ராத்திரி சரியா தூங்கலை ஆன்ட்டி... அம்மாவோட உடல்நிலையைப் பத்தின கவலை மனசுக்குள்ளே கனமாய் உட்கார்ந்திட்டிருந்தது."

ஏன் பொய் சொல்றே?"

பொய்யா...?"

பின்னே... உனக்கு அம்மாமேல இருக்கிற கவலையைக் காட்டிலும் அந்த யாழினி மேல் இருக்கிற கோபம்தானே அதிகம்? ராத்திரி முழுக்க முழுக்க அவளை எப்படி பழி வாங்கறது என்கிற நினைப்பிலேயே பொழுது ஓடியிருக்கும். நான் சொல்றது சரிதானே அட்சய்?"

அந்த ராங்கிக்காரியைப் பத்திப் பேசாதீங்க ஆன்ட்டி?"

பார்த்தியா எரிமலையாயிட்டே...!"

பொண்ணா... அவ...!"

யாழினின்னு சொல்லவும் இப்பத்தானே... ஞாபகம் வருது..."

என்ன?"

நேத்து ராத்திரி அந்தப் 'பூச்சரம்' பத்திரிகையின் எடிட்டர் பர்வதவர்த்தினி எனக்குப் ஃபோன் பண்ணியிருந்தா?"

எதுக்கு...?"

காலையில் வெளியே போன அந்த யாழினி ராத்திரி ஒன்பது மணி வரைக்கும் ஆ்ஃபீசுக்கே வரலையாம்."

அட்சய் துணுக்குற்றவனாய் உமையாளை ஏறிட்டான். அதுக்கு நீங்க என்ன சொன்னீங்க ஆன்ட்டி?"

அந்தப் பொண்ணு காலையிலேயே என்கிட்டே இன்டர்வியூவை முடிச்சுகிட்டுப் போயிட்டாளேன்னு சொன்னே."

அவளைப் பத்தி பேசாதீங்க ஆன்ட்டி.... எனக்கு நெருப்பு மேல நிக்கிற மாதிரி இருக்கு... நான் அம்மாவைப் பார்க்கப் போறேன்." சொன்ன அட்சய் ஐ.ஸி.யூனிட்டை நோக்கி வேகமாய் நடக்க ஆரம்பித்தான். நீளமான க்ரானைட் வரந்தாவில் பாதி வழி நடந்திருப்பான். பின் பக்கம் அந்தக் குரல் கேட்டது.

அட்சய்"

திரும்பிப் பார்த்தான்.

பரசுராம் நின்றிருந்தார். வியர்த்த முகம். கலவரம் உறைந்து போன கண்கள்.

அட்சய் அதிர்ச்சியோடு அவரை நெருங்கினான்.

என்ன அங்கிள்... இந்த நேரத்துல...?"

உன்னைப் பார்க்க வீட்டுக்குப் போனேன். நீ அம்மாவைப் பார்க்க ஹாஸ்பிடல் கிளம்பிட்டதா வேலைக்காரன் சொன்னான். உடனே புறப்பட்டு வந்தேன்."

என்ன விஷயம் அங்கிள்... என்னை நீங்க போன்ல கான்டாக்ட் பண்ணியிருக்கலாமே?"

இது போன்ல பேசக் கூடிய விஷயமில்லை."

என்ன... அங்கிள்... ஏதாவது பிரச்னையா?"

பிரச்னைதான்"

என்ன?"

நேத்து ராத்திரி படப்பை பண்ணை வீட்டில் நடந்த எல்லா விபரீதமான விஷயங்களையும் டாக்டர் உத்தண்டராமன் இன்னிக்குக் காலையில் என்கிட்டே சொன்னார்."

நானே உங்களுக்கு ஃபோன் பண்ணி சொல்லலாம்னு இருந்தேன் அங்கிள். நம்ம நாய் ரோஜர் பாம்புக்கடியில் செத்துப் போச்சு.."

பரசுராம் பதற்றம் தணியாமல் குரலைத் தாழ்த்தினார். பிரச்னை இப்போ இது இல்லை அட்சய்."

பின்னே...?"

படப்பை பண்ணை வீட்டில் அந்தப் பொண்ணு யாழினி உட்பட மூணு பொண்ணுகளை அடைச்சு வெச்சுருந்தோமே?"

ஆமா..."

அந்த மூணு பொண்ணுகளையும் காணோம்."

அட்சய் அதிர்ந்தான்.

என்ன சொல்றீங்க அங்கிள்... அந்த வாட்ச்மேன் ஈஸ்வர் என்ன பண்ணிட்டிருந்தான்?"

அவனையும் காணோம்."

என்ன அங்கிள் சொல்றீங்க... யாழினி உட்பட அந்த மூணு பெண்ணுகளையும் காணோமா...?" அட்சய் கேட்க, இருண்டு போன முகத்தோடு தலையாட்டினார் பரசுராம்.

வாட்ச்மேன் ஈஸ்வரையும் காணோம்ன்னு சொல்றீங்க... அவன் தான் அந்த மூணு பேரையும் கடத்திக் கொண்டு போயிருக்கணும். நேத்திக்கு ராத்திரியே அவனோட ஆக்டிவிட்டிஸ் சரியில்லை.... நாம இத்தனை நாளும் ஒரு தப்பான நபரை நம்பி வாட்ச்மேன் வேலையைக் கொடுத்து இருக்கோம்."

பரசுராம் சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு குரலைத் தாழ்த்திக் கொண்டார். இப்போ என்ன பண்றது அட்சy...? அந்த ஈஸ்வர் என்ன நோக்கத்துக்காக மூணு பொண்ணுகளையும் கடத்திட்டுப் போயிருக்கான்னு தெரியலையே..?"

வேற எதுக்கு... பணம் பறிக்கத்தான்...! நாம எப்படியும் போலீசுக்குப் போகமாட்டோம்னு தெரியும். டாக்டர் உத்தண்டராமன் அங்கிளுக்கு போன் பண்ணிச் சொல்லீட்டங்களா?"

இன்னும் இல்லை... அவருக்கு ஃபோன் பண்ணினேன். ஹாஸ்பிடல்ல இருந்த ட்யூட்டி டாக்டர் ஒருத்தர்தான் ஃபோனை அட்டெண்ட் பண்ணினார். உத்தண்டராமன் ஆபரேஷன் தியேட்டரில் இருக்கிறதாகவும் மூணு மணி நேரம் கழிச்சு ஃபோன் பண்ணும்படியாகவும் சொன்னார் பரசுராம் சொல்லிக் கொண்டிருக்கும் போதே அவருடைய செல்ஃபோன் ரிங்டோனை வெளியிட்டது.

எடுத்து அழைப்பது யார் என்று பார்த்தார்.

செல்ஃபோனில் டிஸ்ப்ளேயில் உத்தண்டராமனின் பெயர் மின்னி மின்னி மறைந்தது. பரசுராம் பதற்றமாய்க் குரல் கொடுத்தார்.

டாக்டர்! நானே உங்களை காண்டாக்ட் பண்ணலாம்னு இருந்தேன்... நீங்களே லைன்ல வந்துட்டீங்க.."

ட்யூட்டி டாக்டர் இப்பதான் நீங்க ஃபோன் பண்ணினதாச் சொன்னார். என் விஷயம் பரசுராம்?"

குரலைத் தாழ்த்தினார்.

பக்கத்துல யாரும் இல்லையே?"

இல்லை... ஏன்... என்ன விஷயம்... ஏதாவது பிரச்னையா?"

பிரச்னையா இருந்தா பரவாயில்லை டாக்டர். இது நாம எதிர்பார்க்காத ஒரு விபரீதம். அந்த ஈஸ்வர் படப்பை பண்ணை வீட்டில் இருந்து மூணு பொண்ணுகளையும் கடத்திட்டான்."

என்ன சொல்றீங்க பரசுராம்...?"

உண்மையைச் சொல்லிட்டிருக்கேன்... இன்னிக்கு காலையில் படப்பைப் பண்ணை வீட்டுக்குப் போயிருந் தேன். அங்கே யாரும் இல்லை. பங்களா 'ஹோ'ன்னு திறந்து கிடக்கு..."

டாக்டர் உத்தண்டராமன் மறுமுனையில் கனத்த மௌனத்தோடு இருந்தார். பரசுராம் கேட்டார்.

என்ன டாக்டர்...! பேச்சையே காணோம்"

எனக்கென்னவோ இது ஈஸ்வர் பண்ணின காரியம் மாதிரி தெரியலை"

பின்னே?"

யாழினியோட வேலை..."

டாக்டர்! நீங்க என்ன சொல்றீங்க...? யாழினிக்கு போட்டிருக்கிற மயக்க ஊசி சாதாரண ஊசி கிடையாது. நியூரோ-டி.ஆக்டிவ் ஊசி. அந்த ஊசியைப் போட்டா 48 மணி நேரத்துக்கு சுய உணர்வு இருக்காதுன்னு சொன்னது நீங்கதான்... அப்படியே சுயஉணர்வு வந்தாலும் எழுந்து நிற்கவோ நடக்கவோ முழுசா ஒரு நாளாகும்னு சொன்னதும் நீங்கதான்!"

மே... பி...! அப்படிப்பட்ட நிலைமை எல்லோருக்கும் வரும்னு சொல்ல முடியாது. யாழினி மாதிரியான மனஉறுதி படைத்த பெண்கள் இது மாதிரியான மயக்க விஷயங்களை ஜீரணம் பண்ணிக்கிட்டு விஸ்வரூபம் எடுக்கவும் சாத்தியம் இருக்கு...!"

பரசுராம் எரிச்சலானார். உங்களை பேசவிட்டா அவளுக்கு பாராட்டு விழாவே நடத்திடுவீங்க போலிருக்கே...?"

இதோ பாருங்க மிஸ்டர் பரசுராம்... இந்தக் காலத்துல நாம யாரையும் அண்டர் எஸ்டிமேட் பண்ண முடியாது. ஒரு பிரச்னையை எல்லா கோணத்தில் இருந்தும் யோசிச்சுப் பார்க்கணும்". பொதுவா பத்திரிகைக்காரங்களுக்கு பதுங்கிப் பாயற குணம் உண்டு..."

நிலைமை சீரியஸாகி நாம மாட்டிக்கிறதுக்கு முன்னாடி ஏதாவது பண்ணியாகணும்... டாக்டர்..."

ஏன் பயப்படறீங்க பரசுராம்..? அட்சயோட அப்பா நம்ம ப்ராஜக்ட்ல இருக்கும்போது நாம யார்க்கும் எதுக்கும் பயப்பட வேண்டியது இல்லை. அவர்தான் இன்னிக்கு மத்தியான ஃப்ளைட்ல டெல்லியிலிருந்து வந்துடப் போறாரே?"

அந்த நம்பிக்கை மனசுக்குள்ளே இருக்கப் போய்த்தான் கொஞ்சம் தைரியமா நடமாட முடியுது!" பரசுராம் செல்ஃபோனில் சொல்லிக் கொண்டு இருக்கும் போதே அட்சய் அவருடைய தோளைத் தொட்டான்.

அங்கிள்!"

என்ன?"

டாக்டர் உமையாள் வர்றாங்க...! செல்ஃபோன் பேச்சை கட் பண்ணுங்க...!"

பரசுராம் செல்ஃபோனை அணைத்தார். டாக்டர் உமையாள் வெண்ணிறக் கோட்டில் கைகளை நுழைந்தபடி அவர்களை நெருங்கினாள்.

என்ன அட்சய்... ரொம்ப நேரமா ரெண்டு பேரும் வராந்தாவில் நின்னுகிட்டு எதைப் பத்தியோ டிஸ்கஸ் பண்ணிட்டு இருக்கீங்க... என்ன பிரச்னை?"

அய்யோ ஆன்ட்டி... நீங்க விடமாட்டீங்களே? பரசுராம் அங்கிளுக்கு ஒரு ஃபைனான்ஸ் பிரச்னை. ஒரு பெரிய தொகையை என்கிட்டே கடனாய்க் கேட்டார். நான் அப்பாவைக் கேட்டுச் சொல்றதா அவரை 'கன்வின்ஸ்' பண்ணிட்டிருக்கேன்."

சரி... சரி... மொதல்ல போய் அம்மாவைப் பாரு...!"

கண்டிப்பா...!" தலையாட்டிய அட்சயைக் கடந்து செல்ல முயன்ற டாக்டர் உமையாள் சட்டென்று நின்றாள்.

அட்சய்...!"

ஆன்ட்டி...!"

அந்த ப்ரஸ் ரிப்போர்ட்டர் பொண்ணு யாழினியோட மேட்டர் ஒரு பெரிய விவகாரமாய் மாறும் போலிருக்கு!"

என்ன சொல்றீங்க ஆன்ட்டி...?"

அஞ்சு நிமிஷத்துக்கு முந்தி என்னோட ரூம்ல இருந்தப்ப டீ.வி.யில் நியூஸ் பார்த்தேன். பெண் நிருபர் மாயம். பத்திரிகையுலகம் கொதிப்புன்னு நியூஸ் போயிட்டிருந்தது."

பரசுராமும் அட்சயும் விநாடிக்கும் குறைவான நேரத்தில் ஒரு திகிலானப் பார்வையைப் பங்கு போட்டுக் கொண்டார்கள்.

நியூஸ்ல வேற என்ன சொன்னாங்க ஆன்ட்டி...?"

அநியாயத்தை எதிர்த்துத் துணிச்சலாய்ப் போராடும் குணமுன்னவளாம் அந்த யாழினி. ஊழல் அரசியல் வாதிகளைத் தோலுரித்துக் காட்டுபவளாம். நேத்து மத்தியானம் ரெண்டு மணியளவில் ஒரு ஊழல் அரசியல் வாதியை வேவு பார்க்கிறதுக்காக தன்னுடைய ஸ்கூட்டியில் பின் தொடர்ந்து போயிருக்கா... இந்தத் தகவலை எஸ்.எம்.எஸ். மூலமாய் பரஸ்பரம் அமைப்பைச் சேர்ந்த நிர்வாகிக்கு யாழினி தெரியப்படுத்தியிருக்கா. அதுக்கப்புறம் யாழினிகிட்டேயிருந்து ஒரு தகவலும் இல்லையாம். யாழினி ஃபாலோ பண்ணிட்டுப் போன அந்த அரசியல்வாதி யார்ங்கிறது தான் இப்போ மில்லியன் டாலர் கேள்வி. பி.டி.ஐ. நிருபர்கள் ஒட்டு மொத்த பேரும் கோட்டைக்கு முன்னாடி உண்ணாவிரதம் இருக்கப் போறாங்களாம்..."

அட்சய் தன்னுடைய உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொண்டு வரவழைத்துக் கொண்ட ஒரு செயற்கைப் புன்னகையோடு சொன்னான்.

அகத்தையும் அகங்காரமும் கொண்ட பெண்களுக்கு இப்படிப்பட்ட முடிவுகள்தான் கிடைக்கும். என்னை எப்படி வெறுப்பேத்தினா...?"

நோ அட்சய்...! யாழினி உன்கிட்ட நடந்துகிட்ட முறையில் எந்தத் தப்பும் இல்லை. நீ அவளை கல்யாணம் பண்ணிக்க ஆசைப்பட்டே; அவ வேண்டாம்னு சொன்னா. அவ்வளவுதானே?"

என்ன ஆன்ட்டி... கட்சி மாறிட்டீங்க...?"

நான் கட்சி மாறலை அட்சய்... நேத்து அவ பேசின விதம் சரியில்லை. ஆனா உபயோகப்படுத்தின வார்த்தைகள் சரி. நீயும் கொஞ்சம் நிதானமாய் யோசனை பண்ணிப்பாரு..."

டாக்டர் உமையாள் சொல்லிக் கொண்டே நகர்ந்து போய்விட அட்சய் பரசுராமை கண்கள் சிவக்க ஏறிட்டான். குரலைத் தாழ்த்தினான்.

அங்கிள்! நிலைமை நாம் எதிர்பார்ப்பதைவிட ரொம்பவும் மோசமாய்ப் போயிட்டிருக்கு... நாம உடனடியா தடாலடியா ஏதாவது பண்ணி காணாமல் போன யாழினையையும் அந்த ரெண்டு பெண்களையும் கண்டுபிடிக்கணும்."

என்ன பண்ணலாம்னு நீயே சொல்லு!" பரசுராம் சொல்லிக் கொண்டிருக்கும் போதே அட்சயின் செல்ஃபோனிலிருந்து ‘அலர்ட்டோன்’ கேட்டது.

எடுத்துப் பார்த்தான்.

வாட்ஸ் அப்’ வந்து இருப்பதற்கு அடையாளமாய் செல்ஃபோன் திரையில் ‘இமேஜ் ரிசிவ்ட்’ என்ற வார்த்தை பளிச்சிட்டது. அட்சய் குழப்பத்தோடு ‘வ்யூ’ ஆபரஷனுக்குப் போய் ‘க்ளிக்’ செய்தான். ஃபோட்டோ ஒன்று உற்பத்தியாயிற்று.

அட்சயும் பரசுராமும் அந்தப் ஃபோட்டோவைப் பார்த்து பெரிதாக அதிர்ந்து போய் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

அது யாழினியின் ஃபோட்டோ.

யாழினி ஒரு நாற்காலியில் சோர்வாய் உட்கார்ந்தபடி கையில் டம்ளர் ஒன்றை வைத்து இருக்கும் ஃபோட்டோ.

அட்சய் பதற்றப்பட்டான்.

அங்கிள்! யாரோ யாழினியோட போட்டோவை 'வாட்ஸ் அப்' பில் அனுப்பியிருக்காங்க... கீழே வாய்ஸ் ரிக்கார்ட்டிங்கில் ஏதோ மெஸேஜும் இருக்கு..."

அதை 'ஆன்' பண்ணு!"

அட்ச வாய்ஸ் ரிக்கார்ட்டிங்கை 'ப்ளே' செய்தான். ஒரு ஆண் குரல் தகரத்தில் ஆணியை வைத்து இழுத்த தினுசில் கரகரப்பாய் ஒலித்தது-

முதலில் தலைப்புச் செய்திகள். படப்பை பண்ணைப் பங்களாவில் அடைத்து வைக்கப்பட்டு இருந்த யாழினி உட்பட இரண்டு பெண்கள் மாயம். வாட்ச்மேன் ஈஸ்வரையும் காணவில்லை. செய்தி அறிந்து பரசுராம், அட்சய், டாக்டர் உத்தண்டராமன் மூன்று பேரும் கலக்கம்.

இனி விரிவான செய்திகள். இன்று காலை படப்பை பண்ணை பங்களாவுக்கு வழக்கம் போல் சென்ற பரசுராம் அங்கே அடைத்து வைத்திருந்த யாழினி மற்றும் இரண்டு பெண்களைக் காணாமல் திகைத்தார். வாட்ச்மேன் ஈஸ்வரிடம் அதைப் பற்றி விசாரிக்கலாம் என்றால் அவனையும் காணோம். கதி கலங்கிப் போன பரசுராம் அட்சய், டாக்டர் உத்தண்டராமன் ஆகியோரிடம் விஷயத்தைச் சொல்ல அவர்களும் கதிகலங்கி வழி பிதுங்கிப் போயுள்ளனர். மேற்கொண்டு என்ன செய்வது என்று தெரியாமல் வேர்த்து விறுவிறுத்துப் போயிருக்கிறார்கள். இன்று மத்தியானம் டெல்லியிலிருந்து சென்னை வரப் போகிற கோதண்டத்துக்காகக் காத்திருக்கிறார்கள்.

குரல் நின்று போய்விட பரசுராம் நடுக்கத்தோடு அட்சயின் கையைப் பற்றினார்.

அ...ட்...சய்......!"

அங்கிள்...! யாரோ ஒரு முகம் தெரியாத எதிரி நம்ம கூட விளையாட ஆரம்பிச்சுட்டான். அவன் எந்த நெம்பரிலிருந்து பேசறான்னு பார்ப்போம்..." சொன்ன அட்சய் பதற்றமாய் பட்டன்களைத் தட்டி 'காண்டாக்ட்' ஆப்ஷனில் அந்த எண்ணைக் கண்டுபிடித்து 'கால் சென்டர்' வார்த்தை வந்ததும் 'க்ளிக்' செய்தான். மறுமுனையில் ரிங் போய் ரிஸீவர் எடுக்கப்பட்டது.

அட்சய் மெல்ல குரல் கொடுத்தான்.

ஹலோ...!"

எதிர்முனையில் ஒரு ஆண் குரல் சிரித்தது.

என்ன அட்சய்...! 'வாட்ஸ் ஆஃப்'பில் போட்டோவைப் பார்த்தியா...?"

குரலை உன்னிப்பாய்க் கேட்டு அடையாளம் காண முயற்சித்தான் அட்சய், முடியவில்லை. இதுவரையிலும் கேட்காத புதுக் குரல்.

நான் யாரா இருக்குமென்று யோசனை பண்றியா...? நீ மூணு ஷிஃப்ட் வேலை பார்த்து 24 மணி நேரம் யோசனை பண்ணினாலும் நான் யார்ங்கிறதை உன்னாலேயும் சரி உன்னோட பார்ட்னர்களாலேயும் சரி கண்டுபிடிக்க முடியாது. நீ ஹை-சொபிஸ்ட்கேட்டட் கிரிமினல்ன்னா நான் கொஞ்சம் லோக்கல் போலீசுக்கு பிடிக்காதவன்!"

சரி... எதுக்காக நாலு பேரையும் கடத்தியிருக்கே?"

தொழில் பண்ணாமே மூணு வேளையும் சோறு சாப்பிடறது எப்படி?"

தொழிலா?"

ம்... கடத்தறதும் ஒரு தொழில் தானே? நீங்க பெரிய அளவில் பண்ணிட்டு இருக்கீங்க... நான் சின்ன லெவல் பண்ணிட்டிருக்கேன்."

இப்ப உனக்கு என்ன வேணும்?"

ஒரு நல்ல விலை..."

எவ்வளவு பணம் வேணும் சொல்லு...?"

போன்ல பேரம்வேணாம்... நேர்ல வரணும்"

எங்கே வரணும் சொல்லு"

நங்கநல்லூர்ல தில்லை கங்கா நகர் தெரியுமா?"

தெரியும்!"

அங்கே ஒரு பழைய சர்ச் இருக்கு... அங்கே வரணும். சரியா ராத்திரி 11 மணிக்கு பேச்சு வார்த்தை ஆரம்பம். 11.05க்குள்ளே பேச்சு வார்த்தை முடிஞ்சுடணும்... அதுக்கு மேல ஒரு விநாடி அதிகமானாலும் என்கிட்டே இருக்கிற நாலு பேரும் போலீஸ் ஸ்டேஷனில் உட்கார்ந்து வாக்கு மூலம் குடுத்துட்டு இருப்பாங்க...!"

தண்டுவடத்தில் உறைந்தான் அட்சய்...

அட்சயின் கண்களில் இப்போது உச்சபட்ச பயம் ஆட்கொண்டிருந்தது. செல்ஃபோனை அணைத்து இடது உள்ளங்கையில் அடக்கிக் கொண்டு பரசுராமைப் பார்த்தான்.

அங்கிள்! மிரட்டற நபர் யாருனு தெரியலையே?"

அவன்தான் இன்னிக்கு ராத்திரி பதினோரு மணிக்கு தில்லை கங்கா நகர்ல இருக்கிற ஒரு பழைய சர்ச்சுக்கு வரச் சொல்லியிருக்கானே...?"

நிச்சயமாய் அவன் வருவான்னு நீங்க நினைக்கறீங்களா அங்கிள்?"

கண்டிப்பா வருவான்... யாழினியையும் அந்த ரெண்டு பெண்களையும் வாட்ச்மேன் ஈஸ்வரையும் கடத்திட்டு போனவனோட நோக்கம் ப்ளாக் மெயில் பண்ணி பணம் பறிக்கிறதுதான்..."

அங்கிள்! இது ஏன் ஈஸ்வரோட வேலையா இருக்கக்கூடாது...?"

'வாட்ஸ் அப்'பில் ரிக்கார்ட் ஆயிருந்த குரல் ஈஸ்வரோட குரல் மாதிரி இல்லையே...?"

அவனும் வேற ஒருத்தரும் பார்ட்னர்ஷிப் போட்டு கிட்டு இந்தக் கடத்தலை அரங்கேற்றி இருக்கலாமே...?" என்று சொன்ன அட்சய் பெருமூச்சு விட்டான்.

இப்ப என்னதான் பண்றது அங்கிள்?"

இதுல யோசிக்க ஒண்ணுமேயில்லை அட்சய். பிரச்னைன்னு வந்த பின்னாடி அதை நாம ஃபேஸ் பண்ணித்தான் ஆகணும். இது மாதிரியான பிரச்னைகளை, நான் வாழ்க்கையில் பார்த்து ஃபேஸ் பண்ணி ஜெயிச்சவன். உன்னோட அப்பா கோதண்டம் இன்னிக்கு மத்தியானம் டெல்லியிலிருந்து சென்னை வந்துடப்போறார். இது மாதிரியான சமயங்களில் எப்படி செயல்படணும்னு உன்னோட அப்பாவுக்கும் நல்லாவே தெரியும்."

எனக்கும் அப்பா இருக்கிற தைரியம்தான்...!" சொன்ன அட்சய் நெற்றியைப் பிடித்துக் கொண்டு அங்கே சுவரோரமாய்ப் போடப்பட்டு இருந்த ஆரஞ்சு நிற நாற்காலியில் தளர்வாய் உட்கார்ந்தான்.

போலீஸ் கமிஷனர் அலுவலகத்துக்கு முன்பாய் ஆண்களும் பெண்களுமாய் சுமார் நூற்றைம்பது பத்திரிகையாளர்கள் அமிலம் போன்று தகிக்கும் வெயிலையும் பொருட்படுத்தாமல் திரளாக கூடி நின்று கோஷங்களை எழுப்பிக் கொண்டிருந்தார்கள். கைகளில் உயர்த்திப் பிடித்த அட்டைகள். அதில் ஸ்கெட்ச் பேனாவால் எழுதப்பட்ட வாசகங்கள்.

'காவல்துறையே பத்திரிகையைத் துறையைக் காப்பாற்று...!'

'காணாமல் போன யாழினியை எங்கள் கண் முன்னால் கொண்டு வந்து நிறுத்து!'

'ஊழல் அரசியல்வாதிகளை அடக்கி வை!

இல்லாவிட்டால் எங்களின் எழுதுகோல்கள் துப்பாக்கிகளாய் மாறும்.'

பத்திரிகையாளர்களோடு சேர்ந்து நகுலும் கழுத்து நரம்புகள் புடைக்க கோஷம் போட்டுக் கொண்டிருந்தான்.

போலீஸ் இன்ஸ்பெக்டர் ஒருவர் பத்திரிகையாளர்களுக்கு முன்பாய் வந்து நின்றார்.

தயவு செய்து கோஷங்கள் போடாமே அப்படியே உட்காருங்க... யாராவது அஞ்சு பேர் மட்டும் உள்ளே வந்து கமிஷனரைப் பாருங்க. பெண் நிருபர் யாழினி காணாமல் போன விஷயத்தில் உங்களைக் காட்டிலும் எங்களுக்குத்தான் பொறுப்பும் அக்கறையும் அதிகம். யாழினியைக் கண்டுபிடிக்கிற விஷயத்தில் இது மாதிரியான போராட்ட உணர்வைக் காட்டிலும் உங்களுடைய ஒத்துழைப்புத்தான் காவல்துறைக்குத் தேவை."

கும்பல் அமைதியாயிற்று.

நன்றி! உங்கள்ல யார் அஞ்சு பேர் கமிஷனரைப் பார்க்க உள்ளே வர்றீங்க...?"

கும்பலின் முதல் வரிசையில் இருந்த நான்கு பேரும் நகுலும் கமிஷனர் ராமாமிர்தத்தைப் பார்க்க உள்ளே போனார்கள். ஏ.சி. கசிந்து கொண்டிருந்த அறைக்குள் நுழைந்தார்கள்.

ராமாமிர்தம் கவலை தோய்ந்த முகத்தோடு காணப்பட்டார். எல்லோரையும் உட்காரச் சொல்லி விட்டு நிதானமான குரலில் பேச ஆரம்பித்தார்.

காணாமல் போன யாழினியைக் கண்டு பிடிப்பதில் உங்களிடம் இருக்கும் அதே வேகமும் ஆர்வமும் என்னிடத்திலேயும் இருக்கிறது. நேற்று இரவு கூட நகுல் கொடுத்த ஒரு தகவலின் பேரில் இதம் டிரஸ்ட்டுக்கு சொந்தமான ஒரு கட்டடத்துக்கு போய் சோதனை செய்தோம். எந்தப் பயனும் இல்லை."

பத்திரிகையாளர்களில் ஒருவர் சொன்னார். ஸார்! நிச்சயமா இது ஒரு ஊழல் அரசியல்வாதியின் வேலைதான். யாழினி இந்த தமிழ்நாட்டில் இருக்கிற ஊழல் அரசியல்வாதிகளை உளவுப் பார்த்து சுடச்சுட கட்டுரைகளை எழுதி 'சமுதாயத்தின் சாபக்கேடுகள்' என்கிற தலைப்பில் ஃபேஸ்புக்கில் வாராவாரம்

ஸ்டேட்டஸ் போட்டுட்டு வந்தாங்க. நான் கூட ஒரு நாள் யாழினியைப் பார்த்து ‘பேனாவில ‘இங்க்’குக்குப் பதிலா அமிலத்தை ஊத்தி எழுதாதே யாழினி. உன்னோட கோபம் நியாயமானதுதான். ஆனா அதை வெளிப்படுத்தற விதத்துல கொஞ்சம் நிதானம் வேணும்னு சொன்னேன். அதுக்கு யாழினி பெருச்சாளிகளை பார்த்து புலிகள் பயப்படக் கூடாதுன்னு சொன்னா..."

நகுல் குறுக்கிட்டான். நானும் கூட இந்த விஷயத்தில் யாழினியை எத்தனையோ தடவை வார்ன் பண்ணியிருக்கேன் ஸார். ஆனா அவ கேட்க மாட்டா... ‘நான் ஒரு ‘ஒன் வுமன் ஆர்மி!’ என் உடம்புல உயிர் இருக்கிற வரைக்கும் அநியாயங்களுக்கும் அக்கிரமங்களுக்கும் எதிரான என்னுடைய போராட்டம் தொடரும்’னு சொல்லுவா. அப்படி யாழினி சொல்லும்போதெல்லாம் எனக்கு ஒரு பக்கம் பயமாகவும் பெருமையாகவும் இருக்கும். இன்னிக்கு தமிழ்நாட்டுல ஊழல் பண்ணாத அரசியல்வாதி கிடையாது. எந்த ஊழல் அரசியல் வாதியால் யாழினிக்கு ஆபத்து ஏற்பட்டு இருக்கும்னு எப்படிக் கண்டுபிடிக்கப்போறோம்?"

கமிஷனர் ராமாமிர்தம் தன்னிடம் இருந்த ஒரு ஃபைலைப் பிரித்தார். என்னோட சந்தேகம் நாலு அரசியல் புள்ளிகள் மேல இருக்கு. ஒருத்தர் முன்னாள் அமைச்சர். பேரு பஞ்சவர்ணம், ரெண்டாவது நபர் ஓய்வு பெற்ற ஒரு நீதிபதி ஜம்புலிங்கம். இவர் அரசியல் குற்றவாளிகளுக்கு சாதகமாய் தீர்ப்புகள் சொல்லியே கோடிக்கணக்கில் சொத்து சேர்த்தவர். மூன்றாவது நபர் ஆசீர்வாதம் பிள்ளை. இவர் பெண்களுக்கு எதிரான பாலியல் குற்றங்களை நியாயப்படுத்தி பேசியவர் என்பதால் யாழினி பூச்சரம் பத்திரிகையில் இரண்டுவாரங்களுக்கு முன்பு ‘நவீன நரகாசுரர்கள்’ என்கிற தலைப்பில் கடினமான வார்த்தைகளைப் போட்டு கட்டுரை ஒன்றை எழுதியிருக்கிறார். லிஸ்டில் இருக்கிற நான் காவது நபர் திட்டக் கமிஷனர் தலைவர் தண்டாயுதம். ஊழல் செய்வதில் இவர்தான் ‘சூப்பர் ஸ்டார்’ என்று பாராட்டுப்பத்திரம் ஒன்றை தயாரித்து தண்டாயுதத்துக்கு தபாலில் அனுப்பி வைத்து இருக்கிறார் யாழினி. இந்த நான்கு பேர்களில் யாராவது ஒருத்தர் தான் யாழினி காணாமல் போனதுக்கு முக்கியமான ஒரு நபராய் இருக்கணும். இந்த நான்கு பேரையும் கண்காணிக்கிறதுக்காக ஒரு ‘ஷேடோ ஸ்க்வாட்’ ஃபார்ம் பண்ணியிருக்கேன். எப்படியும் யாழினியை ரெண்டு நாட்களுக்குள்ளே மீட்டுவிட முடியும் என்கிற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. ஸோ... இந்த போராட்டம் எல்லாம் வேண்டாம். இந்த ஆஃபீசுக்கு முன்னாடி தொண்டை கத்தி கோஷம் போடறதால ஒரு பிரயோஜனமும் இல்லை..."

யாழினியை ரெண்டு நாள்ல கண்டுபிடிச்சுடுவீங்களா ஸார்?"

ஷ்யூர்."

ஒரு வேளை கண்டுபிடிக்க முடியலைன்னா...?"

இந்த மாதிரியான ‘நெகட்டீவ் அப்ரோச்’ கேள்விக்கெல்லாம் என்னால பதில் சொல்ல முடியாது. ஒரு குற்றவாளியைக் கண்டுபிடிக்க முடியும் என்கிற நம்பிக்கையில்தான் போலீஸ் டிபார்ட்மென்ட் விசாரணையில் இறங்குது!"

நகுல் கண்களில் நீர்மின்ன கமிஷனரை ஏறிட்டான். ஸார்! நான் நாலு நாள் வரைக்கும் பார்ப்பேன். அதுக்குள்ளே என்னோட யாழினி என் கண் முன்னாடி இருக்கணும். இல்லேன்னா உங்க ஆஃபீசுக்கு முன்னாடி நான் சாகும் வரை உண்ணாவிரதம் இருக்க வேண்டிவரும்!" நிதானமான குரலில் அழுத்தமாய் சொல்லி விட்டு அந்த அறையை விட்டு வெளியோறினான் நகுல்.

மத்தியானம் மூன்று மணி!

டெல்லியிலிருந்து சென்னை திரும்பியிருந்த அட்சயின் அப்பா கோதண்டம் கோபத்தில் ஒரு தீப்பிழம்பாய் மாறி, தனக்கு எதிரே உட்கார்ந்திருந்த அட்சய், பரசுராம், டாக்டர் உத்தரண்டராமன் மூன்று பேரையும் எரித்து விடுவதைப் போல் பார்த்தார்.

டாலர் மழை கொட்ட வேண்டிய நேரத்துல இப்படியொரு தேவையில்லாத பிரச்னையை உருவாக்கியிருக்கீங்க... டீ.வி.யில் எந்த சேனலைத் திருப்பினாலும் யாழினி மேட்டர் போயிட்டிருக்கு... நாம யார் மேல வேண்டுமானாலும் கை வைக்கலாம். ஆனா பத்திரிகைக் காரங்ககிட்ட மட்டும் எந்த ஒரு வம்பு தும்பையும் வெச்சுக்கக்கூடாது."

பரசுராம் தலையைக் குனிந்து கொண்டே சொன்னார்.

ஸாரி... கோதண்டம்...! அந்த யாழினிப் பொண்ணு நம்ம டிரஸ்ட்டுக்கு வந்து இருந்த போது டிஸ்போசலுக்காக ஹரிதாவோட டெட்பாடியைக் கொண்டுட்டு போன நேரத்துல எப்படியோ பார்த்துட்டா!"

நீ அவ்வளவு அஜாக்கிரதையா இருந்திருக்கே...! எந்த ஒரு பிரச்னை வந்தாலும் அதை சால்வ் பண்றதுக்காக நான் ஒருத்தன் இருக்கேனே என்கிற அலட்சயம் உனக்கு...!"

அட்சய் இடைமறித்தான்.

அப்பா! நடந்து முடிஞ்ச விஷயங்களைப் பற்றிப் பேசி இனிமேல் ஒரு பிரயோஜனமும் இல்லை. நம்முடைய நிழல் விவகாரங்கள் எவன் ஒருவனுக்கோ தெரியப் போய் நாம இப்போ அவன் வலையில மாட்டிகிட்டு இருக்கோம். அவனை எப்படி சமாளிக்கிறதுங்கிறதுதான் தலையாயக் கவலை... இன்னிக்கு ராத்திரி பதினோரு மணிக்கு நங்கநல்லூர் பக்கத்துல இருக்கிறதில்லை கங்கா நகர்ல இருக்கிற ஒரு பழைய சர்ச்சுக்கு வரச் சொல்லியிருக்கான்.போறதா... வேண்டாமா?"

போய்த்தான் ஆகணும்... அந்த எவனோ போலீசுக்குப் போகப் பிரியப்படலை. அவனுக்குப் பணம்தான் முக்கியம். அவன் கேட்ட பணத்தைக் குடுத்துட்டு பிரச்னையை காதும் காதும் வெச்ச மாதிரி முடிச்சுக்க வேண்டியதுதான்!"

டாக்டர் உத்தண்டராமன் தயக்கமாய் குறுக்கிட்டார்.

அவன் ஒரு பெரிய அமௌண்ட்டை எதிர்பார்த்தா...?"

குடுத்துட வேண்டியதுதான்... பேரம் பேச முடியாது. ஏன்னா அவன் நமக்கு குடுத்து இருக்கிற அதிகப்படியான நேரமே அஞ்சு நிமிஷம்தான்."

நாம பயணம் கொடுத்தாலும் அவன் சொன்ன படி நடந்துக்குவானா?"

அட்சய்! அவனோட செல்ஃபோன் நம்பர்தான் உன்கிட்டே இருக்கே. அவனுக்கு ஃபோன் பண்ணிப்பாரு...!"

அவன் சிம்கார்டு மாத்திட்டான். பழைய நெம்பரை டிரேஸ் பண்ணிப் பார்த்தேன். 'அன் நோன்' என்கிற வாய்ஸ் வந்தது.

நெற்றியைப் பிடித்துக் கொண்டார் கோதண்டம். விவரமான ஆளா இருப்பான் போலிருக்கு... இன்னிக்கு ராத்திரி அவனை மீட் பண்ணிட வேண்டியது தான்."

அந்தப் பழைய சர்ச்சுக்கு யார் யார் போகப் போறோம்?"

நாலு பேருமே!" என்று சொன்ன கோதண்டம் அட்சயை ஏறிட்டார். தில்லை கங்கா நகர்ல அந்தப் பழைய சர்ச் எங்கே இருக்குன்னு போய்ப் பார்த்தியா?"

பார்த்தேன்ப்பா! வீடுகளே இல்லாத ஒதுக்குப்புற ஏரியா அது. கருவேல மரங்கள் மண்டிக் கிடக்க அதுக்கு நடுவே பாழடைஞ்சு சிதிலமாகிப் போயிருந்தது அந்த சர்ச். அந்தப் பகல் நேரத்துல பார்க்கும் போதே அடி வயித்துல ஒரு பயம் உற்பத்தியாவதை என்னால தவிர்க்க முடியலை. அந்த சர்ச் கட்டி நூறு வருஷத்துக்கு மேலே இருக்கும்ன்னு அங்கேயிருந்த பெரியவர் ஒருத்தர் சொன்னார். கொஞ்ச நேரம் அவர்கிட்டே பேசிட்டிருந்த போது அவர் இன்னொரு விஷயத்தையும் சொன்னார். அதைக் கேட்டதிலிருந்து என்னோட மனசுக்குள்ளே ஒரே திக் திக்..."

பயம் உறைந்துபோன முகங்களோடு மூன்று பேரும் அட்சயைப் பார்க்க அவன் தொடர்ந்தான்.

அந்த சர்ச்சை அங்கேயிருக்கிற ஜனங்க 'டெவில் சர்ச்'னு சொல்றாங்க."

டெவில் சர்ச்சா?"

ஆமா... நூறு வருஷத்துக்கு முன்னாடி கட்டப் பட்ட அந்த சர்ச்சில் ஃபாதரா இருந்த நபர்கள் எல்லோருமே ஏதோ ஒரு காரணத்துக்காக தற்கொலை பண்ணிகிட்டு செத்துப் போயிருக்காங்க. நான்கைந்து மரணங்கள் அது மாதிரி நடக்கவும் திருச்சபை நிர்வாகம் சர்ச்சை க்ளோஸ் பண்ணிட்டாங்க. சர்ச்சோட கன்வீனர் தேவசகாயம் அமெரிக்காவில் போய் 'செட்டில்' ஆயிட்டதால சர்ச் பராமரிப்பு இல்லாமே கருவேலு மரங்களுக்கு நடுவில் எட்டிப் பார்த்துட்டிருக்கு... நல்ல பகல் நேரத்திலேயே அங்கே ஆள் நடமாட்டம் இல்லை."

பேரம் பேச சரியான இடத்தைத்தான் செலக்ட் பண்ணியிருக்கான்."

கோதண்டம் சொல்லி முடிக்கவில்லை. அட்சயின் செல்ஃபோன் ரிங்டோனை சிதறடித்தது. அழைப்பது யார் என்று எடுத்துப் பார்த்தான் அட்சய்.



ஒரு புது எண்.

அப்பா! இது அநேகமாய் அவனாகத்தான் இருக்கும். புது சிம்கார்ட் போட்டுட்டான் போலிருக்கு..."

எடுத்துப் பேசு... ஸ்பீக்கரை ஆன் பண்ணிடு!"

அட்சய் செவிக்கு செல்ஃபோனைக் கொடுத்தான். மெல்ல ஹலோ" என்றான்.

மறுமுனையிலிருந்து அந்தக் கரகரப்பான குரல் கேட்டது.

என்ன அட்சய்! 'டெவில் சர்ச்'சைப் போய் பார்த்துட்டு வந்துட்டே போலிருக்கு...?"

அறைக்குள் கனத்த அமைதி நிலவ அட்சய், பரசுராம், கோதண்டம், டாக்டர் உத்தண்டராமன் நான்கு பேரும் பயப் பார்வைகளை பரஸ்பரம் பரிமாறிக் கொண்டனர். செல்ஃபோனின் மறுமுனையில் அவன் தொடர்ந்து பேசினான். ஸ்பீக்கரில் குரல் சிதறியது.

என்ன அட்சய்! பேச்சையே காணோம்... நீ டெவில் சர்ச்சுக்குப் போய் நோட்டம் விட்டுட்டு வந்தது எனக்கு எப்படி தெரிஞ்சுதுன்னு யோசனை பண்றியா...? இது ஒரு பெரிய பிசினஸ் டீல். உன்னை மாதிரியான பண முதலைகள் கிட்டே போகும்போது நான் எச்சரிக்கையோடு இருக்கணும்னா உன்னோட ஒவ்வொரு அசைவையும் கண்காணிச்சாகணும்..."

அட்சய் குரலை உயர்த்தினான்.

இதோ பார்...! உனக்கு வேண்டியது பணம். எங்களுடைய தேவை யாழினி உள்பட அந்தப் பெண்கள். பேரத்தைப் பேசி முடி. டெவில் சா...... எல்லாம் வேண்டாம். எங்களால அவ்வளவு தூரமெல்லாம் அலைய முடியாது..."

என்னது... அலைய முடியாதா...? இதோ பார் அட்சய்... நீ சொல்றதைக் கேட்கக் கூடிய நிலைமையில் நான் இல்லை. நான் சொல்றதைத் தான் நீ கேட்டாகணும்... உன்னோட அப்பா கோதண்டமும் டெல்லியிலிருந்து வந்தாச்சுன்னு கேள்விப்பட்டேன். அவரையும் இன்னிக்கு ராத்திரி ஸ்பாட்டுக்குக் கூட்டிட்டுவா...! நான்

சொன்னது ஞாபகம் இருக்கட்டும். சரியாக பதினோரு மணிக்கு பேச்சு வார்த்தை ஆரம்பமாகும். 11.05க்கு பேச்சு வார்த்தை முடியும் போது, நான் ச்ஒல்ற தொகைக்கு நீங்க நாலு பேருமே தலையாட்டணும்!"

கோதண்டம் இப்போது பொறுமை இழந்து கத்தினார்.

யார்ரா... நீ...?"

ஓ... பெருசு! வணக்கம் பெருசு...! டெல்லிக்குப் போய் பல கோடி ரூபாய்க்கு அந்நிய முதலீட்டாளர் ஒருத்தரோடு பிசினஸ் பேசிட்டு வந்துட்டே போலிருக்கு?"

அதெல்லாம் உனக்குத் தேவையில்லாத விஷயம். நான் யாரு என்னோட பலம் என்னான்னு தெரியாமே நீ பேசிட்டு இருக்கே... மரியாதையா அந்தப் பொண்ணுகளை ஒப்படைச்சுட்டு நீ டிமாண்ட் பண்ற பணத்தை வாங்கிட்டுப் போய்... உன்னோட ரேட் என்ன... ஒரு கோடியா... ரெண்டு கோடியா... சொல்லு...!"

அட...! பிசினஸ் பெரிய அளவுல இருக்கும் போலிருக்கே! நான் பேரத்தை பத்து லட்சத்திலிருந்து ஆரம்பிக்கலாம்னு நினைச்சுட்டு இருந்தேன். பெரிசு! நீ என்னான்னா... ஒரு கோடி ரெண்டு கோடினு ஸ்டார்ட் பண்ணி பிசினஸை எங்கேயோ கொண்டு போய் நிறுத்திட்டே... ராத்திரி பதினோரு மணிக்கு டெவில் சர்ச்சுக்கு வா... பேரத்தை கண்டினியூ பண்ணலாம். வரும் போது எந்த ஆயுதமும் யார்கிட்டேயும் இருக்கக்கூடாது."

மறுமுனையில் பேச்சு சட்டென்று துண்டிக்கப்பட்டது.

அட்சய் ஒரு கோபப் பார்வையால் கோதண்டத்தை நனைத்தான்.

நீங்க ஏம்பா எமோஷனலாகி குறுக்கால பேசினீங்க? அவன் எப்படி ரியாக்ட் பண்ணினான் பார்த்தீங்களா?"

நாம பயப்படற மாதிரி காட்டிக்கக்கூடாது அட்சய்..."

அது சரி! ஆனா ரேட்டை வேற ஏத்தி விட்டுட்டீங்களே? அவன் எடுத்த எடுப்பிலேயே பத்து கோடி கேட்கப் போறான்."

இருபது கோடியே கேட்கட்டும்... நாம குடுத்தாத்தானே?"

என்னப்பா... பேசறீங்க... யாழினியும் அந்தப் பெண்களும் நம்ம கைக்கு வர வேண்டாமா?"

அட்சய்! நமக்கெல்லாம் பணம் சம்பாதிச்சுத் தான் பழக்கம். யாருக்கும் தூக்கிக் கொடுத்துப் பழக்கம் இல்லை. யாழினியையும் அவளோடு இருக்கிற மற்ற ரெண்டு பெண்களையும் ஒரு ரூபாய் கூட செலவழிக்காமே எப்படி மீட்கப் போகிறோம்கிற வித்தை எனக்குத் தெரியும்!"

பரசுராம் பதற்றப்பட்டார்.

கோதண்டம்! இது விளையாட்டான விஷயம் இல்லை... விவகாரமானது. இதை நாம கவனமாய்க் கையாளாத பட்சத்தில் நாலு பேருமே போலீஸ் லாக்கப்புக்குப் போக வேண்டியிருக்கும்!"

எனக்கு மட்டும் அந்த பயம் இல்லையா என்ன?"

அப்புறம் எதுக்கு வீம்பு...? அவன் கேட்கிற பணத்தைக் குடுத்துட்டு பிரச்னையை சால்வ் பண்ணிக்கலாம்!"

பணத்தால இந்தப் பிரச்னையை சால்வ் பண்ண முடியாது பரசுராம். பணத்தைக் குடுத்தா பிரச்னை பெரிசாகும்... நாம நிம்மதியா மூச்சு விடணும்னா அவன் உயிரோடு இருக்கக்கூடாது!"

அங்கிள்! அப்பா சொல்றதுதான் சரி... அவனோட மூச்சுக்கு முற்றுப்புள்ளி வெச்சாத்தான் நாம சந்தோஷமாய் சுவாசிக்க முடியும்..."

இது என்னோட மனசுக்கு சரியாப்படலை... டாக்டர்! நீங்க என்ன சொல்றீங்க...?" டாக்டர் உத்தண்டராமனிடம் கேட்டார் பரசுராம்.

உத்தண்டராமன் ஆமோதிப்பதாய் தலையாட்டினார். ஒரு வீட்ல பாம்பு இருக்குன்னு தெரிஞ்ச பிறகு, அந்த வீட்ல நிம்மதியா படுத்துத் தூங்க முடியுமா? இன்னிக்கு ராத்திரி அவனை முதல் தடவையா சந்திக்கப் போறோம். இதுவே அவனுக்குக் கடைசி தடவையாகவும் இருக்கணும்..."

அவன் தான் ஆயுதம் எதுவும் கொண்டு வரக்கூடாதுன்னு சொல்லியிருக்கானே?"

அவனுக்குத் தெரியறமாதிரியா கொண்டு போவோம்?" கோதண்டத்தின் குரலில் கோபம் தெறிக்க, பரசுராமின் முகம் இருட்டைப் பூசிக் கொண்டது.

தில்லை கங்கா நகர் எல்லைக்குள் கார் நுழைந்த போது ராத்திரி மணி பத்தே முக்கால், அநேகமாய் எல்லா வீடுகளும் இருட்டில் மூழ்கி இருந்தன. அட்சய் காரை ஓட்டிக்கொண்டு இருந்தான். பக்கத்தில் கோதண்டம். பின் சீட்டில் டாக்டர் உத்தண்டராமனும் பரசுராமும் சாய்ந்திருந்தார்கள்.

அடுத்த ஐந்து நிமிஷம் பயணத்தில் வீடுகள் காணாமல் போயிருக்க பார்த்தீனியமும் குற்றுச் செடிகளும் மண்டிய காலி மனைகள் பார்வைக்குக் கிடைத்தன. கோதண்டம் கேட்டார்.

அந்த டெவில் சர்ச்சுக்கு இன்னும் எவ்வளவு தூரம் போகணும் அட்சய்?"

இன்னும் ஒரு கிலோமீட்டர் போகணும்ப்பா..."

மோசமான ஏரியாவா இருக்கும் போலிருக்கே?"

இது வரைக்கும் ரோடு பரவாயில்லை... இனிமே வெறும் செம்மண் ரோடு தான்." அட்சய் சொல்லிக் கொண்டிருக்கும் போதே சாலையின் இரு பக்கமும் மண்டியிருந்த இருட்டுக்குள் கோணல் மாணலான கிளைகளோடு கருவேல மரங்கள் நட்சத்திர வெளிச்சத்தில் தெரிந்து உடனே மறைந்தன. கார் இப்போது வேகம் குறைத்து குதித்தது. சுற்றிலும் ஒரு துளி வெளிச்சமில்லை. காரின் ஹெட்லைட் வெளிச்சம் மட்டும் தனக்கு முன்பாய் இருந்த இருட்டைத் துடைத்தபடி வழிகாட்டிக்கொண்டு இருந்தது.

குறுகலான ஐந்து நிமிஷ பயணத்துக்குப் பிறகு கார் பாழடைந்த ஒரு காம்பௌண்ட் சுவர்க்குப் பின்புறம் போய் நின்றது. அட்சய் காரின் என்ஜினை அணைத்துவிட்டு சொன்னான்.

இது சர்ச்சோட காம்பௌண்ட் கேட்.. இதுக்கு மேல போக வழியில்லை. இறங்கி நடக்கணும்!"

எல்லோரும் இறங்கினார்கள்.

டயம் எவ்வளவு?"

10.55

நாம... அவன் சொன்ன நேரத்துக்கு வந்துட்டோம். அவன் எங்கேன்னு தெரியலையே...?" கோதண்டம் சொல்லிக் கொண்டிருக்கும் போதே அட்சயின் செல்ஃபோன் துடித்தது. டிஸ்ப்ளேயில் புது நெம்பர் ஒளிர்ந்தது.

அவன்தான்!"

பேசு"

செல்ஃபோனின் ஸ்பீக்கரை ஆன் செய்துவிட்டு ஹலோ" என்றான் அட்சய்.

எல்லாரும் புறப்பட்டு வந்துட்டீங்க போலிருக்கு..." மறுமுனையில் குரல் கேட்டது.

நீ சொன்ன இடத்துக்குச் சொன்ன நேரத்துக்கு வந்துட்டோம். நீ எங்கே இருக்கே?"

சர்ச்சுக்குள்ளே! நாலு பேரும் காம்பௌண்ட் சுவரை ஒட்டியிருக்கிற ஒற்றையடிப் பாதையில் நடந்து உள்ளே வாங்க... செல்ஃபோன்ல டார்ச் லைட் இருக்கா?"

இருக்கு...!"

அதை உபயோகப்படுத்தி வெளிச்சத்துல நடத்துவாங்க... இந்த சர்ச்சை சுற்றிலும் பாம்பு நடமாட்டம் அதிகம்... இருட்டுல மிதிச்சுடப் போறீங்க?" நான்கு பேரும் செல்ஃபோனின் டார்ச்சுகளை உயிர்ப்பித்துக் கொண்டார்கள். காம்பௌண்ட் சுவரையொட்டி ஒரு சோகையான ஒற்றையடிப் பாதை தெரிந்தது.

சுற்றும் முற்றும் பார்த்தபடி மெல்ல நடந்தார்கள். செல்ஃபோனின் மறுமுனையில் அவன் பேசினான்.

இன்னும் அஞ்சு நிமிஷத்துக்குள்ளே நாலு பேரும் சர்ச்சுக்குள்ளே இருக்கணும். சரியா பதினோரு மணிக்கு பேச்சு வார்த்தை ஆரம்பம். சீக்கிரம் வாங்க... செல்ஃபோன் 'ஆன்'லயே இருக்கட்டும்... அப்பத்தான் சர்ச்சுக்குள்ளே நான் எங்கே இருக்கேன்னு உங்களால கண்டுபிடிக்க முடியும்!"

இதோ... வந்துட்டோம்...!" அட்சய் சொல்ல கோதண்டம் தன் இடுப்பில் மறைத்து வைத்து இருந்த ரிவால்வரைத் தொட்டுப் பார்த்துக் கொண்டார்.

மூன்றடி உயரத்துக்கு வளர்ந்து காய்ந்து போயிருந்த புற்களுக்கு நடுவே நடந்து துருப்பிடித்து இரண்டாய் உடைந்து போயிருந்த கேட்டுக்கு முன்பாய் வந்து நின்றார்கள்.

ம்... உள்ளே வாங்க...!"

செல்ஃபோன் கட்டளையிட்டது கேட்டுக்குள் நுழைந்தார்கள்.

சர்ச் படிகள் தெரியுதா...?"

தெரியுது..."

அந்தப் படிகளில் போய் உட்காருங்க..."

சருகுகள் மண்டிக்கிடந்த சர்ச் வளாகத்துக்குள் நான்கு பேரும் பூனை நடை போட்டு படிகளில் போய் உட்கார்ந்தார்கள். சில விநாடிகள் மௌனத்தில் கரைந்த பிறகு அட்சய் கேட்டான்.

நீ எங்கே இருக்கே...? மணி இப்போ பதினொன்று. பேச வேண்டியதை பேசிடலாமா...?"

செல்ஃபோனில் குரல் சிரித்தது.

இன்னிக்கு பேச்சு வார்த்தை வேண்டாம்."

ஏன்?"

நான் சொன்ன படி நீங்க நடந்துக்கலை."

என்ன நடந்துக்கலை...?"

என்னைப் பார்க்க வரும் போது யாரும் எந்த ஒரு ஆயுதத்தையும் கொண்டு வரக்கூடாதுனு சொல்லியிருந்தேன். ஆனா இப்போ உன்னோட அப்பா இடுப்புல ஒரு ரிவால்வர் என்னைப் போட்டுத் தள்ளறதுக்காக பதுங்கியிருக்கு... இதுதான் பேச்சு வார்த்தைக்கு வர்ற லட்சணமா...?"

நான்கு பேரும் அமைதியா இருந்தார்கள்.

என்ன... பேச்சையே காணோம்?"

ஸாரி...! ஒரு பாதுகாப்புக்காக அப்பா அந்த ரிவால்வரைக் கொண்டு வந்தார்."

இதோ பார் அட்சய்! உங்க நாலு பேரையும் பத்தி எனக்கு நல்லாவே தெரியும். நானும் மோசமானவன்தான். சட்ட விரோதமான விஷயங்கன்னா எனக்கு சர்க்கரைப் பொங்கல் சாப்பிடற மாதிரி. செய்யற தொழில் எதுவா இருந்தாலும் சரி, அதுல நேர்மையை எதிர்பார்க்கிறவன் நான். நீங்க இண்டர்நேஷனல் க்ரிமினல்ஸ், நான் லோக்கல். நம்ம ரெண்டு பேர்ல யார் போலீஸ்ல மாட்டினாலும் சரி, உங்க மேல பெய்யப் போற டாலர் மழை அந்தரத்துல அப்படியே நின்றுடும். உங்களுக்கு டாலர் கிடைக்கலைன்னா எனக்கு நாஸிக் கரன்சி கிடைக்காமே போயிடும்."

நான்கு பேரும் அந்த அரையிருட்டில் ஒருவரையொருவர் பார்த்தபடி அதிர்ச்சியோடு அமைதி காத்தார்கள்.

செல்ஃபோனில் குரல் தொடர்ந்தது.

என்ன நாலு பேரும் ஷாக் ஆயிட்டீங்க போலிருக்கு? இங்கே நான் லோக்கலா இருந்தாலும் சில சர்வதேச மோசடிகள் எனக்கும் அத்துப்படி. அதுல ஒரு மோசடி ப்ராஜெக்ட் உங்களோட 'பூவில் செய்த ஆயுதம்!' யு.எஸ்.ஸில் இருக்கிற பயோமெடிக்கல் ஃப்யூச்சர் சயின்ஸ் சேம்பர்ஸ் இந்த விபரீதமான ப்ராஜெக்ட்டுக்காக பணத்தைக் கோடி கோடியாய்க் கொட்டத் தயாரா இருக்காங்க... வர்ற ஞாயிற்றுக்கிழமை

யு.எஸ்.ஸிலிருந்து 'காரல் மேத்யூ' என்கிற ஒரு அமெரிக்க ரிசர்ச் ஸ்காலர் உங்க கூட பேச்சுவார்த்தை நடந்த வர்றார். அந்தப் பேச்சுவார்த்தை உங்களுக்கு யூஸ்ஃபுல்லா இருக்க வேண்டாமா...?"

அட்சய் கலவரம் படித்த விழிகளோடு தன்னுடைய அப்பா கோதண்டத்தைப் பார்த்தான்.

'இவனுக்கு எல்லாம் தெரிந்து இருக்கிறது! 'பூவில் செய்த ஆயுதம்' விஷயம் எப்படியோ கசிந்து ஒரு மூன்றாவது நபரின் காதுக்குப் போய்விட்டது!'

அட்சய் பதற்றத்தைக் காட்டிக் கொள்ளாமல் பேசினான்.

'இதோ பார்! பாம்பின் கால் பாம்பறியும்னு சொல்வாங்க. நாங்க உன்னோடு பலப்பரீட்சை நடத்த விரும்பலை... பேச்சு வார்த்தையை ஆரம்பிப்போம். உனக்கு வேண்டியது பணம். எங்களுக்கு வேண்டியது அந்த மூணு பெண்கள். உன்னோட ரேட் என்ன சொல்லு!"

ஸாரி!"

எதுக்கு ஸாரி!"

இப்போ மணி 11.05 பேச்சு வார்த்தை முடிஞ்சாச்சு. மறுபடியும் எப்போ பேச்சுவார்த்தை எங்கே எந்த இடத்துலனு நாளைக்கு ஃபோன் பண்ணிச் சொல்றேன். இப்ப நீங்க புறப்படலாம்..."

நாளைக்கு வரும் போதாவது துப்பாக்கியை வீட்ல வெச்சுட்டுவாங்க!"

படபடவென்று பேசி முடித்த அவன் செல்ஃபோனின் இணைப்பைத் துண்டித்தான். நெற்றியைப் பிடித்துக் கொண்டான் அட்சய்.

அப்பா! இவன் சாதாரண நபர் கிடையாது. அசகாயப் பேர்வழி. இனி இங்கே வெயிட் பண்ணிப் பிரயோஜனம் இல்லை. கிளம்புவோம்!" சொல்லிக் கொண்டே அட்சய் எழமுயல கோதண்டம் கையமர்த்தி குரலை தாழ்த்தினார்.

யாரும் எழுந்திரிக்க வேண்டாம். அப்படியே உட்காருங்க. நான் அவனைப் பார்த்துட்டேன்!"



நான் அவனைப் பார்த்துட்டேன்!' என்று கோதண்டம் சொல்லவும் அட்சய், பரசுராம், டாக்டர் உத்தண்டராமன் மூன்று பேரும் அந்த இருட்டில் சுற்றும் முற்றும் பார்த்தார்கள். அட்சய் பதற்றப்பட்டான். குரலை வெகுவாய்த் தாழ்த்தினான்.

எங்கேப்பா அவன்... சொல்லுங்க... இதே இடத்துல அவனோட கதையை முடிச்சுடலாம்!"

கொஞ்சம் பொறுமையாய் இரு...! அவசரப்பட்டா காரியம் கெட்டுடும். நான் சொல்ற இடத்தை மட்டும் கொஞ்சம் உன்னிப்பாய் பாரு... சர்ச்சோட இடது புறம் ஒரு பில்லர் இருக்கு. உன்னால பார்க்க முடியுதா?"

ம்... முடியுது...!"

அந்தப் பில்லர்க்குப் பின்னாடிதான் அவன் மறைஞ்சு உட்கார்ந்துட்டு இருக்கான்."

பார்த்துட்டேன். காத்துக்கு அவன் போட்டிருக்கிற சட்டை இலேசா அசையுது..."

சத்தம் காட்டாமே என் பின்னாடியே வாங்க." சொன்ன கோதண்டம் தன்னிடம் இருந்த ரிவால் வரை தயார் நிலையில் வைத்துக் கொண்டு இருட்டில் ஒவ்வொரு அடியாய் எடுத்து வைத்தார். மற்ற மூன்று பேரும் மூச்சை அடக்கிக் கொண்டு பின் தொடர்ந்தார்கள். சர்ச்சின் பழுதுபட்ட படிகளில் சத்தம் காட்டாமல் ஏறினார்கள். பில்லர்க்குப் பின்னால் மறைந்து உட்கார்ந்திருந்த உருவம் இப்போது இலேசாய் அசைவது போல் இருந்தது. கோதண்டம் மண்டியிட்டு உட்கார்ந்தபடி மூச்சு வாங்கினார்.

அட்சய்" கிசுகிசுத்தார்.

ம்"

இங்கிருந்தே எய்ம் பண்ணி அவனைச் சுட்டுடலாமா?"

வேண்டாம்பா... மொதல்ல அவனை துப்பாக்கி முனையில் மடக்குவோம். அவன் யார்னு நமக்குத் தெரியணும். ஏன்னா, அவனுக்கு நம்ம 'பூவில் செய்த ஆயுதம்' ப்ராஜக்ட் பத்தி முழுசா தெரிஞ்சிருக்கு. அதெல்லாம் அவனுக்கு எப்படி தெரிஞ்சுதுன்னு கண்டுபிடிச்சாத்தான் மேற்கொண்டு ஃப்யூச்சர்ல நாம அந்த ப்ராஜக்ட்டைத் தொடர முடியும்...!"

அவன் தப்பிச்சுட்டான்னா...?"

இனிமேல் அவனால தப்பிக்க முடியாது. அப்படி அவன் தப்பிச்சு ஓட முயற்சி பண்ணினால் அதே விநாடி அவனை சுட்டுடலாம். ரிவால்வரை என்கிட்டே குடுங்க... நான் மட்டும் அவனுக்குப் பக்கத்துல போறேன். நீங்க மூணு பேரும் இங்கேயே இருங்க!" சொன்ன அட்சய் கோதண்டத்தின் கையில் இருந்த ரிவால்வரை வாங்கிக் கொண்டு இருட்டில் அந்தப் பில்லரைப் பார்த்தபடி அங்குலம் அங்குலமாய் நகர்ந்தான்.

பில்லர் இப்போது நன்றாகத் தெரிந்தது. பின்னால் இருந்தவனின் வலது கையும் வலது காலும் பார்வைக்கு தெளிவாய் கிடைத்தது. அட்சய் பூனை நடைபோட்டு எதிர்பாராத ஒரு விநாடியில் குபீரென்று பாய்ந்து அவனுக்கு முன்பாய்த் துப்பாக்கியைப் பிடித்தபடி நின்றான்.

அடுத்த விநாடியே-அட்சய்யின் முகம் மாறியது.

பில்லர்க்கு சாய்ந்து உட்கார்ந்திருந்தவனின் தலை ஒரு பக்கமாய் தொங்கிக் கொண்டிருக்க, வயிற்றுப் பகுதி ரத்தக் களமாய் மாறியிருந்தது. குத்தப்பட்ட கத்தி வயிற்றுக்குள் போயிருக்க வேண்டும். கத்தியின் பிடி மட்டும் வெளியே தெரிந்தது.

அ...ப்...பா!"

என்ன அட்சய்... என்னாச்சு?"

மூன்று பேரும் வேக வேகமாய் வந்தார்கள். கொலையுண்டு கிடந்த நபரைப் பார்த்ததும் அதிர்ந்து போனவர்களாய் அப்படியே நின்றார்கள்.

அ... அ... அட்சய்! யாரிது?"

தெரியலையே?"

செல்ஃபோன் டார்ச் வெளிச்சத்தை அவன் முகத்து மேல விழும்படியாய் அடி" கோதண்டம் சொல்ல அட்சய் தன் செல்ஃபோனை எடுத்து வெளிச்சத்தை உற்பத்தி செய்து இறந்து கிடந்தவனின் முகத்துக்கு கொண்டு போனான். வெளிச்சம் அவனுடைய முகத்தை நனைத்தது. அட்சய்யின் விழிகள் நிலைகுத்தின.

அ... அ... அப்பா... இவன் ஈஸ்வர். பரசுராம் அங்கிளோட பண்ணை வீட்டு வாட்ச்மேன்!"

டாக்டர் உத்தண்டராமன், ஈஸ்வரின் உடல் அருகே செல்ல முயல, பரசுராம் நடுக்கத்தோடு அவருடைய கையைப் பற்றினார்.

வேண்டாம் டாக்டர்... பக்கத்துல போகாதீங்க. அவன் அந்த மூணு பொண்ணுகளை மட்டும் கடத்தலை. வாட்ச்மேன் ஈஸ்வரையும் சேர்த்துத்தான் கடத்திட்டு வந்திருக்கான். ஏதோ பிரச்னை ஏற்பட்டு ஈஸ்வரை கொலை பண்ணியிருக்கான். இனியும் இந்த இடத்துல இருக்கிறது அவ்வளவு உசிதம் கிடையாது. புறப்படலாம். மறுபடியும் நாளைக்கு எப்படியும் நம்மை காண்டாக்ட் பண்ணுவான். பேரம் பேசுவான். அவன் கேட்கிற பணத்தைக் குடுத்துட்டு அந்த பொண்ணுங்க மூணு பேரையும் மீட்கறதுதான் இப்போதைக்கு முக்கியம்...!"

பரசுராம் சொல்றதுதான் சரி, அவனை நாம அனுசரிச்சு போகலைன்னா விளைவுகள் எது மாதிரியிருக்கும்னு ஈஸ்வரை கொலை செய்ததின் மூலமா காட்டியிருக்கான்."

துப்பாக்கியைக் கொண்டு வர வேண்டாம்னு நான் வீட்லேயே சொன்னேன். அப்பாதான் கேட்கலை..."

சரி... சரி... நாம கிளம்பலாம். இங்கே நின்னுட்டு இருக்கிற ஒவ்வொரு விநாடியும் நமக்கு ஆபத்துதான்."

ஒரு நிமிஷம்!" என்றான் அட்சய்.

என்ன?"

செத்துக் கிடக்கிற ஈஸ்வரோட கையில ஏதோ ஒரு துண்டு பேப்பர் இருக்கு. அது என்னான்னு பார்த்துடலாமா?"

அது எதுவாகவோ இருந்துட்டு போகட்டும்... அட்சய்! நாம இனியும் இங்கே இருக்க வேண்டாம்."

அது என்னான்னு பார்த்துடலாம் அங்கிள். ஒரு வேளை அதுல நமக்கு சாதகமான விஷயம் ஏதாவது இருக்கலாம்."

நீயே போய் பாரு அட்சய்!"

அட்சய் செல்ஃபோன் டார்ச் வெளிச்சத்தோடு ரத்தச் சகதியில் இறந்துகிடந்த ஈஸ்வரை நோக்கிப் போனான். அவனுடைய வலது கையின் விரல்களில் செருகப்பட்டு இருந்த அந்தத் துண்டுப் பேப்பரை உருவினான். செல்ஃபோனின் வெளிச்சத்தில் அதைக் குளிப்பாட்டினான்.

பால்பாய்ண்ட் பேனாவால் கிறுக்கலாய் எழுதப்பட்டிருந்த நான்கைந்து வரிகள் புலப்பட்டன. அட்சய் வாய்விட்டுப் படித்தான்.

உங்களுடைய அநியாயங்களுக்கு உறுதுணையாகவும் விசுவாச ஊழியனாகவும் இருந்த ஈஸ்வர் இப்போது உயிரோடு இல்லை. உங்களைப் பற்றிய எல்லா உண்மைகளும் தெரிந்த இவன் இனிமேலும் உயிரோடு இருந்தால் எனக்கும் ஆபத்து. உங்களுக்கும் ஆபத்து.

எனவேதான் ஒரு அடி நீளக்கத்தியை அவனுடைய அடிவயிற்றில் செருகி மூச்சை நிறுத்திவிட்டேன். சர்ச்சுக்குப் பின்னால் நான்கடி ஆழ குழி தயாராய் இருக்கிறது.

இவனை நீங்கள் டிஸ்போஸ் செய்கிறீர்களா? இல்லை... நான் செய்யட்டுமா?

துண்டு காகிதத்தில் எழுதப்பட்டிருந்த வாசகங்கள் முடித்து போயிருக்க அட்சய்யின் முகம் பயத்தில் வியர்த்துப் போயிருந்தது.

கோதண்டம் பதறினார்.

அட்சய்...! இனியும் நாம இங்கே இருக்கக் கூடாது. கிளம்பு...!"

நான்கு பேரும் ஓட்டமும் நடையுமாய் சர்ச்சை விட்டு வெளியே வந்தார்கள். நட்சத்திர வெளிச்சத்தில் அந்த ஒட்டு மொத்த பிராந்தியமும் நிசப்தமாய் இருந்தது. பரசுராம் பெரிது பெரிதாய் மூச்சிரைத்துக் கொண்டு முதல் ஆளாய் ஓடினார். அவருக்குப் பின்னால் கோதண்டம், உத்தண்டராமன் அட்சய் வியர்த்து வழிய பின் தொடர்ந்தார்கள். கார் நின்றிருந்த இடத்துக்கு வந்த சேர்ந்த போது அட்சய்யின் செல்ஃபோன் விழித்துக் கொண்டு கத்தியது. எடுத்துப் பார்த்தான்.

புது எண்.

அவனாகத்தான் இருக்கும்.

ஸ்பீக்கரை ஆன் செய்துவிட்டு பேசினான் அட்சய்.

ஹலோ!"

அட்சய்! முதல்கட்ட பேச்சு வார்த்தை தோல்வி. அந்த தோல்வியின் விலைதான் வாட்ச்மேன் ஈஸ்வரின் மரணம். நாளை இரண்டாம்கட்ட பேச்சு வார்த்தை நடக்கும். ஐந்து நிமிஷ நேரத்திற்குள் பேச்சு வார்த்தை முடிய வேண்டும். அதுவும் தோல்வியில் முடிந்தால், அந்தத் தோல்விக்கும் நீங்கள் ஒரு விலை கொடுக்க வேண்டியிருக்கும். நான் யார் என்பதைக் கண்டுபிடிக்க முயற்சி செய்யாதீர்கள். அப்படி முயற்சி செய்தால் அதனுடைய விளைவும் விபரீதமாய் இருக்கும். உங்களுக்கு வேண்டியது அந்த மூன்று பெண்கள். எனக்கு வேண்டியது ஒரு பெரிய தொகை. இது ஒரு சிம்பிளான டீல். இது வெற்றிகரமாய் முடித்து விட்டால் அதற்குப் பிறகு நீங்கள் யாரோ... நான் யாரோ!"

அட்சய் காரின் ட்ரைவிங் சீட்டில் ஏறிக்கொண்டே படபடத்தான்.

இதோ... பார்! என்னோட அப்பா துப்பாக்கியை எடுத்துட்டு வந்தது தப்புதான். இனிமேல் இது மாதிரியான தப்பு நடக்காது. உன்னோட டிமாண்ட் என்ன, சொல்லு. எவ்வளவு பணம் வேணும்?"

நாளைக்குச் சொல்றேன்...!"

எத்தனை மணிக்கு?"

நாளைக்கு ராகுகாலம் எத்தனை மணிக்குன்னு காலண்டர்ல பாரு... அந்த நேரத்துல என்னோட ஃபோன் வரும்."

அட்சய் மேற்கொண்டு பேச முயல மறுமுனையில் இணைப்பு துண்டிக்கப்பட்டது.

மறுநாள் காலை பத்தரை மணி டாக்டர் உமையாள் ஹாஸ்பிடல்.

கோதண்டமும் அட்சய்யும் உமையாளுக்கு எதிரே உட்கார்த்திருந்தார்கள்.

டாக்டர்! இனிமேல் அம்மாவுக்கு எந்தப் பிரச்னையும் இல்லையே?"

ஒரு பிரச்னையும் கிடையாது. பி.பி, சுகர், பல்ஸ் எல்லாமே நார்மலுக்கு வந்தாச்சு. யார்க்குமே இந்த மூணும் 100 என்கிற அளவைத் தாண்டாமல் இருந்தா அவங்களுக்கு ஆயுசு 100 தான்."

அம்மாவை எப்போ வீட்டுக்குக் கூட்டிட்டு போலாம்?"

அதுக்குள்ளே என்ன அவசரம் அட்சய்... அம்மா இன்னும் ரெண்டு நாள் என்னோட அப்ஸர்வேஷன்ல இருக்கட்டும். என்னிக்கு டிஸ்சார்ஜ் பண்ணலாம்னு நானே சொல்றேன்...! அப்புறம் இன்னொரு விஷயம் அட்சய்"

என்ன ஆன்ட்டி...?"

அதை உன்கிட்ட சொல்லி பிரயோஜனமில்லை. உன்னோட அப்பாகிட்டேதான் சொல்லணும்" என்று சொல்லிச் சிரித்த உமையாள் கோதண்டத்திடம் திரும்பினாள். இதோ பாருங்க மிஸ்டர் கோதண்டம்! உங்க மனைவி ரோகிணி ரெகவராகி பழைய ஆரோக்கியத்துக்குத் திரும்பிட்டாங்க. அவங்க இதே ஆரோக்கியத்தோடு இருக்கணும்னு அட்சய்க்கு சீக்கிரமே ஒரு கல்யாணத்தைப் பண்ணி வைக்கணும். அடுத்த ஒரு வருஷத்துக்குள்ள ஒரு பேரனோ பேத்தியோ பிறந்துட்டா உங்க ஒய்ஃப் ரோகிணிக்கு என்கிட்டே வரவேண்டிய அவசியமே இருக்காது!"

எஸ்... எஸ்...! சீக்கிரமே அட்சய்க்கு ஒரு நல்லப் பெண்ணாய்ப் பார்த்து கல்யாணத்தை முடிச்சுட வேண்டியதுதான்.

அது சரி மிஸ்டர் கோதண்டம்...! நீங்க ஏன் ஒரு மாதிரி டல்லா இருக்கீங்க...? உங்க மனைவியோட ஹெல்த் நல்லாயிருக்குன்னு சொன்ன பின்னாடியும் அது குறித்த சந்தோஷம் ஒரு சதவிகிதம் கூட உங்க முகத்துல பிரதிபலிக்கலையே...? ஹெல்த் வைஸ் உங்களுக்கு ஏதாவது பிரச்னையா...? ஸீம்ஸ்...டு...பி...ஹைபர் டென்ஷன்...!"

நோ... நோ... அதெல்லாம் ஒண்ணுமில்லை டாக்டர்... சம் பிசினஸ் ப்ராப்ளம். டெல்லியிலிருந்து நேத்திக்குத்தான் திரும்பினேன். டீடியஸ் ஜர்னி. ராத்திரியும் சரியான தூக்கம் இல்லை..."

உமையாள் பெருமுச்சொன்றை வெளியேற்றி விட்டுச் சொன்னாள். பணத்துக்குப் பின்னாடியே ஓடாதீங்க கோதண்டம். நீங்க மாசத்துக்கு பத்து கோடி ரூபாய் சம்பாதிச்சாலும் காலையில் சாப்பிடப் போறது நாலு இட்லி, மத்தியானம் ரெண்டு கரண்டி சாதம், ராத்திரி ரெண்டு சப்பாத்திதான். உடம்புக்கு நோய்னு ஏதாவது ஒண்ணு வந்துட்டா நீங்க எவ்வளவு கோடி பணம் சம்பாதிச்சிருந்தாலும் அது எல்லாமே வெறும் வெள்ளைப் பேப்பர்தான்."

வாட் யூ ஆர் ஸேயிங் ஈஸ் கரெக்ட் டாக்டர்! ஆனா இந்த ஓட்டத்தை என்னால நிறுத்த முடியலை... கொஞ்சம் கொஞ்சமாய் முயற்சி பண்றேன்...!

தட்ஸ் குட்!" உமையாள் சொல்லிக் கொண்டிருக்கும் போதே அட்சய்யின் செல்ஃபோன் வைப்ரேஷனில் ‘கிர்ர்ர்ர்’ என்றது. எடுத்து அழைப்பது யார் என்று பார்த்தான்.

பரசுராம்.

டாக்டர் உமையாளிடம் ஒரு ‘ஸாரி’ சொல்லிவிட்டு அறைக்கு வெளியே வந்தான். சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு செல்ஃபோனை எடுத்து இடது காதுக்குக் கொடுத்தான்.

சொல்லுங்க அங்கிள்"

நீயும் அப்பாவும் இப்போ எங்கே இருக்கீங்க?"

ஹாஸ்பிட்டல்ல"

அட்சய்! நம்மை ப்ளாக் மெயில் பண்ற நபர் யார்ங்கிறதை கண்டுபிடிச்சுட்டேன்."

யாரு அங்கிள்?"

போன்ல எதுவும் வேண்டாம். நீயும் அப்பாவும் ஹாஸ்பிட்டலிருந்து புறப்பட்டு ‘க்ரீன் வேஸ்’ ரெஸ்டாரண்டுக்கு வாங்க. நான் அங்கே வெயிட் பண்றேன். லேட் பண்ண வேண்டாம். மேட்டர் ஈஸ் வெரி அர்ஜண்ட்."

**ஓவியம் : ஸ்யாம்**



அட்சய் ஆழ்ந்த யோசனையோடு செல் ஃபோனை அணைத்த விநாடி அவனுடைய தோளில் ஒரு கை விழுந்தது. திரும்பினான்.

கோதண்டம் நின்றிருந்தார்.

போன்ல யாரு?"

அங்கிள் பரசுராம்."

என்ன சொல்றார்?"

நம்மை மிரட்டற அந்த பிளாக் மெயிலர் யாருங்கிறதை கண்டுபிடிச்சுட்டாராம்."

யாரு?"

போன்ல எதுவும் வேண்டாம். ‘அப்பாவைக் கூட்டிகிட்டு க்ரீன் வேஸ் ரெஸ்டாரண்ட்டுக்கு வா’னு சொல்றார்."

கோதண்டம் எரிச்சல்பட்டார் அவன் யாருனு போன்லயே சொல்ல வேண்டியதுதானே...?"

பரசுராம் அங்கிள் மேல கோபப்படாதீங்கப்பா. ஏதோ ஒரு சரியான காரணம் இருக்கப் போய்த்தான் அவர் க்ரீன்வேஸ் ரெஸ்டாரண்டுக்கு உங்களையும் என்னையும் வரச் சொல்லியிருக்கிறார்."

அந்த பரசுராம் ஒரு முட்டாள். அந்தப் பத்திரிகைக்காரப் பொண்ணு யாழினி விஷயத்துல அரைவேக்காட்டுத்தனமாய் மூவ் பண்ணப் போய்த் தான் இவ்வளவு பிரச்னைகள். டாலர் மழையில் நனைய வேண்டிய நேரம் இது...

ஒவ்வொரு விநாடியும் பயந்து பயந்து வியர்வையில நனைஞ்சிட்டிருக்கோம்...

அப்பா...! இந்த விஷயத்தை போலீஸ்ல இருக்கிற டி.ஜி.பி. லெவலுக்குக் கொண்டுப் போய் ‘சால்வ்’ பண்ண முடியாதா?"

எப்படி முடியும் அட்சய்...? கண்ணுக்குத் தெரியாத எதிரி யாருனு தெரியாத பட்சத்துல நம்மால எதுவும் செய்ய முடியாது. காணாம போனது பத்திரிகைக்காரப் பொண்ணு. இன்னிக்குக் காலையில் பேப்பரைப் பார்த்தியா...? ஒட்டு மொத்த பத்திரிகை உலகமே திரண்டு போய் போலீஸ் கமிஷனர் ஆஃபீசுக்கு முன்னாடி ஒரு ‘தர்ணா’ போராட்டம் நடத்தியிருக்காங்க... இன்னும் ரெண்டு நாளைக்குள்ளே யாழினியை போலீஸ் கண்டுபிடிக்கலைன்னா போராட்டம் தீவிரமாகும்னு ‘ப்ரஸ் ட்ரஸ்ட் ஆஃப் இண்டியா’ வார்ன்

பண்ணியிருக்காங்க. நிலைமை இவ்வளவு சீரியஸாய் இருக்கும் போது இந்தப் பிரச்னையை டி.ஜி.பி. லெவலுக்குக் கொண்டு போனால் ‘எங்கப்பன் குதிர்க்குள் இல்லை’ என்கிற கதை மாதிரி ஆயிடும்."

இப்ப என்னப்பா பண்றது?"

கண்ணாமூச்சி காட்டற அந்த எதிரி யாருனு தெரியணும். வா! மொதல்ல பரசுராமைப் போய்ப் பார்ப்போம். அது என்ன ரெஸ்டாரெண்ட்?"

க்ரீன் வேஸ் ரெஸ்டாரெண்ட்."

அது எங்கே இருக்குனு உனக்குத் தெரியுமா?"

தெரியும்...!"

சரி, கிளம்பு...!"

அடையார் போட் கிளப் சாலையில் சற்றே ஒதுக்குப்புறமாய் அடர்த்தியான மரங்களுக்கு நடுவே அந்த ‘க்ரீன்வேஸ் ரெஸ்டாரெண்ட்’ தெரிந்தது.

பார்க்கிங் ஏரியாவில் சில கார்கள், டூ வீலர்கள் பார்வைக்குக் கிடைக்க, ரெஸ்டாரெண்டின் உள்ளே ஐ.டி.யில் வேலை பார்க்கும் இளைஞர்களும் கல்லூரி மாணவ மாணவிகளும் பீட்சாக்களையும், பர்கர்களையும் மென்று கொண்டிருந்தார்கள் அவ்வப்பொழுது சிரிப்புச்சத்தம் எழுந்து அடங்கியது.

அட்சய்யும் கோதண்டமும் காரை பார்க் செய்துவிட்டு ரெஸ்டாரெண்டுக்குள் நுழைந்தார்கள். கார்னர் டேபிளில் பரசுராம் தெரிந்தார். முகம் இறுகிப் போயிருக்க கண்களில் கலக்கம்.

அவருக்கு எதிரே போய் உட்கார்ந்தார்கள். சில விநாடிகளுக்கு நீடித்த கனத்த நிசப்தத்தைக் கலைத்தான் அட்சய்.

சொல்லுங்க அங்கிள்... யாரந்த ப்ளாக் மெயிலர்?"

பரசுராம் பெருமூச்சையொன்றை வெளியேற்றி விட்டு தலை குனிந்தபடி சொன்னார். என்னோட அண்ணன் சேதுராம்!"

கோதண்டம் திகைத்தார். அவருக்கும் நமக்கும் என்ன சம்பந்தம். அவர் எதுக்கு நமக்கு எதிராய் ஒரு ப்ளாக் மெயிலராய் மாறணும்?

நான் ஒரு தப்பு பண்ணிட்டேன்."

என்ன தப்பு?"

அவரோட மகன் கைலாஷைக் கொன்னுட்டேன்..."

கோதண்டம் அட்சய்யும் திகைத்துப் போனவர்களாய் ஒருவரை பார்த்துக்கொண்டார்கள். கோதண்டம் பதற்றமானார்.

இது எப்போது நடந்தது...?"

நாலு நாளைக்கு முன்னாடி ராத்திரி எட்டுமணி இருக்கும் என்னோட அண்ணன் சேதுராமின் மகன் கைலாஷ் இதம் ட்ரஸ்ட் கட்டடத்துக்கு வந்தான் வரும்போதே போதையில் இருந்தான். என்னைப் பார்த்ததும் அழுதான். ‘சித்தப்பா! எனக்கும் அப்பாவுக்கும் சொத்து பிரிக்கிற விஷயத்துல கொஞ்சம் பிரச்னை. அவரோடு சண்டை போட்டுகிட்டு வீட்டை விட்டு வெளியே வந்துட்டேன். ஒரு ரெண்டு நாளைக்கு அப்பாவோட பார்வையில் படாமே இங்கே இருக்கேன். அவரால என்னைப் பார்க்காமே ஒரு நாள் கூட இருக்க முடியாது. ரெண்டு நாள் பார்க்காமே இருந்தாருன்னா தானாய் என்னோட வழிக்கு வந்துடுவார்னு சொன்னான்.

அப்புறம்...?"

நானும் அவன் சொன்னதுல இருக்கிற நியாயத்தைப் புரிஞ்சுகிட்டு என்னோட அறைக்குப் பக்கத்தில் இருக்கிற ஓர் அறையில் தங்கிக்கச் சொன்னேன். ராத்திரியில்தான் எனக்கு சரியாய் தூக்கம் வராதே. ஏதோ

சத்தம் கேட்டு அறைக்கு வெளியே வந்து பார்த்தேன். கைலாஷ் ஒரு திருட்டுப் பூனை மாதிரி சுற்றும் முற்றும் பார்த்துகிட்டு ட்ரஸ்ட் கட்டடத்துக்குள்ளே இருக்கிற நிலவறையை நோக்கிப் போனான். நம்ம விஷயங்களை ஏதாவது ஸ்மெல் பண்ணிட்டானோ என்கிற நினைப்பில் நானும் அவனை பின் தொடர்ந்தேன். நிலவறையில் அரைகுறை மயக்கத்தில் இருந்த ஹரிதா என்கிற நம்ம ஸ்பெசிமன் பெண்ணை மூர்க்கமாய் கெடுக்க முயற்சி பண்ணினான். நான் அதிர்ந்து போய் அவனைத் தடுக்கப் பார்த்தேன். என்னால முடியலை. ஒரு கட்டத்துல கைலாஷ் என்னையே கொல்லப் பார்த்தான். வேறு வழியில்லாமே அவனை என்னாட சைலன்ஸர் பிஸ்டலால சுட்டுத்தள்ள வேண்டியதாயிடுச்சு. அவன் உயிரை விட்ட கொஞ்ச நேரத்துலேயே ஹரிதாவும் இறந்து விட்டாள். இந்த விஷயத்தை நம்ம ஆட்கள் யாதவ், மனோஜ் கிட்டே சொன்னேன். அவங்க ரெண்டு பேரோட பாடியையும் டிஸ்போஸ் பண்ணிட்டாங்க. மூணு நாளைக்கு முன்னாடி என்னோட அண்ணன் சேதுராம் எனக்கு ஃபோன் பண்ணி கைலாஷ் அங்கே வந்தானான்னு கேட்டார். நான் வரலைன்னு சொன்னேன். ஆனா அவர் அதை நம்பாமே ‘உன்கிட்டதான் வந்ததாய் கேள்விப்பட்டேன்’னு சொன்னார்.’

அட்சய் குறுக்கிட்டான்.

இப்போ எனக்குப் புரியுது அங்கிள்...! நம்மை மிரட்டுகிற அந்த ப்ளாக்மெயிலர் உங்க அண்ணனாய் இருக்கலாம்னு நீங்க நினைக்கறீங்க இல்லையா...?"

ஆமா...! எனக்கு என்னோட அண்ணன் மீது மட்டுமில்லை. நம்ம ஆட்கள் யாதவ், மனோஜ் மீதும் சந்தேகம் இருக்கு. ஏன்னா கடந்த ரெண்டு நாளா அவங்களையும் காணோம். அவங்க செல்ஃபோன்களுக்கு முயற்சி பண்ணினா ‘நம்பர் ஈஸ் நாட் இன் யூஸ்’னு வருது..."

கோதண்டம் பரசுராமை ஏறிட்டார். உன்னோட அண்ணன் சேதுராம் தன்னோட மகனை காணோம்னு போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் ஏதாவது புகார் குடுத்து இருக்காரா?"

இல்லை..."

ஏன் குடுக்கலைன்னு கேட்டியா...?"

கேட்டேன்."

என்ன சொன்னார்?"

ஒரு வாரம் பத்துநாள் பார்த்துட்டு அதுக்கப் புறமும் வரலைன்னா போலீசுக்குப் போலாம்னு சொல்லிட்டார்."

அவர் அப்படி சொன்னதை நீயும் நம்பலை?"

ஆமா"

சரி... இப்போ என்ன செய்யலாம்?"

அது புரியாமேதானே உங்களுக்கு ஃபோன் பண்ணினேன்!"

கோதண்டம் மகனிடம் திரும்பினார்.

அட்சய்! நீ சொல்லு... மேற்கொண்டு இந்த விஷயத்தை எப்படி டீல் பண்ணலாம்?"

அப்பா! என்னோட கெஸ்வொர்க் என்ன தெரியுமா?"

என்ன?"

ஹரிதாவோட உடம்பையும், கைலாஷோட உடம்பையும் டிஸ்போஸ் பண்ணினது யாதவ், மனோஜ். அவங்க ரெண்டு பேரும் அங்கிளோட அண்ணன் சேதுராமை மீட் பண்ணி விஷயத்தைச் சொல்லியிருக்கலாம். அதுக்கப்புறமாய் மூணு பேரும் கூட்டணி சேர்த்து பணத்துக்காக இப்படி யொரு ‘ப்ளாக் மெயிலிங்’ வேலையை ஆரம்பிச் சிருக்கணும். யாழினியும் அந்த ரெண்டு பெண்களும் இப்ப அவங்க கஸ்டடியில்தான் இருக்கணும்".

சரி! இதை எப்படி கன்ஃபார்ம் பண்ணிக்கப்போறோம்?"

சேதுராமோட நடவடிக்கைகள் தீவிரமாய் கண்காணிக்கணும். முக்கியமாய் ராத்திரி வேளைகளில் அவர் எங்கே போறார் யார் யாரை யெல்லாம் மீட் பண்ணி பேசுறார்னு உன்னிப்பாய் கவனிக்கணும்."

நான் அந்த வேலையைப் பார்த்துக்கிறேன் அட்சய்! நீ வேற ஒரு வேலையைச் செய்யணும்."

சொல்லுங்க அங்கிள்... நான் என்ன செய்யணும்?"

நம்ம கிட்டே வேலை பார்த்த மனோஜ், யாதவ் இவங்க ரெண்டு பேரும் இப்போ எங்கே இருக்காங்கன்னு கண்டுபிடிக்க வேண்டியது உன்னோட பொறுப்பு. அவங்க செல்ஃபோன் நம்பர்களை நான் தர்றேன். அதை வெச்சு அவங்க எந்த ஊர்ல இருக்காங்கிறதை கண்டு பிடிக்க முடியும்னு நான் நினைக்கிறேன்."

கண்டிப்பாய் முடியும் அங்கிள்...! மொபைல் நெட்வொர்க் கார்ப்பரேஷன்ல எனக்கு ஒருத்தரை நல்லாவே தெரியும். இந்த விஷயத்துல அவர் எனக்கு உதவி பண்ணுவார். பை... த...பை... நம்ம டாக்டர் உத்தண்டராமனுக்கு இந்த விஷயத்தை ‘கன்வே’ பண்ணிட்டீங்களா?"

இல்லை... காலையில் எட்டு மணிக்கு அவருக்கு ஃபோன் பண்ணினேன். அவர் ஏதோ ஒரு முக்கியமான சர்ஜரி விஷயமாய் ஆப்ரேஷன் தியேட்டரில் இருக்கிறதாய் சொன்னாங்க. இனிமேல் தான் அவர்கிட்டே பேசணும்!" பரசுராம் சொல்லிக் கொண்டிருக்கும் போதே பேரர் பக்கத்தில் வந்த நின்றார்.

ஸார்! ஆர்டர் ப்ளீஸ்"

மூணு லெமன் டீ...!"

எனி ஸ்நாக்ஸ்?"

வேண்டாம்."

பேரர் போய்விட கோதண்டம் பரசுராமிடம் திரும்பினார்.

உன்னோட அண்ணன் சேதுராம் இப்போ எங்கே இருக்கார்?"

அவரோட வீட்லதான்..."

அவருக்கு ஃபோன் போடு!"

இப்ப எதுக்கு அவருக்குப் ஃபோன்?

சேதுராமன் உன்கிட்டே பேசும்போது எது மாதிரியான வார்த்தைகளை உபயோகப்படுத்தறார்னு நான் கேட்கணும். மகன் கைலாஷ் காணாமல் போன விஷயத்தில் அவருக்கு உண்மையாகவே கவலை இருக்கா...இல்லையானு என்னால கண்டு பிடிச்சுட முடியும். ஃபோன் பண்ணிப்பேசு...!"

பரசுராம் தன்னுடைய செல்ஃபோனை எடுத்து சேதுராமின் எண்ணை தொடர்பு கொண்டார். ஸ்பீக்கரை ஆன் செய்துவிட்டு பேசினார்.

அண்ணா... நான் பரசுராம்...!"

சொல்லு...!" மறுமுனையில் சேதுராமின் குரல் ஒலித்தது. கோதண்டம் உன்னிப்பாய் அந்த சம்பாஷணையைக் கவனிக்க பரசுராம் தொடர்ந்து பேசினார்.

கைலாஷ் விட்டுக்கு வந்துட்டானா?"

இன்னும் இல்லை...! எப்படியும் இன்னும் ரெண்டு நாளைக்குள்ளே வந்துடுவானு நினைக்கிறேன்!"

அண்ணா! இந்த விஷயத்துல லேட் பண்ணாதீங்க. போலீசுக்கு போய் ஒரு கம்ப்ளைண்ட் குடுத்துடுங்க...!"

காணாமே போறதுக்கு அவன் என்ன சின்னப் பையான...? சொத்தைப் பிரிச்சு குடுனு கேட்டான். நான் மாட்டேனு சொன்னேன்.

கோபிச்சுட்டு வீட்டை விட்டுப் போய்ட்டான். உன்கிட்டேதான் வந்து இருப்பானு நினைச்சேன். நீ வரலைன்னு சொன்னதால அவன் எங்கோ தலைமறைவாய் இருக்கானு நினைக்கிறேன்..."

அவனோட ஃப்ரண்ட்ஸ் வீடுகளுக்கு ஃபோன் பண்ணி விசாரிச்சுப் பார்த்தீங்களா?"

ம்... விசாரிச்சேன். கைலாஷ் யார் வீட்டுக்கும் போகலை. இதோ பார் பரசுராம்! நீ அவனைப் பத்தி கவலைப்படாமே உன்னோட வேலையைப் பாரு. அவன் ஒரு குடிகாரப்பயல். சொத்தை இப்பவே பிரிச்சு கொடுத்தா எல்லாத்தையும் வித்து குடிச்சு குடிச்சு தீர்த்துடுவான்னுதான் நான் சொத்தைப் பிரிக்காமே இருக்கேன். இது தவிர இன்னொரு காரணமும் இருக்கு!"

என்ன?"

கூடப் பொறந்த தங்கச்சிக்கு சொத்து தரக் கூடாதாம். எல்லா சொத்தும் அவன் பேருக்கு வரணுமாம்."

அது தப்பாச்சே?"

அவன் இப்போ சரியில்லை. பரசுராம்! நீ கைலாஷைப் பத்தி கொஞ்சமும் கவலைப்படாதே... அந்த தறுதலைப்பய ஒரு வாரம் பத்து நாள் ஊரைச் சுத்திட்டு வயிறு காய்ஞ்சதும் வீட்டுக்கு வந்துடுவான். மனசைப் போட்டு நீ குழப்பிக்க வேண்டாம்."

சம்பாஷனை நின்றது.

பரசுராம் தன்னுடைய செல்ஃபோனை அணைத்த விநாடி அந்த மாற்றத்தை உணர்த்தார். வாய்க்குள் சட்டென்று உமிழ்நீர் அதிகமாய் சுரந்தது. அந்த நீர் அடுத்த விநாடியே புளிப்புச் சுவையாய் மாறியது. அது என்ன ஏது என்று யோசிப்பதற்குள் கடைவாயோரம் ஒரு கோடு மாதிரி வழிந்தது. தன் இடது கை ஆட்காட்டி விரலால் பயத்தோடு தொட்டுப் பார்த்தார்.

ரத்தம்!

எதிரில் உட்கார்ந்திருந்த அட்சய்யும், கோதண்டமும் முகங்கள் இருண்டு போய் அதிர்ச்சியோடும் எழுந்தார்கள்.

ஹாஸ்பிடல்.

ஐ.ஸி. யூனிட்டுக்கு வெளியே நின்றிருந்த கோதண்டமும், அட்சயும் நிறம் மாறிப்போன முகங்களோடு டாக்டர் உமையாளை ஏறிட்டார்கள்.

என்ன டாக்டர் சொல்றீங்க... பரசுராம் உயிர் பிழைக்க வாய்ப்பு குறைவா...?"

ரொம்ப ரொம்பக் குறைவு... சடன் மாஸிவ் அட்டாக். நீங்களும் அட்சயும் ரெஸ்டாரென்டில் இருந்து உடனடியாய் அவரை ஹாஸ்பிடலுக்குக் கொண்டு வந்துட்டீங்க. இதுவே சாதாரண ஹார்ட் அட்டாக்காய் இருந்தால் இந்நேரம் பரசுராம் எந்திரிச்சு உட்கார்ந்திருப்பார். பட், இது சிவியர் அட்டாக். மெடிக்கலி இதுக்குப் பேர் கார்டியோ

வேஸ்குலர் அட்டாக். ஹார்ட் பல்ஜிங் வேற இருக்கு. லிக்கர் நிறைய சாப்பிடுவாரா?"

அட்சய் ஆமோதிப்பாய்த் தலையசைத்தான்.

ஆன்ட்டி...! பரசுராம் அங்கிள் தினமும் லிக்கர் சாப்பிடுவார். ஆனால், பார்க்க ஹெல்த்தியாய்தான் இருப்பார். ரெஸ்டாரென்டில் எங்க கூட உட்கார்ந்து பேசும் போது கூட ஆக்டிவாய்த்தானே இருந்தார்?"

இதோ பார் அட்சய்...! லிக்கர் சாப்பிடறவங்க வெளிப்பார்வைக்கு ஆரோக்கியமாய்த்தான் இருப்பாங்க. ஆனா அவங்களோட உள்ளுறுப்புகள் முக்கியமாய் - இதயமும், கல்லீரலும் - நல்ல நிலைமையில் இருக்காது. ஏதாவது ஒரு நாள் அது வி.ஆர்.எஸ். கேட்கும்போதுதான் இந்த கார்டியோ வேஸ்குலர் அட்டாக் ஏற்படும்."

அப்படீன்னா பரசுராம் அங்கிளைக் காப்பாத்தவே முடியாதா ஆன்ட்டி...?"

ஸாரி... ஐயாம் ஹெல்ப்லஸ். ஹி ஈஸ் கவுன்டிங் ஹிஸ் லாஸ்ட் மினிட்ஸ்...!"

ஆன்ட்டி! நீங்க தப்பா நினைக்கலைன்னா நான் ஒண்ணு சொல்லட்டுமா..."

சொல்லு...!"

பெசன்ட் நகர்ல 'கார்டியோ கேர்' என்கிற பேர்ல ஒரு ஹாஸ்பிடல் இருக்கு. பரசுராம் அங்கிளை அங்கே ஷி்ஃப்ட் பண்ணிப் பார்க்கலாமா... ஏன்னா அது ஒரு மல்ட்டி ஸ்பெஷாலிட்டி ஹாஸ்பிடல். கார்டியாலஜிஸ்ட் நிறையப் பேர் இருப்பாங்க... இது மாதிரியான பேஷன்டுகளுக்கு அங்கே அட்வான்ஸ்டா ஏதாவது ட்ரீட்மென்ட் இருக்கலாமே...?"

உன்னோட மனசுக்குள்ளே அப்படியொரு எண்ணம் இருந்தா தாராளமாய் முயற்சி பண்ணிப் பாரு!"

அட்சய் கோதண்டத்திடம் திரும்பினான். நீங்க என்னப்பா சொல்றீங்க...?"

வேண்டாம் அட்சய்... நம்ம டாக்டர் சொன்னா அது சரியாய்த்தான் இருக்கும்". கோதண்டம் சொல்லி வாயை மூடவில்லை. ஐ.ஸி. யூனிட்டி லிருந்து டியூட்டி டாக்டர் வேகமாய் வெளிப் பட்டார். உமையாளுக்கு முன்பாய் வந்து நின்றார்.

என்ன முகுந்தன்?"

ஹி ஈஸ் டெட் மேடம்... பட் உயிர் போறதுக்கு முன்னாடி சில வார்த்தைகள் பேசினார்."

என்ன பேசினார்?"

'பூவில் செய்த ஆயுதம் வேண்டாம்'னு சொன்னார்."

கோதண்டமும் அட்சயும் 'ஷாக்' அடித்த தினுசில் சரேலென்று ஒருத்தரை ஒருத்தர் பார்த்துக் கொள்ள, உமையாள் தன் நெற்றியில் உற்பத்தியான ஒரு பெரிய கேள்விக்குறியோடு ட்யூட்டி டாக்டரைப் பார்த்தாள்.

என்னது! பூவில் செய்த ஆயுதமா?"

ஆமா மேடம்...!"

அப்படீன்னா என்ன அர்த்தம்?"

தெரியலை மேடம்"

உமையாள் தனக்கருகில் நின்றிருந்த கோதண்டத்தையும், அட்சயையும் குழப்பமாய் ஏறிட்டாள்.

பரசுராமைப் பத்தி உங்களுக்குத்தான் நல்லாத் தெரியும். 'பூவில் செய்த ஆயுதம் வேண்டாம்'னு சொல்லியிருக்கார். அதுக்கு என்ன அர்த்தம்?"

தெரியலையே...!"

இட்ஸ் ஓ.கே...! பரசுராமோட ஃபேமிலி மெம்பர்ஸ் யாராவது இருந்தா அவங்களுக்கு உடனடியாய் இன்ஃபார்ம் பண்ணுங்க... அவங்க வந்ததும் இதைப் பத்திப் பேசிக்கலாம்!"

பரசுராமுக்கு ஃபேமிலி கிடையாது ஆன்ட்டி. அவருக்கு ஒரு பிரதர் இருக்கார். சேதுராம்னு பேரு!"

தகவல் கொடுத்து அவரையாவது வரச் சொல்லுங்க! மொதல்ல பாடியை ரிஸீவ் பண்ணட்டும். பின்னாடி மத்ததையெல்லாம் பேசிக்கலாம்" உமையாள் சொல்லிவிட்டுப் போய்விடக் கோதண்டம் ஒரு பெருமூச்சோடு அருகில் இருந்த நாற்காலியில் சாய்ந்தார். அட்சய் பக்கத்தில் உட்கார்ந்தான்.

பரசுராம் அங்கிள் இப்படி 'கொலாப்ஸ்' ஆவார்னு நான் கொஞ்சம் கூட நினைச்சுப் பார்க்கலை அப்பா...!"

இந்த யாழினி விவகாரத்துல பரசுராமுக்கு நிறையவே மன உளைச்சல். ஏற்கெனவே அவர் ஹைபர்டென்ஷன் பேர்வழி."

அவரோட அண்ணன் சேதுராமுக்கு தகவல் குடுத்துடலாமா...?"

குடுத்துடு...! பரசுராமோட செல்ஃபோன் இப்போ உன்கிட்டேதானே இருக்கு?"

ஆமா...!"

அதுல சேதுராமோட நம்பர் இருக்கும். அவருக்கு ஃபோன் பண்ணிப் பேசிடு" கோதண்டம் சொல்லிக் கொண்டிருக்கும் போதே டாக்டர் உத்தண்டராமன் வியர்க்க வியர்க்க நடந்து வந்து மூச்சு வாங்க நின்றார்.

ஸாரி... ட்ராஃபிக்ல மாட்டிகிட்டேன்...! பரசுராம் இப்போ எப்படியிருக்கார்?"

போயிட்டார்... மாஸிவ் அட்டாக்..."

உத்தண்டராமன் சுற்றும் முற்றும் பார்த்துவிட்டுக் குரலைத் தாழ்த்தினார்.

நான் நம்பலை..."

என்ன நம்பலை...?"

அந்த மாஸிவ் அட்டாக் இயற்கையாய் வந்தது இல்லை..."

பின்னே?"

வரவழைக்கப்பட்டது... அதாவது மர்டர்!"

கோதண்டம், அட்சய் உறைந்து போனவர்களாய் உத்தண்டராமனையே பார்த்தார்கள். டாக்டர்!

நீங்க என்ன சொல்லிட்டிருக்கீங்க...?"

அவன் எனக்கு ஃபோன் பண்ணினான்."

யாரு?"

யாழினியைக் கடத்தி வெச்சிருக்கிற ப்ளாக் மெயிலர்."

என்ன சொன்னான்?"

நான் கார்ல வந்துட்டிருக்கும்போதுதான் அவன் எனக்கு ஃபோன் பண்ணினான். எனக்கும் அவனுக்கும் நடந்த கான்வர்சேஷனை அப்படியே ரிக்கார்ட் பண்ணிட்டேன். இதோ ஆன் பண்ணட்டுமா?"

அட்சயும், கோதண்டமும் வியர்வை மினுமினுக்கும் முகங்களோடு சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு யாரும் அருகில் இல்லை என்பதை உறுதி செய்து கொண்டபின் ம்... ஆன் பண்ணுங்க!" என்றார்கள். டாக்டர் செல்ஃபோனை உயிர்ப்பித்தார். டாக்டரின் குரலும் அவனுடைய குரலும் கேட்டது.

யாரு?"

என்ன டாக்டர்! பரசுராமைப் பார்க்க ஹாஸ் பிடலுக்குப் போயிட்டு இருக்கீங்க போலிருக்கு...?"

நீ யாரு...?"

பார்த்தீங்களா! மறந்துட்டீங்க! நான் உங்க புது பார்ட்னர். வழக்கமாய் அட்சய்க்குத்தான் ஃபோன் பண்ணுவேன். அட்சய் இப்போ டாக்டர் உமையாளோட ஹாஸ்பிடல்ல இருக்கிறதால உங்களுக்குப் ஃபோன் பண்ணினேன்."

என்ன விஷயம் சொல்லு...!"

நீங்க ஹாஸ்பிடல் போய்ச் சேர்றதுக்குள்ளே பரசுராம் உயிரை விட்டிருப் பார். அதனால போற வழியிலேயே ஒரு மாலையையோ ரீத்தையோ வாங்கிட்டுப் போயிடுங்க...!"

இதோ பார்! இப்படி டார்ச்சர் பண்ற வேலையெல்லாம் வேண்டாம். நீ பேரம் பேசு. உனக்கு உண்டான பணத்தை வாங்கிட்டு அந்தப் பொண்ணுகளை ஒப்படைச்சுடு... பரசுராமுக்கு ஹார்ட் அட்டாக் வந்ததுக்கு காரணமே நீ தான்...!"

ஸாரி டாக்டர்... பரசுராமுக்கு வந்த ஹார்ட் அட்டாக் தானாய் வந்தது இல்லை... அவர் ஆரோக்கிய மாய்த் தான் இருந்தார். அவர் மூளையில் இருக்கிற ஒரு முக்கியமான ரத்தக் குழாயை வெடிக்க வெச்சதே நான்தான்!"

நீ என்ன சொல்றே?"

அது ஒரு மர்டர்..."

எ... எ... எப்படி?"

உங்களுக்கு மட்டும்தான் பூவில் ஆயுதம் செய்யத் தெரியுமா... எனக்கும் தெரியும்."

செல்ஃபோனில் உரையாடல் நின்று போயிற்று. உத்தண்டராமன் செல்ஃபோனை அணைத்தார். இப்போது கோதண்டம், அட்சய் இருவரின் முகங்களும் இருண்டு போயிருந்தன.

டாக்டர்... இது சாத்தியமா?" அட்சய் கேட்டான்.

எது?"

ஆரோக்கியமாய் இருக்கிற ஒருத்தருக்கு ஹார்ட் அட்டாக் வரவழைக்கிறது...?"

வெளிநாட்டு மருத்துவமனைகளில் இது சாத்தியம்தான். இது மாதிரியான மரணங்களை 'ஸோஃபிஸ்டிகேட்டட் க்ரைம்ஸ்'னு க்ளாஸிஃபை பண்ணியிருக்காங்க...! பட் நம்ம இந்தியாவில் இது மாதிரியான க்ரைம்ஸ் நடந்தது இல்லை. அவன் சொன்ன இன்னொரு விஷயத்தை நோட் பண்ணியா?"

என்ன?"

உங்களுக்கு மட்டும்தான் பூவில் ஆயுதம் செய்யத் தெரியுமா... எனக்கும் தெரியும்."

ஸோ... அவனுக்கு எல்லாமே தெரிஞ்சிருக்கு!"

இப்ப என்ன பண்ணலாம்?"

அவனோட நோக்கம் நம்மகிட்டயிருந்து பணம் பறிக்கிறது கிடையாது டாக்டர்."

பின்னே?"

உயிரைப் பறிக்கிறதுதான்! ரெண்டு நாளைக்கு முன்னால் டெவில் சர்ச்சில் ஈஸ்வர், இன்னிக்குப் பரசுராம். நாளைக்கு நம்ம மூணு பேர்ல யாராவது ஒருத்தர்கூட அவனோட இலக்காய் இருக்கலாம்." கோதண்டம் குறுக்கிட்டார். பேசாமே போலீசுக்குப் போயிடலாமா? இப்ப நம்ம சிட்டியில் இருக்கிற டி.ஜி.பி. எனக்கு ரொம்பவும் வேண்டியவர். கரன்ஸியை கட்டுக் கட்டாய் அள்ளிவிட்டா போதும்... வெளியே நியூஸ் கசியாமே திரைக்குப் பின்னாடியே நம்ம பிரச்னையை சுத்தம் பண்ணிக் குடுத்துடுவார்..."

அப்பா சொல்றதுதான் சரி டாக்டர்... இனியும் இந்த விஷயத்துல நாம ரிஸ்க் எடுக்கக்கூடாது! போலீசுக்குப் போயிடுவோம்."

உத்தண்டராமன் உறுதியான குரலில் நோ" என்றார்.

போலீஸ் வேண்டாம்... போலீசுக்குப் போனா நாம எல்லாத்தையும் சொல்ல வேண்டியிருக்கும். நம்ம ப்ராஜக்ட் லோக்கல் கிடையாது. இன்டர்நேஷனல். நாம போலீசுக்குப் போறதை அடுத்த வாரம் சென்னை வரப்போகிற காரல் மாத்யூ விரும்பமாட்டார். நம்ம எதிரி யார்னு கண்டுபிடிக்க வேற வழி வகைகளைத்தான் நாம யோசிச்சுப் பார்க்கணும்!"

அட்சய் டாக்டருக்கு பதில் சொல்ல முயன்ற விநாடி, ஒரு நர்ஸ் அவனை நோக்கி வருவதைப் பார்த்துவிட்டு மௌனமானான். நர்ஸ் பக்கத்தில் வந்து நின்றாள்.

ஸார்!"

என்ன?"

உங்க மதர் உங்களைப் பார்க்கப் பிரியப்படறாங்க..."

நான் வர்றேன்.. நீ போ...! சொன்ன அட்சய் கோதண்டத்தை ஏறிட்டான். அப்பா! நான் அம்மாவைப் பார்த்துட்டு வந்துடறேன். நீங்க அங்கிளோடு பேசிட்டிருங்க..." சொன்ன அட்சய் ஐ.ஸி. யூனிட்டுக்கு எதிரேயிருந்த ஸ்பெஷல் வார்டை நோக்கி நடந்தான்.

வேகமான நடை.

‘அம்மா எதற்காக கூப்பிட்டிருப்பாள்?’

‘பரசுராம் இங்கே அட்மிட் பண்ணப்பட்ட விஷயமோ, சில நிமிஷங்களுக்கு முன்பு அவர் இறந்து போன விஷயமோ அம்மாவுக்கு தெரிந்து இருக்க நியாயமில்லை’. யோசித்துக் கொண்டே பாதி வராந்தாவை நடந்து முடித்தவன் லி்ஃப்ட் அருகே வந்ததும் சட்டென்று நின்றான்.

லி்ஃப்டினின்றும் வெளிப்பட்ட அந்தச் சிறிய கும்பலில் நகுலின் முகம் தெரிந்தது.

‘நகுல் இங்கே யாரைப் பார்க்க வந்திருக்கான்?’

‘அம்மாவையா?’

‘அம்மாவைப் பார்க்க வந்திருந்தால் எனக்கு ஃபோன் பண்ணியிருப்பானே?’

நகுல் ஏதே ஒரு விதப் பதற்றத்தில் இருப்பது போல் அட்சய்க்குத் தோன்றவே சட்டென்று ஒரு பில்லருக்குப் பின்பாய் மறைவில் நின்று அவனைக் கண்காணிக்க ஆரம்பித்தான்.

நகுல் இடதுபக்கமாய்த் திரும்பி, வேகமாய் நடந்து, எதிர்ப்பட்ட ஒரு நர்ஸிடம் ஏதோ கேட்டு விசாரித்துக் கொண்டு மறுபடியும் நடந்தான். அட்சய் அவனைப் பின் தொடர்ந்தான்.

முப்பது விநாடி நடை.

நகுல் டாக்டர் உமையாளின் அறைக்கு முன்பாய்ப் போய் நின்றான். கதவைத் தட்டிவிட்டு சில விநாடிகள் காத்திருந்த பின், உள்ளே போனான். அட்சய் ஓட்டமும் நடையுமாய்ப்போய் லேசாய்த் திறந்திருந்த கதவருகே நின்று காதுகளுக்கு உன்னிப்பைக் கொடுத்தான்.

உள்ளே பேச்சுக்குரல் கேட்டது.

உமையாளின் குரல்.

என்ன நகுல்! போன காரியம் காயா... பழமா?"

அறைக்குள்ளே டாக்டர் உமையாளும், நகுலும் பேசிக் கொண்டிருக்க, வெளியே கதவருகே நின்றி ருந்த அட்சய் தன் காதுகளுக்கு உன்னிப்பைக் கொடுத்தான்.

என்ன நகுல்... போனக் காரியம் காயா, பழமா?" உமையாள் கேட்டாள்!

பழம்தான் டாக்டர்...! ஆனா மனசுக்குக் கஷ்டமாயிருக்கு!"

என்ன கஷ்டம்...?"

பாவம்! சின்ன வயசுப் பொண்ணு. கல்யாணம் பண்ணிகிட்டு புருஷனோடு சந்தோஷமாய் இருக்க வேண்டிய வயசுல இப்படி விபத்துல சிக்கி மூளைச்சாவு ஸ்டேஜுக்குப் போய், உடல் உறுப்புகளைத் தானம் பண்ண வேண்டிய நிலைமை. பொண்ணோட அம்மாவும் அப்பாவும் கதறித் துடிக்கிறதைக் பார்க்க முடியலை. டாக்டர்! இதயத்துக்குள்ளே ஒரு டன் இரும்பை அடைச்சு வெச்ச மாதிரி இருக்கு."



நகுல்! நான் ஒரு டாக்டராய் இருக்கிறதால இது மாதிரியான விஷயங்கள் எல்லாம் எனக்கு ஒரு சாதாரண நிகழ்வாய்த் தெரியுது. விதியோட கோரமான விளையாட்டுகளை சில நேரங்களில் நாம் கை கட்டி வேடிக்கை பார்க்க வேண்டியிருக்கு. என்ன பண்றது...? என்னோட பேஷன்ட் ஒருத்தர். ரொம்பவும் நல்லவர். நிறைய தான தர்மங்களைப் பண்ணினவர். அவரோட ரெண்டு கண்ணிலேயும் 'கார்னியா' பாதிக்கப்பட்டுப் பார்வையே பறிபோகிற நிலைமை. உடனடியாய் அவருக்கு மாற்றுக் கண்களைப் பொருத்தினால்தான் அவரோட வாழ்க்கை மறுபடியும் வெளிச்சத்துக்குத் திரும்பும். ஆனா கண்கள் உடனடியாய்க் கிடைக்கணுமே...? கையில கோடி ரூபாய் எடுத்துகிட்டுப் போனாலும் கிடைக்கக் கூடிய பொருளா அது. அதுதான் உங்க 'பரஸ்பரம்' அமைப்புக்குப் போன் பண்ணி மூளைச்சாவு அடைந்த யாராவது ஒரு நோயாளியின் கண்கள் கிடைக்குமானு கேட்டிருந் தேன். அவங்கதான் ஃபோன் நம்பர் கொடுத்து உங்களைக் கான்டாக்ட் பண்ணச் சொன்னாங்க."

டாக்டர்! நீங்க எனக்கு ஃபோன் பண்ணின நேரம் சரியான நேரம். அந்தநேரத்துல மூளைச்சாவு அடைந்த பெண்ணோட அம்மா அப்பாகிட்டே உடல் உறுப்புதானம் பற்றிப் பேசி அவங்களை நான் கன்வின்ஸ் பண்ணிட்டிருந்தேன்."

எனி ஹௌ நகுல்... ஒரு நல்ல மனுஷனுக்குப் பார்வை கிடைக்க நீங்களும் ஒரு கருவியாய்ப் பயன்பட்டிருக்கீங்க... விஷ்... யூ... ஆல்...த... பெஸ்ட்."

தேங்ஸ்... டாக்டர்! என்னைக் கெஞ்சம் நல்லாவே ப்ளஸ் பண்ணுங்க. எனக்குச் சொந்தமான - பிரியமான ஒண்ணு காணாம போயிடுச்சு. அது சீக்கிரமாவே கிடைக்கணும்னு வாழ்த்துங்க..."

என்ன காணாம போச்சு...?"

நீங்க ப்ளஸ் பண்ணுங்க டாக்டர்... எனக்குச் சொந்தமான அந்தப் பொருள் கிடைச்சதும் நானே உங்களை வந்து பார்க்கிறேன்."

நகுல்! உங்கள மாதிரியான பொதுநல எண்ணம் கொண்டவர்களின் வாழ்க்கையில் சின்னச் சின்ன இடையுறுகள் குறுக்கிட்டாலும் அது எல்லாமே 'பாஸிங் க்ளவுட்ஸ்' மாதிரி காணாமல் போயிடும். மத்தவங்க நல்லாயிருக்கணும் நினைக்கிறவங்களோட வாழ்க்கையில் என்னிக்குமே சந்தோஷம் குறையாதாம்!"

இந்த வாழ்த்து போதும் டாக்டர்...! நான்வர்றேன்... இன்னிக்கு சாயந்தரம் ஆறு மணிக்குள்ளே மூளைச்சாவு அடைந்த அந்தப் பொண்ணோட முக்கிய உறுப்புக்களை எடுத்துடுவாங்க. உங்க ஹாஸ்பிடலுக்கு ஒரு

ஜோடிக் கண்கள் ஃப்ரீஸர் கன்டெய்னர்ல வந்துடும். கண் ஆபரேஷனுக்கு வேண்டிய ஏற்பாடுகளைப் பண்ணிடுங்க டாக்டர்!"

ஷ்யூர்... இப்பவே ஆப்டிக்-சர்ஜன் சங்கர நாராயணனுக்கு ஃபோன் பண்ணிச் சொல்லிடறேன். அவர் எல்லா ஏற்பாடுகளையும் பண்ணிடுவார்."

நான் வர்றேன் டாக்டர்."

டோண்ட் ஒர்ரி நகுல்... காட் இஸ் வித் யு!"

தேங்க்யூ டாக்டர்!"

நகுல் வெளியே வரப்போவதை உணர்ந்து கொண்ட அட்சய் சட்டென்று நகர்ந்து அருகில் இருந்த பில்லரின் மறைவுக்குள் ஒண்டினான்.

அறையினின்று வெளிப்பட்ட நகுல் தளர்ந்த நடையோடு லிஃப்டை நோக்கிப் போக, அவனுடைய முதுகையே வெறித்தான் அட்சய்.

இரண்டு நாட்கள் கரைந்து போயிருக்க, அன்றைய தினம் காலை பதினோருமணி அந்தப் பெரிய வீட்டில் இருந்த கோதண்டத்தின் அலுவலக அறை ஏ.ஸி.யைச் சுவாசித்துக் கொண்டிருந்தது. அட்சய் ஒரு ஃபார்மாலிடிக்கிற்காக கதவை ஒரு தட்டுத் தட்டிவிட்டு உள்ளே நுழைந்தான். அறை டிசம்பர் மாத ஊட்டியாய்க் குளிர்ந்து போயிருந்தாலும் கோதண்டம் முகம் வியர்வையில் மினு மினுத்தது. உடம்பில் ஒரு பதற்றம் நிலவியது.

கூப்பிட்டீங்களாப்பா?"

ம்... யு.எஸ்.ஸிலிருந்து காரல் மேத்யூ ஃபேக்ஸ் பண்ணியிருக்கார். பூவில் செய்த ஆயுதம் ப்ராஜெக்ட் ட்ராப்டு!"

என்னப்பா சொல்றீங்க?"

ஃபேக்ஸ் லெட்டரை நீயே படிச்சுப் பாரு...!" பேப்பர் வெயிட்டுக்குக் கீழே இருந்த அந்த ஃபேக்ஸ் தாளை உருவி நீட்டினார் கோதண்டம். அட்சய் வாங்கிப் படித்தான். கடிதம் வரி வரியாய் ஆங்கிலத்தில் ஓடியிருக்க, மனசுக்குள் தமிழாக்கம் ஓடியது.

இதம் சேரிடபிள் ட்ரஸ்டின் முக்கியமான பொறுப்புகளில் உள்ள அனைவருக்கும் இந்த ஃபேக்ஸ் செய்தி உடனடியாகத் தெரியப்படுத்தப்பட வேண்டும். யு.எஸ். பயோ மெடிக்கல் சயின்ஸ் சேம்பர் சார்பாகப் 'பூவில் செய்த ஆயுதம்' என்கிற ப்ராஜெக்ட், எந்த நோக்கத்திற்காக ஆரம்பிக்கப் பட்டதோ அந்த நோக்கம் நாங்கள் எதிர்பார்த்தபடி வெற்றிப் பாதையில் பயணிக்கவில்லை. சென்னை காவல்துறை, ட்ரஸ்ட்டின் நடவடிக்கைகளில் சந்தேகப்பட்டு, கோர்ட் மூலம் ட்ரஸ்ட்டின் நட வடிக்கைகளை முடக்கிவிட்டது. இருந்தாலும் சுப்ரீம் கோர்ட்டில் தடையாணை பெற்று ட்ரஸ்ட்டின் நடவடிக்கைள் மீண்டும் தொடரும் என்கிற நம்பிக்கையில் பொறுமை காத்தோம்.

ஆனால் கடந்த சில நாட்களாக நடைபெறும் நிகழ்ச்சிகள் எங்கள் நம்பிக்கைகளை சிதைத்துவிட்டன. பரசுராம் இப்போது உயிரோடு இல்லை. உங்களுடைய உயிர்களுக்கும் இப்போது உத்திரவாதம் இல்லை என்கிற இந்த விபரீதமான நிலையில் 'பூவில் செய்த ஆயுதம்' ப்ராஜெக்ட் அடியோடு ரத்து செய்யப்படுகிறது. இனிமேற் கொண்டு யு.எஸ். பயோ-மெடிக்கல் சயின்ஸ் சேம்பர்க்கும், இதம் ட்ரஸ்ட்டுக்கும் எந்தவிதமான தொடர்பும் இல்லை என்பதை இந்த ஃபேக்ஸ் கடிதத்தின் மூலம் அறிவுறுத்தப்படுகிறது.

அட்சய் ஃபேக்ஸ் கடிதத்தைப் படித்துவிட்டு அதிர்ந்து போனவனாய் நிமிர்ந்தான்.

என்னப்பா! இப்படி ஃபேக்ஸ் கொடுத்திருக்காங்க?"

எப்படியோ... இங்கே நடக்கிற எல்லா நியூசும் அங்கே போயிடுது!"

இப்ப என்னப்பா பண்றது? கோடிக்கணக்கான டாலர்களில் லாபம் பார்த்துடலாம் என்கிற எண்ணத்துல நாம ஐம்பது கோடி ரூபாயை அதுல கொட்டிக்யிருக்கிறோம். அந்தப் பணம் அவ்வளவு தானா?"

அட்சய்! அதை எனக்கு ஞாபகப்படுத்தாதே எனக்கு நெஞ்சை அடைக்கிற மாதிரி இருக்கு!" சொன்னவர் மேஜையின் மேலிருந்த மினரல் வாட்டர் பாட்டிலை எடுத்து ஒரு வாய்த் தண்ணீரைக் குடித்தார்.

அப்பா! நான் வேணும்ன்னா காரல் மேத்யூவுக்கு ஃபோன் பண்ணிப் பேசட்டுமா?"

நான் பண்ணிப்பார்த்துட்டேன். அங்கே எல்லாரோட செல்ஃபோன்களும் 'சுவிட்ச் ஆஃப்'ல இருக்கு! எவனும் பேசமாட்டான்"

நன்றி கெட்ட செந்நாய்கள்!"

அட்சய்! இதெல்லாம் அந்த ப்ளாக் மெய்லரோட வேலையாய்தான் இருக்கும்!"

அப்படீன்னா... நம்மைவிட அவன் புத்திசாலி!"

பரசுராம் சந்தேகப்பட்ட மாதிரி அவரோட பிரதர் சேதுராமோட வேலையா இது?"

சேதுராமைப் பார்த்தா அப்படி எனக்குத் தோணலை. தன் தம்பியோட டெட் பாடியைப் பார்த்துட்டு ரெண்டு தரம் மயக்கம் போட்டு விழுந் துட்டார். மயானத்துல அவர் அழுத அழுகை...

அதெல்லாம் ஏன் நடிப்பாய் இருக்கக்கூடாது?"

இல்லேப்பா! அந்த அழுகையும் துடித்த துடிப்பும் நிஜம்."

அப்படின்னா... இது டாக்டர் உமையாள், நகுல் கூட்டணியோட வேலைதான்!"

சான்ஸேயில்லை! அவங்க ரெண்டு பேரும் கூட்டுச் சேர்ந்து இருக்கிறது உடல் உறுப்புத் தானம் என்கிற விஷயத்துக்காக மட்டுமே!"

இவங்கள்ல யாருமே இல்லைன்னா வேறயார்?"

அப்பா! எனக்கு ஒருத்தர் மேலே ஆரம்பத்திலிருந்தே சந்தேகம்...!"

நீ யாரைச் சொல்றே?"

டாக்டர் உத்தண்டராமன்"

கோதண்டம் திடுக்கிட அட்சய்! நீ என்ன சொல்றே? டாக்டர் உத்தண்டராமன் நம்ம ப்ரா ஜெக்ட்டில் ஒரு பார்ட்னர். ப்ராஜெக்ட்டை செயல்படுத்திட்டு இருக்கிறவரே அவர்தான்."

ஏன்? ஒரு பார்ட்னர் துரோகம் செய்யக் கூடாதா?"

அட்சய்! நீ சொல்றது எனக்குப் புரியலை!அவர் மேல நாம சந்தேகப்பட என்ன முகாந்திரம் இருக்கு?"

அப்பா! யு.எஸ். பயோ - மெடிக்கல் சயின்ஸ் சேம்பர் அமைப்பும் 'இதம்' சேரிடபிள் ட்ரஸ்ட்டும் இணைந்து 'பூவில் செய்த ஆயுதம்' அதாவது 'ஃப்ளவர் நைஃப்' என்கிற பேர்ல ப்ராஜெக்ட் ஆரம்பிச்ச போது அதனுடைய குறிக்கோள் என்னவாக இருந்தது?"

அது வந்து ஓவம் டெனோஷன் மற்றும் எம்பிரியோ சம்பந்தப்பட்ட ஒரு ஆராய்ச்சியாய் இருந்தது. அதாவது செயற்கைக் கரு முட்டைகளையும், செயற்கை எம்பிரியோக்களையும் உருவாக்கி பெண்களுக்கு அது ஒரு வரப்பிரசாதமாய் அமைகிறது வகையில் அந்த ப்ராஜெக்ட்டின் செயல்பாடுகள் இருந்தது இல்லையா?"

ஆமா!"

அந்த ப்ராஜெக்ட் மட்டும் வெற்றியடைஞ்சா அதை இண்டர்நேஷனல் மெடிக்கல் கவுன்சிலுக்கு அனுப்பி காப்புரிமை வாங்கிக் கோடிக் கணக்கான டாலர்களில் லாபம் சம்பாதிக்கணும். இதுதானே நம்ம நோக்கம்?"

ஆமா!"

இந்த இடத்துலதான் டாக்டர் உத்தண்டராமன் வில்லனா மாறியிருக்கார்."

அட்சய்! நீ என்னடா சொல்றே?"

அப்பா...! இந்த ப்ராஜெக்ட்டில் மெடிக்கல் ரீதியாய் எல்லா உண்மைகளையும் உள்வாங்கி யிருப்பவர் நம்ம டாக்டர்தான். யு.எஸ். ரிசர்ச் கவுன்ஸில் அம்பது கோடியும், நாம ஒரு ஐம்பது கோடியும் போட்டோம். பணம் போட்டதோடு நம்ம வேலை முடிஞ்சுது. ஆனா அதுக்கப்புறமாய் வேலை பார்த்தவர் டாக்டர்தான். இந்த ப்ராஜெக்ட்டோட எல்லா உண்மைகளையும் டாக்டர் உத்தண்டராமன் வேற ஏதோ ஒரு மருத்துவ அமைப்புக்கு விலை பேசிட்டார்னு நினைக்கிறேன்... இதை எங்கே நாம கண்டுபிடிச்சுடுவோம்னு பயந்துதான் இப்படி ஒரு ப்ளாக் மெயிலிங் ட்ராமா பண்ணிட்டிருக்கார்...! என்னோட கணிப்பு இதுதான்."

கோதண்டத்தின் விழிகளில் திகில் உறைந்தது.

அப்படீன்னா பரசுராமோட மரணத்துக்குக் காரணம் டாக்டர் உத்தண்டராமனா...?

ஷ்யூர்! இங்கே நடக்கிற எல்லா சம்பவங்களை யும் சுடச்சுட யு.எஸ்.ஸுக்கு அனுப்பறதும் டாக்டரோட வேலை தான்...! ப்ராஜெக்ட்டை அவங்க க்ளோஸ் பண்ணிட்டா இவர் ‘ஓவம், எம்பிரியோ டொனேஷன்’ சம்பந்தப்பட்ட எல்லா ஆய்வு முடிவுகளையும் வேற ஒரு மெடிக்கல் ரிசர்ச் சென்டருக்கு நல்ல ரேட்டுக்கு விலை பேசலாமே...?"

சரி! இதுக்கெல்லாம் காரணம் டாக்டர் உத்தண்டராமன் தான் என்கிற விஷயத்தை எப்படி கன்ஃபர்ம் பண்ணிக்கப்போறோம்."

நீங்க டாக்டருக்கு ஃபோன் பண்ணி பள்ளிக் கரணையில் இருக்கிற நம்ம கெஸ்ட் ஹவுசுக்கு இன்னிக்கு சாயந்தரம் ஆறு மணிக்கு அவரை வரச்சொல்லுங்க..."

வரச்சொல்லி...?"

வரச்சொல்லுங்க... நான் அவர்கிட்டே பேசிக்கிறேன்."

அட்சய்! நம்ம கையில் எந்த ஒரு ஆதாரமும் இல்லாமே நாம எப்படி அவரை குற்றவாளியாய்க் கன்ஃபார்ம் பண்ண முடியும்?"

கார்னர் பண்ண வேண்டியதுதான்!"

எப்படி! எனக்குப் புரியலை!"

அப்பா! டாக்டர்கிட்டே மொதல்ல அந்த ப்ளாக் மெயிலரைப் பற்றிப் பேசுவோம். அந்த ப்ளாக் மெயிலர் யார் என்கிற விவரம் நமக்குத் தெரியும் என்கிற விஷயத்தையும் அவர்கிட்டே சொல்லுவோம். அந்தச் சமயத்துல அவரோட முக பாவங்கள் எப்படி மாறுதுன்னு அப்ஸர்வ் பண்ணு வோம். அவர் குற்றவாளியாய் இருந்தா கண்டிப்பாய் முகம் வியர்க்கும் உடம்புல பதற்றம் தெரியும்!"

கோதண்டம் சில விநாடிகள் அமைதியாய் இருந்து விட்டு மெல்லிய குரலில் பேசினார்.

நீ சொல்றதும் சரிதான் அட்சய்! நீ அவருக்கு ஃபோன் பண்றியா இல்லே நான் பண்ணட்டுமா?"

நீங்களே பண்ணுங்கப்பா...!"

கோதண்டம் தன் செல்ஃபோனைக் கையில் எடுத்த விநாடி பின் பக்கமிருந்து குரல் கேட்டது.

அப்பாவும் புள்ளையும் அப்படியென்ன ரகசியம் பேசிட்டு இருக்கீங்க?"

லேசாய் திடுக்கிட்டு அட்சய் திரும்பிப்பார்த்தான். அவனுடைய அம்மா ரோகிணி ஏ.ஸி குளிருக்கு இதமாய் சால்வையைப் போர்த்திக்கொண்டு சற்றே தடுமாற்றமாய் நடந்து வந்து கொண்டிருந்தாள். அட்சய் பதற்றமாய் அவளை நோக்கிப் போனான்.

அய்யோ... அம்மா! ஹாஸ்பிடலிருந்து டிஸ் சார்ஜ் ஆகி வந்து முழுசா ஒரு நாள் கூடஆகலை அதுக்குள்ள பழையபடி உன்னோட ஆட்டத்தை ஆரம்பிச்சுட்டியா? டாக்டர் உமையாள் ஆன்ட்டி என்ன சொல்லி அனுப்பியிருக்காங்க தெரியுமா? ஒரு வாரத்துக்கு உனக்கு பெட்ரெஸ்ட் தான் டாய்லட்டுக்கு மட்டும் போயிட்டு வரலாம். மற்றபடி ரூமை விட்டு வெளியே வரவே கூடாது!"

அடப் போடா! அந்த டாக்டருக்கும் வேலை யில்லை. உனக்கும் வேலையில்லை. எனக்கு என்னோட நோய் குணமாகணும்ன்னா அதுக்கான ஒரே மருந்து உன்னோட கல்யாணம்தான். இந்த வீட்ல பேரப் புள்ளைகளோட சத்தம்! கேட்டாலே போதும்! என் உடம்புல இருக்கிற நோய் நொடியெல்லாம் உடனே காணாமே போயிடும்!"

அட்சய் கோதண்டத்திடம் திரும்பினான்.

அப்பா! அம்மா லட்சார்ச்சனையை ஆரம்பிச் சுட்டாங்க. நீங்க கேட்டுகிட்டு இருங்க. நான் ஆபீஸ் வரைக்கும் போயிட்டு வந்துடறேன்!" கோதண்டம் கண் சிமிட்டினார்.

நீ டாக்டருக்கு ஃபோன் பண்ணிப் பேசிடறியா அட்சய்?"

ம்..பேசிடறேன்" அறையை விட்டு வெளியே வந்த அட்சய் மாடிப்படிகளில் இறங்கும் போதே தன் செல்ஃபோனை எடுத்து டாக்டர் உத்தண்ட ராமனைத் தொடர்பு கொண்டான்.

மறுமுனையில் ரிங்கேடான் போய் ஒரு பெண் குரல் கேட்டது. ‘அது டாக்டரின் மனைவி குரல் என்பதைப் புரிந்து கொண்ட அட்சய் மெள்ளக் குரல் கொடுத்தான்.

ஆன்ட்டி! நான் அட்சய்."

தம்பி! நானே உனக்கு பண்ணலாம்னு இருந்தேன்."

என்ன விஷயம் ஆன்ட்டி?"

நேத்து சாயந்தரம் ஆறு மணிக்கு வீட்டை விட்டு வெளியே போனவர் இன்னமும் வீடு திரும்பலை தம்பி!"

எ...எ...என்ன சொல்றீங்க ஆன்ட்டி?

மறுமுனையில் டாக்டர் உத்தண்டராமனின் மனைவி கிட்டத்தட்ட அழவே ஆரம்பித்து விட்டாள்.

தம்பி! எனக்கு என்ன பண்றதுன்னே தெரியலை. சில சமயங்களில் ஹாஸ்பிடலில் ஏதாவது ஆபரேஷன் இருந்தா ராத்திரி அங்கேயே தங்கிடுவார். ஆனா தகவல் கொடுத்து விடுவார். இந்தத் தடவை அப்படிப்பட்ட தகவல் எதுவும் வரலை..."

அட்சய் தன்னுடைய கலக்கத்தை தள்ளி வைத்துவிட்டு ஆன்ட்டி! பயப்படாதீங்க! காணாமே போறதுக்கு டாக்டர் சின்னக் குழந்தையா என்ன? நேத்து சாயந்தரம் ஆறு மணிக்கு பெரம்பூர்ல இருக்கிற இண்டியன் மெடிக்கல் அஸ்ஸோசியேஷன் ஹாலில் நடந்த ஏதோ ஒரு ஃபங்கஷனுக்கு டாக்டர் போனதாய் சொன்னீங்க... அந்த ஃபங்கஷனை நடத்தினவங்களுக்கு ஃபோன் பண்ணி டாக்டர் வந்தாரா இல்லையாங்கிறதை கன்ஃபர்ம் பண்ணிட்டீங்களா?" என்று கேட்டான்.

ம்... ஃபோன் பண்ணி கேட்டேன்!"

என்ன சொன்னாங்க?"

அவர் ஃபங்கஷனுக்கே வரலைன்னு சொன்னாங்க."

அப்படீன்னா... டாக்டர் அந்த ஃபங்கஷனுக்குப் போறதாய் சொல்லிட்டு வேற எங்கேயோ போயிருக்கார்?"

ஆமா... தம்பி!"

எங்கே போயிருப்பார்னு நினைக்கறீங்க ஆன்ட்டி?"

எனக்கு ஒண்ணும் தோணலை தம்பி!"

சரி... நீங்க டென்ஷன் படாமே இருங்க ஆன்ட்டி. டாக்டர் அங்கிளைக் கண்டுபிடிக்க நான் முயற்சிகறேன்.

நீங்க அவசரப்பட்டு போலீசுக்குப் போயிடாதீங்க...!"

நான் போலீசுக்குப் போறதை அவரும் விரும்ப மாட்டார்."



மத்தியானம் ஒரு மணிக்குள்ளே டாக்டர் அங்கிளோடு வந்து உங்க முன்னாடி நிக்கறேன் ஆன்ட்டி!" பேசிவிட்டு செல்ஃபோன் இணைப்பைத் துண்டித்த அட்சயின் முகம் வியர்வைத் துளிகளால் நிரம்பியிருந்தது. கர்ச்சீப்பை எடுத்து ஒற்றிக் கொண்டு வேக வேகமாய் ஃபோர்டிகோவில் நின்றிருந்த காரை நோக்கிப் போனான்.

டாக்டர் உத்தண்டராமன் சுய உணர்வுக்கு வந்து கண் விழித்த போதுதான், ஓர் இருட்டான அறைக்குள் இருப்பதை உணர்ந்தார். பின்னத்தலை ஒரு இரும்புக் குண்டைப் போல் கனத்தது. கண்ணிமைகளை சிரமப்பட்டு பிரித்தார். தட்டு முட்டான பொருள்கள் கலங்கலாய் பார்வைக்குக் கிடைத்தது. நாக்கு ஈரப்பசையின்றி வறண்டு போயிருக்க வயிறு கபகபவென்று பசித்தது.

‘இது எந்த இடம்...?’

‘நான் எப்படி இங்கே...?’ மூளை வலியோடு யோசிக்க... நடந்த சம்பவம் மனசுக்குள் நிழல்படம் போல் ஓடியது. கார் வீட்டைவிட்டு புறப்பட்ட சில நிமிஷ நேரத்துக்குள்ளேயே காரின் பின் சீட்டுக்கு அடியிலிருந்து ஓர் உருவம் எழுந்து உட்கார்ந்ததும், பிடரியில் துப்பாக்கியை வைத்து மிரட்டியதும், அந்த நபர் சொன்னபடி காரை ஓட்டியதும், கார் புறநகரின் ஒரு பகுதிக்கு வந்ததும் காரை சாலையோரமாய் நிறுத்தச் சொன்னதும், இருட்டான அந்த இடத்தில் காரை நிறுத்திய அடுத்த விநாடியே கழுத்துப் பகுதியில் ‘சுருக்’கென்று ஊசி பாய்ந்ததும், அந்த விநாடியே கண்கள் சொருகி தலை சாய்ந்தது... என்று ஒவ்வொரு காட்சியும் ‘ஸ்டில்ஸ்’ போட்ட மாதிரி நகர்ந்தன.

என்ன டாக்டர்! கண் விழிச்சிட்டீங்க போலிருக்கு...? இன்னும் ஒரு மணி நேரமாவது மயக்கத்துல இருப்பீங்கன்னு நினைச்சேன்."

அவருக்குப் பின்பக்கமிருந்து அந்தக் கரகரப்பான குரல் கேட்டது. இதற்கு முன் கேட்டிராத குரல். யார் என்று தெரிந்து கொள்வதற்காகத் திரும்பிப் பார்க்க முயன்றார். கழுத்தைத் திருப்ப முடியவில்லை.

ஸாரி டாக்டர்! கொஞ்ச நேரம் உங்களால கையையோ காலையோ அசைக்க முடியாது... ஏன்னா போட்டிருக்கிற ஊசி அப்படிப்பட்டது. அந்த ஊசியோட பேரு உங்களுக்குகூட தெரியும். ‘இம்ப்ளாண்ட் RFID’ டாக்டரின் விழிகள் மிரண்டன."

என்ன டாக்டர் பயமாய் இருக்கா...? இந்த இம்ப்ளான்ட் RFID ஊசியை ஹரிதா என்கிற பொண்ணுக்கு எத் தனையோ தடவை போட்டு அவளோட உடம்பை ஒரு சோதனைக் கூடமாய் மாத்தியிருக்கீங்க ஞாபகம் வருதா...?"

ஹ... ஹ... ஹரிதாவா... யாரது...?"

இதோ பாருங்க டாக்டர்...! நீங்க இப்ப சொன்னதே கடைசி பொய்யாய் இருக்கட்டும். இனியொரு தடவை பொய் பேசினா நீங்க இந்த அறையை விட்டு உயிரோடு போக முடியாது. நான் உங்களை இங்கே கடத்திக் கிட்டு வந்து வெச்சிருக்கிற துக்குக் காரணமே ‘பூவில் செய்த ஆயுதம்’ என்கிற உங்களோட உயிரியல் விபரீத ஆராய்ச்சியைப் பத்தி தெரிஞ்சுக் கிறதுக்காகத்தான். உங்க பார்ட்னர்ஸில் ஒருத்தர் பரசுராம் அவர்

பரலோகம் போயிட்டார். மீதி இருக்கிற கோதண்டம், அட்சய் ரெண்டு பேருமே டம்மி பீஸ். அவங்களைப் பொறுத்த வரைக்கும் இந்த ப்ராஜெக்ட் ஒரு பிசினஸ். டாலர் மழையில் நனைய ஆசைப்படுகிற பணக்கார வர்க்கம். நீங்க ஒருத்தர்தான் சரக்குள்ள ஆசாமி. உண்மையைப் பேசிட்டா நீங்க உயிரோடு வெளியே போய் டாக்டர் தொழிலை கண்டினியூ பண்ணலாம். இல்லேன்னா வீட்டுக்குப் பின்னாடி இருக்கிற தண்ணியே இல்லாத ஆயிரம் அடி ஆழ போர்வெல் குழாய்க்குள்ளே துண்டு துண்டாய் வெட்டிப் போட்டு சமாதி பண்ணிடுவேன்..."

வே... வே... வேண்டாம்!"

இப்ப சொல்லுங்க டாக்டர்... உங்களுக்கு ஹரிதாவைத் தெரியுமா தெரியாதா?"

தெ...தெ...தெரியும்!"

‘ பூவில் செய்த ஆயுதம்’ என்கிற ஒரு விபரீதமான உயிரியல் ஆராயச்சிக்கு நீங்க உபயோகப்படுத்தின முதல் பரிசோதனை எலி அந்த ஹரிதா தானே?"

ஆமா...!"

யார் அந்த ஹரிதா?"

அந்த விவரம் எல்லாம் எனக்குத் தெரியாது. பரசுராமும் அவரோட ஆட்களும்தான் அந்த ஹரிதா என்கிற பெண்ணைக் கடத்திக் கொண்டு வந்தாங்க. அவளை பரிசோதனைக்கு முழுமையாய் பயன்படுத்திக் கொள்வதற்கு முன்னால் பரசுராமோட அண்ணன் பையன் ஹரிதாகிட்டே தப்பாய் நடக்க முயற்சி பண்ணினதில் அவ இறந்துட்டா."

சரி! ஹரிதா மாதிரி மொத்தம் எத்தனை பரிசோதனை எலிகள் பரசுராமோட ட்ரஸ்ட் கட்டடத்துல இருந்தது...?"

ரெண்டு...! மூணாவதா யாழினின்னு ஒரு பொண்ணு பரசுராம்கிட்டே வந்து வலிய மாட்டினாள்."

அந்த மூணு பேரின் மேலும் பரிசோதனைகளை நடத்தினீங்களா?"

இல்லை..."

ஏன் நடத்தலை...?"

யாழினி விஷயத்தில் போலீசாருக்கு சந்தேகம் வந்துட்டதால மூணு பெண்களையும் பரசுராமுக்கு சொந்தமான படப்பையில் இருக்கிற பண்ணை வீட்டுக்கு கொண்டு போயிட்டோம்...!"

அப்படின்னா... அந்தப் பெண்கள் மூணு பேரும் இப்போ அந்தப் படப்பை பண்ணை வீட்லதான் இருக்காங்களா?"

இல்லை... அந்தப் பெண்கள் மூணு பேரையும், பண்ணை வீட்டு வாட்ச்மேன் ஈஸ்வரையும் யாரோ கடத்திட்டு போயிட்டாங்க. ஈஸ்வரையும் கொன்னுட்டாங்க...!"

கடத்தினது யாரு?"

தெரியலை...! ஃபோன் பண்ணி மிரட்டினான். மொதல்ல பணம் டிமாண்ட் பண்ணினான். அப்புறம் பணம் வேண்டாம்னு எங்க உயிர்களுக்கு குறி வெச்சான் முதல் ஆளாய் பரசுராமை தீர்த்துக் கட்டிட்டான்."

அவன் யாரு?"

தெரியலை..."

சரி...! அவன் யாராகவோ இருந்துட்டுப் போகட்டும்... அது உங்களுக்குண்டான கவலை. எனக்கு இப்ப வேண்டியெதல்லாம் ‘பூவில் செய்த ஆயுதம்’ ப்ராஜெக்ட் சம்பந்தப்பட்ட விஷயங்கள். அந்த ப்ராஜெக்ட் என்ன கான்செப்ட்?"

அது வந்து...!"

இதோ பாருங்க டாக்டர்... உயிர் மேல ஆசை இருந்தா உண்மையைச் சொல்லுங்க. அது என்ன 'பூவில் செய்த ஆயுதம்?"

டாக்டர் உத்தண்டராமன் உலர்ந்து போன தன்னுடைய உதடுகளை நாக்கால் வருடி ஈரப்படுத்திக் கொண்டு மெல்லிய குரலில் பேச ஆரம்பித்தார். அது மருத்துவ விஞ்ஞானத்தில் ஒரு வகையான ஸ்டெம் செல் டெக்னாலஜி. இந்த டெக்னாலஜியைப் பயன்படுத்தி இயற்கையான முறையில் கரு முட்டைகளையும், எம்பிரீயோக்களையும் தயாரிக்க சாத்தியம் உள்ள ப்ராஜெக்ட்தான் 'பூவில் செய்த ஆயுதம்' நடைமுறையில் இருக்கிற ஓவம் டொனேஷன் 'எம்பிரியோ டொனேஷன் போன்றவைகளில் எத்தனையோ முறைகேடுகள் மோசடிகள். இந்த மோசடிகளையும் தடுக்கவும், ஆரோக்கியமான முறையில் உருவாக்கப்பட்ட 'ஓவம் மற்றும் எம்பிரியோ' பெண்களோட கருத்தரிப்புக்கு உதவும் வகையில் இருக்க வேண்டுமென்பதற்காகவே யு.எஸ்.ஸில் இருக்கும் பயோமெடிக்கல் ஃப்யூச்சர் சயின்ஸ் சேம்பர்ஸுடன் நாங்கள் ஒப்பந்தம் செய்துக் கொண்டு இந்த ஸ்டெம் செல் டெக்னாலஜியை இங்கே ஆரம்பித்தோம்."

நாங்கள் என்றால் யார் யார்?"

கோதண்டம், அட்சய்,பரசுராம், நான்..."

யு.எஸ். சைடுல யார் பார்ட்னர்ஸ்?"

டாக்டர் கெப்ளர், அப்புறம் ரிசர்ச் ஸ்காலர் காரல் மேத்யூ...! இந்த ப்ராஜெக்ட்டுக்காக 100 கோடி ரூபாய் செலவழிக்கப்பட்டது. தரமணியிலும் படப்பையிலும் இதுக்காக ரெண்டு பண்ணை வீடுகள் கட்டப்பட்டு மாடர்ன் ஆய்வு கூடங்களும் அமைக்கப்பட்டன. இது ஒரு நல்ல ப்ராஜெக்ட் சரியான திசையில் பயணப்பட்டிருந்தால் இன்றைய மருத்துவ உலகத்துக்கு ஒரு பெரிய வரப்பிரசாதமாய் அமைந்திருக்கும். ஆனால்..."

யு.எஸ்.ஸின் டாக்டர் கெப்ளரும், ரிசர்ச் ஸ்காலர் காரல் மேத்யூவும் என்னைத் தனிப்பட்ட முறையில் தொடர்பு கொண்டு ஸ்டெம் செல் டெக்னாலஜியை வைத்து வேறுமாதிரியான ஆய்வுகளையும் செய்யச் சொன்னார்கள்."

வேறு மாதிரின்னா?"

பெண்களின் கருத்தரிப்புக்குத் தேவையான ஓவம் மற்றும் எம்பிரியோக்களை ஸ்டெம் செல் தொழில் நுட்பத்தில் தயாரிக்க முடிகிற போது, திடீர் மரணத்தை உருவாக்கும் இதய வியாதிகளுக்கு தீர்வாக ஸ்டெம் செல்களை வளர்த்து ஏன் ஓர் இதயத்தை உருவாக்கக்கூடாது என்றும், அதேபோல மனிதனின் பார்வைக் குறைபாட்டுக்கு காரணமான விழி வெண்படலம் என்கிற கார்னி யாவையும் உருவாக்கலாமே என்றும் என்னிடம் சொல்லப்பட்டது. அதற்கு நான் அது மாதிரியான ஆராய்ச்சிகளை மேற்கொண்டால் உயிரிழப்புகள் நிறைய இருக்குமென்றுச் சொன்னேன். பிறகு அவர்கள் தருவதாகச் சொன்ன ஒரு பெரிய தொகைக்கு ஆசைப்பட்டு ஒப்புக் கொண்டு ஒரு மில்லி மீட்டர் தடிமனே கொண்ட மிகச்சிறிய இதயம் ஒன்றை உருவாக்கினேன். அது நிமிடத்துக்கு 30 துடிப்புகள் துடித்தது.

இந்த சிறிய இதயத்தைத் தயாரிக்க ஹரிதா உயிரோடு இருந்தபோது அவளுடைய இதயத் தசையில் இருந்து சில அபூர்வ செல்களைப் பிரித்து எடுத்தேன். இது மாதிரியான சிறு இதயங்கள் இயற்கையான ஏற்கெனவே உள்ள இதயத்தோடு இணைத்து செயலாற்றி மனிதர்களுக்கு வரும் திடீர் மாரடைப்புகளைத் தடுக்கும். ஆனால், இது மாதிரியான சோதனைகளுக்கு 'வொர்ல்ட் ஹெல்த் கவுன்சில்' தடை விதித்துள்ளது."

ஸோ... இது ஒரு சட்ட விரோதமான ஆராய்ச்சி?"

ஆமாம்!"

நீங்கள் இப்படி ஒரு சட்ட விரோத ஆராய்ச்சி செய்தது கோதண்டம், அட்சய், பரசுராம் இந்த மூணு பேருக்கும் தெரியுமா?"

தெரியாது..."

இப்போ நீங்க சொன்னதெல்லாம் உண்மை தானே... பொய்க்கலப்பு இல்லையே?"

இல்லை..."

இந்த ‘பூவில் செய்த ஆயுதம்’ ப்ராஜெக்ட்டுக்காக இது வரையிலும் எத்தனை பெண்கள் பரிசோதனை எலிகளாய் மாறி உயிரை விட்டிருப்பாங்க...?"

ஹரிதாவையும் சேர்த்து ரெண்டு பேர்...!"

அந்தப் பெண்களோட குடும்பத்தைப் பத்தி என்னிக்காவது நினைச்சு வருத்தப்பட்டதுண்டா... டாக்டர்...?"

உத்தண்டராமன் மௌனமாய் இருந்தார். தொடர்ந்து அவனே பேசினான். உங்களுக்கு என்ன தண்டனை கொடுக்கலாம்... சொல்லுங்க!"

நீ என்னை மன்னிச்சு விட்டா... இனிமே நான் ஒரு நல்ல டாக்டராய் என்னுடைய பணியைத் தொடர்வேன்...!" மன்னிக்கிறதும், மன்னிக்காம போறதும் உன்னோட விருப்பம்.

நீங்க பண்ணின குற்றத்துக்கு பிராயச்சித்தம் பண்ணவேண்டாமா?"

பேச்சு மாறமாட்டீங்களே?"

மாட்டேன்!"

உத்தண்டராமன் தலையசைத்த விநாடி- வெளியேயிருந்து - வீட்டுக்குள் அந்த அழைப்பு மணி பலஹீனமாய் ஒலித்தது. பின்னால் நின்றிருந்த உருவம் சட்டென்று பின்வாங்கி நகர்ந்தது.

அறையில் பரவியிருந்த இருட்டில் நிதானமாய் நடந்து வாசல் கதவை நோக்கிப் போயிற்று. சாத்தப் பட்டிருந்த கதவின் தாழ்ப்பாள் மேல் கையை வைத்து விலக்கியது.

கதவு விரிய...வாசற்படிகளில் அட்சய் நின்றிருந்தான். உதட்டில் ஒரு சின்னப் புன்னகை ஒட்டியிருக்க கேட்டான்.

என்ன... ஈஸ்வர்! டாக்டர் உத்தண்டராமன் எல்லா உண்மைகளையும் சொல்லிட்டாரா?"



அட்சயைப் பார்த்ததும் ஈஸ்வரின் உதடுகளில் அவசர அவசரமாய் ஒரு புன்னகை அரும்பியது. குரலைத் தாழ்த்தினான்.

கிட்டத்தட்ட எல்லா உண்மைகளையும் சொல்லிட்டார் ஸார்."

அட்சயும் குரலைத் தாழ்த்தினான்.

முரண்டு பிடிக்கலையே?"

முரண்டு பிடிக்கலை...! ஆனா நான் கேட்ட முதல் கேள்விக்கே பொய் சொன்னார். நான் உடனே இன்னொரு தடவை பொய் பேசினா உங்களைத் துண்டு துண்டாய் வெட்டி ஆயிரம் அடி ஆழ்குழாய் கிணற்றுக் குள்ளே போட்டுடுவேன்னு சொல்லவும் பயந்துட்டார். அதுக்கப்புறம் கேட்டக் கேள்விகளுக்கெல்லாம் உயிர் பிழைக்கணுமே என்கிற ஆசையில் ஏதோ டி.வி.க்கு பேட்டி கொடுக்கிற மாதிரி பதில் சொல்ல ஆரம்பிச்சுட்டார். பேட்டியின் க்ளைமாக்ஸில் இருக்கும் போதுதான் நீங்க காலிங் பெல் கொடுத்தீங்க ஸார்!"

அவர் பேசினதையெல்லாம் ரெக்கார்ட் பண்ணிட்டியா ஈஸ்வர்?"

பண்ணிட்டேன் ஸார்!"

சரி! நீ போய் பேட்டியைக் கண்டினியூ பண்ணி பேச வேண்டியதைப் பேசிட்டு வா... நான் என்னோட ரூம்ல இருக்கேன்."

தலையாட்டிய ஈஸ்வர் தயக்கமாய் குறுக்கிட்டான்.

ஸ...ஸ...ஸார்...!"

என்ன?"

உங்க மேல யாருக்கும்... எந்த சந்தேகமும் வரலையே?"

நாம போட்ட திட்டம் எந்த குளறுபடியில்லாமே துல்லியமாய் இருக்கும்போது யாருக்கு சந்தேகம் வரும்...?"

ஸார்! உங்களை நினைக்கும்போது எனக்கும் ரொம்பவும் பெருமையாய் இருக்கு!"

அட்சய் சிரித்தான்.

ஈஸ்வர்! பாராட்டு விழாவையெல்லாம் அப்புறமாய் வெச்சுக்கலாம். மொதல்ல டாக்டர்கிட்டே பேச வேண்டிய விஷயத்தையெல்லாம் பேசிட்டு வா. எந்தக் காரணத்தை முன்னிட்டும் உன்னோட முகத்தைக் காட்டிடாதே... டாக்டர், என்னோட அப்பா இந்த ரெண்டு பேருக்கும் நீ செத்துப் போனவன். அதாவது டெவில் சர்ச்சில் உன்னைக் கொலையுண்ட கோலத்தில் பார்த்தவர்கள்."

அது எனக்குத் தெரியாதா ஸார்...? நீங்க கொடுத்த ஊசியை அவருக்குப் போட்டதன் விளைவாய், கழுத்தைத் திருப்ப முடியாத நிலைமையில் ஒரு மரக்கட்டை மாதிரி கிடக்கும் அவரால் என்னைத் திரும்பிக் கூட பார்க்க முடியாது-"

எதுக்கும் எச்சரிக்கையோடு இரு. குரலை மாத்தித்தானே பேசறே...?"

ஆமா... ஸார்!"

சரி... நான் ரூம்ல இருக்கேன். பேசிட்டு வா. இனி நம்ம திட்டத்தோட அடுத்த கட்டத்துக்குப் போகணும்!" அட்சய் சொல்லிவிட்டு வீட்டின் வலதுபக்கம் இருந்த ஓர் அறையை நோக்கிப் போக, ஈஸ்வர் மறுபடியும் டாக்டர் உத்தண்டராமன் இருந்த அந்த அரையிருட்டான அறையில் நுழைந்து அவருக்குப் பின்னால் முகம் காட்டாமல் பேச்சைத் தொடர்ந்தான்.

டாக்டர்!"

ம்"

நாம் மேற்கொண்டு பேசலாம். பரசுராம் கூட சேர்ந்துகிட்டு நீங்க பண்ணின குற்றத்துக்கு சின்னதாய் ஒரு பிராயச்சித்தம் பண்ணனும்."

எ... எ... என்ன பண்ணனும்...?"

இன்னிக்கு இருக்கிற நிலவரப்படி உங்க சொத்து மதிப்பு என்ன?"

அது... வந்து... வந்து!"

ஒரு இருபது கோடி தேறுமா?"

எதுக்கு கேட்கிறே?"

கேட்டக் கேள்விக்கு பதில்?"

ஒரு பத்து கோடி தேறும்"

அதுல ஒரு பாதியை அதாவது அஞ்சு கோடி ரூபாய் மதிப்புள்ள சொத்துக்களை தமிழ்நாட்டில் இருக்கிற ஆதரவற்ற அனாதை விடுதிகளுக்கும் முதியோர் இல்லங்களுக்கும் எழுதி வைக்கணும்...!"

உத்தண்டராமன் மௌனம் சாதித்தார். ஈஸ்வர் தன் கையில் இருந்த பிஸ்டலை அவருடைய வழுக்கைத் தலையின் மையத்தில் வைத்தான்.

என்ன பேச்சையே காணோம்?"

என்னோட மனைவி காரணம் கேட்பாளே?"

ஒரு வேண்டுதல்னு சொல்லுங்க... நீ தாலி யுடன் பூவும் பொட்டுமாய் இருக்கணும்னா நான் இந்த தர்ம காரியத்தைப் பண்ணியாகனும்னு சொல்லுங்க. யார் அப்படிச் சொன்னதுனு கேட்டா, வைத்தீஸ்வரன் கோயிலுக்குப் போய் நாடி ஜோஸியம் பார்த்ததாய் சொல்லுங்க. ஒரு பொண்ணுக்கு புருஷனைவிட சொத்தா முக்கியம்...? நீங்க இப்படி ஒரு பிராயச்சித்தம் பண்ண ஒத்துகிட்டாத்தான் உயிரோடு வீட்டுக்குப் போக முடியும். இல்லேன்னா நாளைக்கு காலையில் ஃப்ரீஸர் பாக்சுக்குள்ளே நீங்க நிரந்தரமாய் தூங்க, மலர் வளையங்கள் வரிசையாய் வந்துகிட்டு இருக்கும்..."

வே... வே... வேண்டாம்... நான் எழுதி வெச்சுடறேன்!"

டாக்டர்...! நீங்க இங்கே சரின்னு தலை யாட்டிட்டு உயிரோடு வீட்டுக்குப் போன பின்னாடி பிராயச்சித்தம் பண்ணாமே இருந்தா மறுபடியும் இந்த இடத்துக்கு வந்து இதே கோலத்தில் படுக்க வேண்டிய நிலைமை வரும். எனக்கு ஒரு தடவை மன்னிச்சுத்தான் பழக்கம். ரெண்டாவது தடவை மன்னிப்புக் கிடையாது தண்டனைதான்..."

இல்லை... நிச்சயமாய் பண்ணிடறேன்!"

ஒரு மாதத்துக்குள்ளே பண்ணி முடிக்கணும். இன்னிக்குத் தேதி அஞ்சு. அடுத்த மாதம் அஞ்சாம் தேதிக்குள்ளே அஞ்சு கோடி ரூபாய் மதிப்புள்ள சொத்துக்கள் அனாதை இல்லங்களுக்கும் முதியோர் இல்லங்களுக்கும் போய்ச் சேரணும்."

கண்டிப்பாய் சேரும்..."

நம்பறேன்...! நாளைக்குக் காலையில் நாலு மணிக்கு விடுதலை. உடம்பில் இருக்கிற ஊசி மருந்தோட வீரியம் குறைஞ்சு நீங்க இயல்பான ஆரோக்கியத்தோடு இருப்பீங்க. உங்க கண்களை கறுப்புத் துணியால கட்டி இங்கிருந்து ஒரு மணி நேரப் பயணம். பெசன்ட் நகர் பீச்ல உங்களை இறக்கிவிட்டு நான் கார்ல பறந்துடுவேன். அஞ்சு நிமிஷம் கழிச்சுத்தான் நீங்க கண்கட்டை அவிழ்க்கணும். அதுக்கப்புறம் ஒரு ஆட்டோவையோ டாக்ஸியையோ பிடிச்சுட்டு வீட்டுக்குப் போகணும். இங்கே நடந்த விஷயங்களை போலீசுக்கு கொண்டு போனாலோ, அல்லது வேற யார்கிட்டயாவது சொன்னாலோ பிரச்னை உங்களுக்குத்தான்...!"

அது எனக்குத் தெரியும்!"

இந்த புத்திசாலித்தனம் எப்பவும் இருக்கட்டும்."

ஈஸ்வர் அந்த அறையினின்றும் வெளிப்பட்டு கதவைச் சாத்தித் தாழிட்டுக் கொண்டபின் அட்சய் இருந்த அறைக்குள் நுழைந்தான். லேப்-டாப்பில் கவனமாய் இருந்த அட்சய் தலை நிமிராமல் கேட்டான்.

என்ன ஈஸ்வர்! டாக்டர் பிராயச்சித்தம் பண்ண ஒத்துக்கிட்டாரா?"

ஒத்துக்கிட்டார் ஸார்... ஆனால் அவர் உயிரோடு வெளியே போன பின்னாடி சொன்னபடி நடந்துக்குவாரான்னு தெரியலை..."

கண்டிப்பாய் சொன்னபடி நடந்துக்குவார். ஏன்னா டாக்டரைப் பத்தி எனக்குத் தெரியும். உயிருக்கு பயந்தவர். அதுவுமில்லாமே அந்த அஞ்சு கோடி ரூபாய்ங்கிறது அவருக்கு ஒரு பெரிய தொகையில்லை. நம்ம கோர்ட்ல அவருக்குப் போட்ட அந்த அபராதத் தொகையைக் கண்டிப்பாய்க் கட்டிடுவார்... நாளைக்கு எர்லி மார்னிங் நாலு மணிக்கெல்லாம் அவரோட கண்களைக் கறுப்புத்துணியால் கட்டி கார்ல கொண்டு போய் பெசன்ட் நகர் பீச்ல விட்டுடு... எந்தக் காரணத்தை முன்னிட்டும் டாக்டர் உன்னையோ இந்த இடத்தையோ அடையாளம் கண்டுபிடிச்சுடக் கூடாது."

அதையெல்லாம் நான் பார்த்துக்கிறேன் ஸார்."

அட்சய் பார்த்துக் கொண்டிருந்த லேப்- டாப்பை அனைத்து விட்டு ஈஸ்வரிடம் திரும்பினான்.

ஈஸ்வர்! நாம இப்போ சந்திச்சு பேசிட்டிருக்கிற இந்த ராத்திரிதான் உனக்கும் கடைசி ராத்திரி. அந்த ப்ரீப்கேஸ் அம்பது லட்ச ரூபாய் இருக்கு... ஆந்திராவில் இருக்கிற ஏதோ ஒரு கிராமம்தான் உன்னோட சொந்த ஊர்னு சொன்னே! அங்கே போய் ஏதாவது ஒரு தொழில் பண்ணி முன்னுக்கு வா. ‘பூவில் செய்த ஆயுதம்!' என்கிற இந்த விபரீத விஞ்ஞான செடியை அது முளைச்சு மூணு இலை விடறதுக்கு முந்தியே அதைக் கிள்ளி எறிய, நீ எனக்குக் கொடுத்த ஒத்துழைப்பை மறக்கவே முடியாது. குறிப்பா படப்பை பண்ணை வீட்ல கையில ரிமோட் கண்ட்ரோலை வெச்சுக்கிட்டு வீட்டுக்குள்ளே நீ குடுத்த அந்த சவுண்ட் எபெக்ட்ஸ் டாக்டர் உத்தண்டராமனை நடுநடுங்க வெச்சதை நான் பார்த்து ரசிச்சேன். நாய் ரோஜரைத் தீர்த்துக் கட்டினதுதான் மனசுக்கு கொஞ்சம் கஷ்டமாய் இருந்தது."

இல்ல சார்... நாய் ரோஜரை நாம தீர்த்துக் கட்டினதுல எந்தத் தப்பும் இல்லை. ஏன்னா ரோஜர் கொஞ்ச நாளாவே சரியில்லை. என்னையே ரெண்டு தடவை கடிக்க வந்தது. அதுக்கு வெறி பிடிக்கிற ஸ்டேஜ். அதனாலதான் அதைத் தீர்த்துக் கட்டறதுக்கு டாக்டர் பண்ணை வீட்டுக்கு வந்தப்ப முடிவு பண்ணினேன்.

அட்சய் எழுந்தான்.

ஓ.கே... ஈஸ்வர்...! நான் புறப்படறேன். டாக்டர் ஸ்ரீ ஹரி எனக்கு ரெண்டுதடவை ஃபோன் பண்ணிட்டார். நான் அங்கே போய் நம்ம திட்டத்தோட இறுதிக் கட்டத்தை நிறைவு செய்யணும். நீ இங்கே எல்லா வேலைகளையும் முடிச்சுட்டு கார் சாவியையும் வீட்டுச் சாவியையும் முன்னாடி இருக்கிற ரோஜாத் தொட்டிக்குக் கீழே வெச்சுட்டு போயிடு...!"

சரி....ஸார்!" ஈஸ்வர் கையெடுத்து கும்பிட்டு கண்ணீரோடு தலையாட்ட, அட்சய் அவனுடைய முதுகைத் தட்டிக் கொடுத்துவிட்டு வீட்டை விட்டு வெளியேறி ஃபோர்டிகோவில் நின்றிருந்த காரில் ஏறிக் கொண்டான்.

சென்னையின் ஒரகடம் பகுதி.

ஜனசந்தடியும், போக்குவரத்தும் இல்லாத அந்த கிளைச்சாலையின் கோடியில் ஸ்ரீ ஹரி மருத்துவ மனை நியான் விளக்கு எழுத்துக்களோடு ஐந்து மாடி உடம்போடு தெரிந்தது.

அட்சய் காரை பார்க்கிங் செய்துவிட்டு யாரும் இல்லாத வரவேற்பறைக்குள் நுழையும் போதே டாக்டர் ஸ்ரீ ஹரி சின்னதாய் கோபப்பட்டார்.

என்ன அட்சய்...! ஒன்பது மணிக்கே வர்றதாய் சொன்னே! இப்போ மணி பத்து."

ஸாரி... டாக்டர்...! ஈஸ்வரைப் போய்ப் பார்த்து எல்லாவற்றையும் செட்டில்மெண்ட் பண்ண இவ்வளவு நேரமாச்சு...!"

யாழினியும் அந்த ரெண்டு பெண்களும் கடந்த ஒரு மணி நேரமாய் உனக்காக வெயிட் பண்ணிட்டு இருக்காங்க...!"

இதோ... இப்போ பேசிடுவோம்...!"

காத்திருந்த லிஃப்ட்டுக்குள் நுழைந்தார்கள். ஐந்தாவது மாடிக்கான பட்டனை அழுத்திக் கொண்டே அட்சய் கேட்டான்.

டாக்டர்! யாழினி மற்றும் அந்த ரெண்டு பெண்களோட ஹெல்த் இப்போ நார்மல்தானே?"

என்ன அட்சய்...! இப்படி கேட்கிறே...? யாழினியையும் அந்த ரெண்டு பெண்களையும் ஈஸ்வர் இங்கே கொண்டு வந்து அட்மிட் பண்ணின அடுத்த மூன்று மணி நேரத்துக்குள்ளேயே அவங்க சுய உணர்வுக்கு வந்துட்டாங்க. அதுக்குப் பிறகு நான் கொடுத்த ஸ்பீட் ரெக்கவரி ட்ரீட்மென்ட் காரணமாய் இயல்பான ஆரோக்கியமான நிலைமைக்குத் திரும்பிட்டாங்க... யாழினிகிட்டே உன்னைப் பத்தின எல்லா விவரங்களையும் சொல்லிட்டேன்."

அட்சய் மெல்ல புன்னகைத்தான்.

யாழினிகிட்டே என்ன ரியாக்ஷன் இருந்தது?"

மொதல்ல உன்னோட பேரைச் சொன்னதும் கோபப்பட்டாள். அவளையும் அந்த ரெண்டு பெண்களையும் காப்பாத்தி இங்கே ட்ரீட்மென்டுக்கு கொண்டு வந்து சேர்த்தது நீதான்னு சொன்னதும் ஆச்சர்யப்பட்டாள். அதுக்கப்புறம் 'பூவில் செய்த ஆயுதம்' என்கிற ஒரு விபரீதமான ப்ராஜெக்ட்டுக்கு முற்றுப்புள்ளி வைக்கிறதுக்காக நீ எடுத்துகிட்ட முயற்சிகளைப் பற்றி சொன்னதும் பிரமிச்சுப் போயிட்டா. இந்த நிமிஷம் உன்னைப் பார்க்கிறதுக்காக ஆவலாய் காத்திட்டிருக்கா... அதான் உனக்கு நான் ரெண்டு தடவை ஃபோன் பண்ணினேன்!"

லிஃப்ட் ஐந்தாவது மாடியைத் தொட்டது. வெளிப்பட்டு வரந்தாவில் நடந்தார்கள்.

டாக்டர்! இந்த மூணு பேருக்கும் ட்ரீட்மென்ட் கொடுத்தது உங்களைத் தவிர இந்த ஹாஸ்பிடல்ல வேற யாருக்கும் தெரியாதே?"

எனக்கும் ஒரே ஒரு நர்சுக்கும் மட்டும்தான் தெரியும். ஷி ஈஸ் ஏ ரிலையபிள் பர்சன். அந்த நர்ஸ் மூலமாய் விஷயம் வெளியே போகாது."

டாக்டர்! நீங்க என்னோட அப்பா ஃப்ரண்ட். இருந்தாலும் யாழினி விஷயத்துல நீங்க எனக்கு பண்ணின உதவியை நான் என்னிக்கும் மறக்கமாட்டேன்."

ஸ்ரீஹரி சிரித்தார். அட்சய்! உன்னோட அப்பாவுக்கு பணம் சம்பாதிக்கணும் என்கிற வெறி மட்டும் இல்லேன்னா அவரை மாதிரியான ஒரு நல்ல மனுஷனைப் பார்க்க முடியாது. இன்னிக்கு நீ அவரோட பணத்தாசைக்கு ஒரு முற்றுப்புள்ளி வெச்சிருக்கே. ஒரு விஞ்ஞான விபரீதத்தை விலைக்கு வாங்க முயற்சி பண்ணின குற்றத்துக்காக ஐம்பது கோடி ரூபாய் அபராதம். இனி உன்னோட அப்பா கோதண்டம் எல்லா விஷயங்களிலும் ஜாக்கிரதையாய் இருப்பார்!"

அந்த நீளமான வராந்தாவை ஒரு நிமிட நடையில் முடித்துக் கொண்டு அந்த அறைக்கு முன்பாய் வந்து நின்றார்கள்.

டாக்டர் கதவை மெல்லத் தட்ட அடுத்து பத்து விநாடிகளில் கதவு திறந்தது.

யாழினி பார்வைக்கு கிடைத்தாள். சில நாட் களுக்கு முன்னாள் டாக்டர் உமையாளின் வீட்டில் பார்த்த அதே யாழினி. கண்களில் மெலிதாய் ஒரு சோகம் தெரிந்தாலும் உதடுகளில் அதே 'பளிச்' புன்னகை. அவளுக்குப் பின்னால் சந்தோஷ முகங் களோடு அந்த ரெண்டு பெண்கள்.

யாழினி சொன்னாள்.

ரொம்பவும் நன்றி மிஸ்டர் அட்சய்"

எதுக்கு நன்றி?"

அன்னிக்கு நீங்க என்னோட பார்வைக்கு வில்லன். பட் இன்னிக்கு ஹீரோ மாதிரி தெரியறீங்க. ஒரு விஞ்ஞான விபரீதத்தை அஹிம்ஸா முறையில் போராடி அதில் வெற்றியும் பெற்றிருக்கீங்க...! என்ன அப்படி பார்க்கறீங்க அட்சய். டாக்டர் ஸ்ரீஹரி 'பூவில் செய்த ஆயுதம்' சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களையும் என்கிட்டே சொல்லிட்டார். போலீசுக்கு விஷயத்தைக் கொண்டு போகாமே நீங்களே எல்லாருக்கும் கொடுக்க வேண்டிய தண்டனையைக் குடுத்துட்டீங்க."

இதுல ஒரே ஒரு திருத்தம் மிஸ் யாழினி?"

என்ன?"

பரசுராமுக்கு மட்டும் கடவுள் தண்டனை கொடுத்துட்டார். அன்னிக்கு ரெஸ்டாரெண்டில் அதிகமாய் உணர்ச்சிவசப்பட்டதன் விளைவு மாஸிவ் அட்டாக்."

சரி! எங்க மூணு பேருக்கும் எப்போ இங்கிருந்து விடுதலை?"

இன்னிக்கே இப்பவே...! ஆனா அதுக்கு முன்னாடி நீங்க மூணு பேரும் எனக்கு ஒரு உத்தரவாதம் தரணும்!"

என்ன உத்தரவாதம்...?"

உங்க மூணு பேரையும் பரசுராம்தான் பண்ணை வீட்ல அடைச்சு வெச்சிருந்தார் என்கிற உண்மையை எந்தக்காலத்திலும் யார்கிட்டேயும் சொல்லக் கூடாது..."

எனக்கு அது தெரியாதா என்ன?" யாழினி சொல்ல மற்ற இரண்டு பெண்களையும் என்ன என்பது போல் பார்த்தாள் அட்சய்.

அவர்கள் இருவரும் முன்னால் வந்தார்கள்.

ஸார்! எங்களுக்கு அப்பா அம்மா கிடையாது! பாளையங்கோட்டையில் ஒரு அனாதை பெண்கள் விடுதியில் நாங்க ரெண்டு பேரும் இருந்தோம்.

சினிமாவில் நடிக்கணும் என்கிற ஆசையில் சென்னைக்குப் புறப்பட்டு வந்து பரசுராம் அங்கிள் கிட்டே மாட்டிக்கிட்டோம். இனிமே நாங்க திரும்பவும் அந்த அனாதை விடுதிக்குப் போகமுடியாது. இதே சென்னையில் ஏதாவது ஒரு விடுதியில் எங்களை நீங்கள்தான் சேர்த்து விடணும்."

அந்தப் பொறுப்பு என்னுடையது" என்றாள் யாழினி.

இனி ஒரே ஒரு விஷயம்தான் பாக்கியிருக்கு!" என்றான் அட்சய்.

என்ன?"

நகுலுக்கு விஷயத்தை தெரியப்படுத்தணும்."

டாக்டர் ஸ்ரீ ஹரி சிரித்தார். அரைமணி நேரத்துக்கு முன்னாடிதான் என்னோட செல்ஃபோன் மூலமா நகுலுக்குப் ஃபோன் பண்ணி யாழினியைப் பேச வைச்சேன்... நகுலும் இப்போ வந்திட்டிருப்பார்."

அதுவும் முடிஞ்சுதா...? இருந்தாலும் இன்னொரு விஷயம் மிச்சமிருக்கு டாக்டர்."

என்ன?"

நகுல் யாழினியோட ஃபோட்டோவை என்கிட்ட காட்டியபோது நான் யாழினியைத் தெரியாதது போல் காட்டிக்கிட்டேன். அதுக்காக நான் அவன்கிட்டே மன்னிப்புக் கேட்கணும்!"

மன்னிச்சுட்டேன்!"

அறைக்கதவருகே குரல் கேட்டு எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள்.

மார்புக்கு குறுக்காக கைகளைக் கட்டியபடி உதட்டில் உறைந்து போன புன்னகையோடு நகுல் நின்றிருந்தான்.

**(முற்றும்)**